|| ஸ்ரீ: ||

# || दयाशतकम् ||

# தயாசதகம்

(ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன் அருளிச் செய்தது.)

மதத்ரயஸாரஸ்வாதீ, மீமாம்ஸாரத்னம்

ஸ்ரீ உ. வே. A. V. கோபாலாசார்யஸ்வாமி M. A., B. L.,

எழுதிய தமிழ் பதவுரை, பொழிப்புரை, விரிவுரைகளுடன் கூடியது.

மூன்றும் பதிப்பு

(அநேக புதிய விஷயங்கள் சேர்க்கப்பட்டது)

வாணீ விலாஸ் பிரஸ்,
ஸ்ரீரங்கம்.

1971

விலை. ரூ. 2/-

# FOREWORD

*(to the Second Edition)*

The wonderful charms of poetic and spiritual grandeur in this Stotram on Divine Grace may be counted by hundreds and thousands शतगुणितशत Śataguniṭśata – hundred multiplied by hundred – as we find in the Ānanda Valli of the Tittiri bird song of Mokṣa Ānanda multiplication by hundreds in the case of giving an idea of the well heard of Infinite Brahmānandam. Portia's pathetic appeal to the unrelenting Shylock is an echo of the lovely descriptions of the unstrainedness and spontaneity of the quality of mercy, 'Daya' in this Śatakam.

जलधेरिव शीतता दये त्वं वृषशैलाधिपतेस्स्वभावभूता ।
प्रलयारभटीनटीं तदीक्षां प्रसभं ग्राहयसि प्रसत्तिलास्यम् ॥

This is sloka 23, which pictures Lady Dayā as an actresss clever in both devil-dances – thāndava narthanam – and mild elegant soft-dances – lāsya narthanam – beginning with the ghastly tāndava nartana like Kali's destroying the Cosmos at Deluge time in seemingly most angry and fierce moods, afterwards quietly setting down into the most gentle lāsya form, and beginning the creation and evolution of the Cosmos in the Universe-redemptive-Dayā-spirit. This extraordinary quick transformation from the most fiercely destructive mood to a most gentle constructive mood is the magic achievement of Dayā Devi, who, by beginning the creation is constructing a new Cosmos for Her children to begin their Soul's life with new vigour and enthusiasm. This is the meaning of the latter half of sloka 23. Dayā is Lord Veṅkateśa's ingrained and inherent nature as coolness is the perpetual property of the ocean waters in lower depths.

The Tirupati-Tirumalai Devasthanam has published first in its bulletins and then now in book form an elaborate commentary on 'Dayāśatakam', which brings out many of the

charms about the grandeur of the Hill-Lord's Dayā, is in many parts a reproduction of the Sanskrit and Tamil commentaries on this great Śatakam Stotra written by this humble author. I must acknowledge to Koliyālam Śatagopachāriar, the learned author of these bulletins, who is a double Siromani Sanskrit professor at Tirupati College and Oriental Institute who under auspices of the Tirupathi Devasthanam and Colleges has done this incalculable service to the spread of the ideas in my Sanskrit and Tamil commentaries by his own initiative. The eminent Tirupathi Sanskrit Pandit, friends of mine have been during the past thirty years, reading with avidity my commentaries on Deśika stotras taking to them very kindly. Professor D.Tirumala Tātāchāriar, now at Brindāban in the service of Tirupathi Venkateśwara, charged with the duty of popularising Sri Venkateśwara's Mahimā, was in the Sanskrit College at Tiruvayar and he was editing my Sanskrit Dayāśatakam commentary as the Proprietor of the Srinivasa Press at Tiruvayar. The book was critically examined by him and other great scholars at Tiruvayar and Kumbakonam including the late Mahāmahopādyāya R. V. Krishnamāchariar of Kumbakonam College, who all generously treated my book as their own and published it making corrections freely in the proofs with my full approval.

I must also convey my thanks to Koliyālam Ranganāthachāriar who has been writing my numerous Sanskrit and Tamil books for me for over a decade. He is the younger brother of the said Śatagopāchāriar of Tirupathi.

I must thank also the Pandits at Sri Vani Vilas Press and Sankara Gurukulam, Srirangam, for their unstinted co-operation in revising and editing this book and bringing it out within a short period.

I appeal to the Dayā of the readers for generosity in criticism having regard to my age with ever so many infirmities and troubles. I would repeat the prayer of Deśikar in the last śloka (108). This would apply to my humble self also and this commentary. The prayer there and in ślokas 31, 40 and 41 is

Dayā Devi should in Her infinite Grace' drown the hostile critic's voice in the boisterous and stupendous noise from waterfalls like Pāpavināśam and Ākāśaganga wnich are intended to destroy the Pāpam of the world by bathing under the torrential flow from Lord Srinivāsa standing in the centre and top of the Hill and showing with His right hand His Gaṅga Utpatti Feet fertilising and purifying the minds and bodies of India and Indians, nay, of the entire cosmos itself called Kshetram and Kshetragña by the Lord in chapter XVI of the Gīta The first śloka of the Gīta chapter XVI known as the Kshetragña Adhyāya defining and expounding the terms Kshetra and Kshetragña, must be read in this connection to understand fully the meaning of my winding up appeal to the readers.

Gopāla Dāsa,
**A. V. Gopalachariar.**

ஸ்ரீ:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# இரண்டாவது பதிப்பின்
# ப்ரஸ்தாவனை
## (ஸ்ரீநிவாஸ தயா சதகம்)

ஸ்ரீநிவாஸனை அறியாதவர் இல்லை. தயை என்னும் குணத்தை அபேக்ஷியாதவரும் அதன் ரஸத்தை அறியாதவரும் இல்லை. ஸ்ரீ தேசிகனுடைய இந்த தயா சதகத்தைப் பற்றிக் கேளாதவரும் கொஞ்சமேனும் அறியாதவரும் துர்லபம். இந்த சதகத்தின் அமைப்புகளையும் ப்ரஹ்மரஸ காவ்ய ரஸகனத் தன்மையையும் அத்புதமான பல ஔசித்யங்களையும் 1930ம் வருஷத்தில் தாஸன் எழுதி அச்சிட்டு பிரசுரித்த விஸ்தார ஸம்ஸ்க்ருத வ்யாக்யானத்தின் பூமிகையிலும் ப்ரதமச்லோக வ்யாக்யானத்திலும் கண்டு கொள்வது. இந்த க்ரந்தத்தில் அவற்றுள் சிலவே காட்டப் பட்டுள்ளது.

ஜீவன் செய்த அநந்த அபராதங்களை மன்னித்து, அவனை ஸம்ஸார மண்டலத்தைத் தாண்டுவித்துத் தன்னோடு அநேக அம்சங்களில் ஸமானன் போலாக்கி, நித்யமும் ஆநந்த கனமுமான நிர்துண முக்திபர்யந்தம் சில வ்யுத்தான ஸமயங்களில் அனுத்யக்ஞானத்தால் ஆயாஸமாய்த் தோற்றும் ப்ரமமும் ஆநந்த பாரவச்யத்தால் மறந்திருப்பதுபோல் த்வைதிகள்கொள்ளும் தாத்விகமான ப்ருதக்த்வத்தின் ஸ்பூர்த்தி மங்கினலும் உயிரான சேஷத்வத்தின் த்ருட நினைப்பிற்கு ப்ரச்யுதியில்லாமல் இவனுக்கு நித்யமான கைங்கர்ய ருசியை மேலும் மேலும் பல பர்வங்களாய்ப் பெருக்கிக்கொண்டு நித்யமாய் இவனுக்கு அனுக்ரஹிக்கச் செய்வது ஸ்ரீநிவாஸன் தயையே.

'ஸ்ரீநிவாஸ தயாம்போதி பரீவாஹம்' என்று 2-ம் ச்லோகத்தில் தொடங்கி 'தீநாலம்பந திவ்ய தம்பதி தயா

கல்லோல கோலாஹலः' என்று கடைசி ச்லோகத்தில் ஆகதிப் பேதைகளுக்கு ஒரே ஆலம்பனமான ஸ்ரீநிவாஸன் என்கிற ஒரே திருநாமத்திலேயே பிரிக்கமுடியாமல் ஏகமாய் குறிக்கப்பட்ட ஈச்வர தம்பதிகளின் தயா கல்லோல கோலாஹலத்துடன் அதிஸாரபயமாய் மற்றெல்லா சப்தங்களையும் அடக்கிக் காதில் விழாமல் செய்யும் என்று உத்கோஷித்து முடிக்கும் அழகு ரஸிகர் மனத்தைக் கவரும்.

ஸம்ஸ்க்ருத வ்யாக்யானத்திலும் இந்தத் தமிழ் உரையிலும் விஸ்தரித்திருக்கும் ரஸங்களை இந்த க்ரந்தங்களைக் கடாக்ஷித்து அனுபவிக்கவேணும். அநேக உபநிஷத் இதிஹாஸ புராணாதி ஆர்ஷக்ரந்தங்கள் மட்டுமல்லாமல் மஹா கவிகளின் அநேக ஸாரிஷ்ட உக்திகளையும் உட்கொண்டு இருப்பதை விஸ்தாரமாய்க் காட்டியுளது.

சரணாகதியின் ப்ரபாவத்தை ஹ்ருதயங்கமமாய் ஸர்வலோக ரஞ்ஜகமாய்க் காட்டி 'அது காப்பாற்றியே தீரும். இதில் சங்கை வேண்டாம்' என்று ஸகல சங்கைகளும் அறும்படி உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்குவதை இந்த சதகம் 'ஸதம்புகதகம்' என்று ஓர் அத்புத அதிசாரு ரஸகனபதஸமபிவ்யாஹாரத்தினால் வ்யஞ்ஜனம் செய்கிறார். ஸசேதஸ்ஸுகளும் ஸஹ்ருதயருமாய் க்ஷேத்ரேனும் ரஸநாடி சூந்யராயில்லாமல் க்ஷேத்ராவது ரஸவச்யராயிருக்க வேண்டும் என்னும் தம் அபேக்ஷையைக்கூறி ஸதம்பு என்று சோதக வித்வத்படிதாவைக் குறிக்கிறார். துளியேனும் ரஸஜலம் ஹ்ருதயத்தில் உளதாகில் அது போதும் 'ரமணீயம் ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்யமனோ யதா' என்று ஆதிகாவ்ய ஆரம்பத்தில் உளதை இங்கே முடிவில் ஸ்மாரணம் செய்து சதகம் முழுவதும் ஆமூலாக்ரம் ஒரே சதகமாயிருந்து நம்முடைய மனதில் இந்தத் தயையின் ப்ரபாவத்தைப்பற்றி உதிக்கும் சங்கா களங்கங்களையெல்லாம் தெளியும்படி செய்யும் என்று ஸூசிக்கும் அழகு மிகவும் ரஸ்யம்.

कणशोऽपि अम्बु अस्ति चेत् स्यात् संभवः कतकस्य शोधक-व्यापारस्य । नो चेत् तत्प्रसक्तेरेव न संभव इति भावः ।

கொஞ்சமாவது ஜலம் இருந்தால்தான் கதகம் தன்னுடைய சோதந வியாபாரத்தை செய்யமுடியும். ஜலமில்லாது வெறும் சேராயிருந்தால் அங்கு கதகம் என்ன செய்ய முடியும்?

இதன் முன் பதிப்புப் புஸ்தகங்கள் அச்சிட்டவுடனேயே செலவழிந்து விட்டன. இரண்டாம் பதிப்பை தேசமெங்கும் அநேகப் பெரியோர்கள் கடிதங்கள் மூலமாயும் நேரிலும் அபேக்ஷித்துவந்தது தாஸனுடைய 85-ம் பிராயம் பூர்த்தி அடைந்த இப்பொழுதுதான் 'பூர்ண: பூரயிதா புண்ய:' என்று வர்ணிக்கப்பட்ட ஸ்ரீநிவாஸனால் பூரணம் செய்யப் பட்ட ஔசித்யத்தை நினைந்து நினைந்து நெஞ்சம் உருகுகிறது. சேஷாயுஷ்யபி சேஷிதப்பதிதயா தீக்ஷையை ஆத்ம க்ஷேம விஷயத்தில்போல் இந்த க்ரந்த ப்ரசாரண விஷயத்திலும் ப்ரதீக்ஷை செய்துகொண்டேயிருந்தது இப்பொழுது பூர்த்தியாயிற்று.

எல்லாம் அவன் அருளே. அவன் செய்கையே. இனி யாதொரு குறைவன்றியிலும் பூர்ண ஹர்ஷத்தோடும் க்ருத க்ருத்யத்வ புத்தியோடும் மோக்ஷானந்த ப்ராப்தி காலத்தை 'யாவந் ந விமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே' என்று இன்பத்தோடு ப்ரதீக்ஷித்துக்கொண்டிருக்கலாம்.

இந்த க்ரந்தத்தை அச்சிட உத்தேசித்ததுமே செலவிற்கு வேண்டிய ஸம்விதானங்களையும் ஸ்ரீநிவாஸனே செய்து வைத்தான். 1957ம்-ஹு மார்ச்-மீ ஆரம்பித்து ஜூன்-மீ முடிந்தது.

கோகுலம்,
திருச்சிராப்பள்ளி,
கண்டோன்மெண்ட்,
13, ஜூலை 1957,
ஹேவிளம்பி,
ஆனி, திருவோணம்.

ஸர்வ ஆஸ்திக லோகதாஸன்,

அன்பில், வே. கோபாலாசார்யன்.

# விக்ஞாபனம்

பரமபூஜ்யர்களாயும் ஸர்வதா ஸவிநயம் ஸ்மரணீயர்களாயும் உள்ள அடியேனுடைய பித்ரு சரணரான ஸ்ரீ உ. வே. A. V. கோபாலாசார்ய ஸ்வாமியை அறியாத வித்வான் தக்ஷிண தேசத்தில் இல்லையென்றே சொல்லலாம். எல்லா ஸம்பிரதாய க்ரந்தங்களையும் வாசித்துத் தெரிந்துகொண்டதுடன் தனது ரஸிகத் தன்மையால் அந்தந்த ஸம்பிரதாயத்தில் உள்ள ஸாரத்தை கிரஹித்துக்கொண்டு மதத்ரய ஸாராஸ்வாதீ என்ற அன்வர்த்தமான பிருதமும் பெற்று எல்லோருடனும் மிகுந்த சிநேகபாவத்துடன் பழகிவந்த படியால் எல்லோரும் இவரிடம் மிகுந்த மதிப்புக் கொண்டிருந்தார்கள். எல்லா மடாதிபதிகளின் அனுக்ரஹத்திற்கும் பாத்திரமாகி விளங்கினார். அன்னார் ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும் ஆங்கிலத்திலும் பல நூல்கள் எழுதியுள்ளார். அவைகளெல்லாம் அநேகமாக அச்சிட்டுப் பிரசுரிக்கப்பட்டுள்ளன. அவற்றில் ஸ்ரீமத் வேதாந்ததேசிகன் அருளியுள்ள தயாசதகத்திற்கு ஸம்ஸ்க்ருதத்தில விரிவான வ்யாக்யானம் எழுதியதுடன் தமிழிலும உரை எழுதி வெளியிட்டார். பின்னால் உலக சிந்தைகளிலும் க்ரந்தங்கள் எழுதுவதில்கூட மனம் ஈடுபடாமல் ஸதா பகவத் ஸ்வரூபானந்தானுபவத்திலேயே ஈடுபட்டிருக்கும் தருணத்தில் பல அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்கி ஈசுவரப்ரேரணையால் தனக்குக் கர்தவ்ய சேஷம் இருப்பதாக எண்ணி 1957-ம் வருஷம் பல புதிய விசேஷாபிப்ராயங்களைச் சேர்த்து இதன் இரண்டாவது பதிப்பைத் தன் சரம வயதிலும் தானே ப்ரூப் திருத்தி அச்சிட்டு வெளியிட்டார். பிறகு க்ருதக்ருத்ய பாவத்துடன் ஆனந்தபூர்ணஹ்ருதயராக ஆத்மானந்தத்திலேயே லயித்திருந்தார். இந்த விபரத்தைத் தமது

ப்ரஸ்தாவனையில் காட்டியிருக்கிறார். பூர்வ ஸுக்ருத விசேஷங்களால் இந்நூல் வெளிவந்த சில நாட்களிலேயே அவருடைய பிரார்த்தனையின்படி பகவத் ஸாயுஜ்யம் கிடைத்தது. இது இவருடைய திவ்ய மஹிமாதிசயத்தை நன்கு எடுத்துககாட்டுகிறது.

இவர் எழுதிய பல நூல்கள் முழுவதும் செலவழிந்து விட்டபடியால் இப்பொழுது கிடைப்பதில்லை. இந்த நூல்களையெல்லாம் பல அன்பர்கள் ஆவலுடன் அபேக்ஷிக்கிறார்கள். ஆகையால் எல்லாவற்றையும் மறுபடியும் அச்சிடவேண்டியது அவசியம்.

இப்பொழுது இந்த தயாசதகத்தின் மூன்றாவது பதிப்பு முதலில் வெளியிடப்படுகிறது. அன்னாருடைய புத்திரனாகப் பிறந்தும் லௌகிக வித்யையிலும் லௌகிக ப்ரவ்ருத்தியிலும் ஈடுபட்டு சாஸ்திர பரிசயம் சிறிதும் பெறாத எனக்கு, முழு பொறுப்பையும் ஏற்றுக்கொண்டு மிகச் சிறந்த முறையில் அச்சிட்டுக்கொடுத்து உதவிய ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸம் அச்சகத்தாருக்கு எனது உளம்கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இதுபோலவே மற்ற நூல்களையும் வெளியிடுவதற்கு வேண்டிய ஸம்விதானங்களைச் செய்து அனுக்ரஹிகக வேணுமாக ஸ்ரீநிவாஸனது தயையை ப்ரார்த்திக்கிறேன்.

தாஸன்,
G. ஸுந்தரம்



॥ श्रीः ॥

# । दयाशतकम् ।

# தயா சதகம்.

श्रीमान्वेङ्कटनाथार्यः कवितार्किककेसरी ।
वेदान्ताचार्यवर्यो मे सन्निधत्तां सदा हृदि ॥

**ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ ।**
**வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா**

**प्रपद्ये तं गिरिं प्रायः श्रीनिवासानुकम्पया**
**इक्षुसारस्रवन्त्येव यन्मूर्त्या शर्करायितम् ॥**

**ப்ரபத்யே தம் கிரிம் ப்ராய: ஸ்ரீநிவாஸாநுகம்பயா ।**
**இக்ஷுஸாரஸ்ரவந்த்யேவ யந்மூர்த்யா சர்க்கராயிதம் ॥**

(பதவுரை) இக்ஷுஸாரஸ்ரவந்த்யா இவ — கரும்பின் சாற்றினுடைய நதிபோலிருக்கும், ஸ்ரீநிவாஸாநுகம்பயா— ஸ்ரீநிவாஸனுடைய தயையினால், ப்ராய:—வெகுவாக, (பல தடவை) யந்மூர்த்யா — எந்த மலையினுருவத்தாலே, சர்க்கராயிதம்—சர்க்கரையாயிருக்கையோ (பருக்காங்கல்லாகுகையோ) தம்—அந்த, கிரிம்—திருமலையை, ப்ரபத்யே—சரணமடைகிறேன்.

“ ஸ்ரீநிவாஸனுடைய தயையே கருப்பஞ்சாருகப்பெருகி ஆறாக ஓடிச் சர்க்கரைக்கட்டியாய் கனமாய் உறைந்திருப்பதுபோலுள்ள திருவேங்கடமென்னும் மலையை நான் பலகால் சரணம் அடைகிறேன்.”

(தாத்பர்யம்) ஸ்ரீனிவாஸனுடைய தயையென்னும் உத்தமமான குணத்தைப்பற்றி நூறு பாசுரங்களால் ஸ்தோத்திரம் செய்ய ஆரம்பம். வேங்கடமலையே பாபங்களைப் போக்கும் சக்தியுடையது என்பது அந்தத் திருநாமத்திற்கே பொருள். வேம் என்கிற ஸம்ஸ்கிருத வார்த்தை பாபத்தைச் சொல்லும். கடமென்னும் வினைச்சொல்லுக்குக் கொளுத்துவதென்று அர்த்தம். பாபமென்னும் பஞ்சைக் கொளுத்திச் சாம்பலாக்கும் மஹிமையுடையதென்பது வேங்கடம் எனனும் ஸம்ஸ்கிருதச் சொல்லின் பொருளாகும். பகவானுடைய தயை என்னும் குணம் பாபத்திலேயே நோக்குள்ள நம்முடைய பிழைகளைப் பொறுப்பதையே தன் வியாபாரமாக உடையது. வேங்கடமென்னும் மலையும் பாபத்தைப் போக்குவதற்கென்றே ஏற்பட்டது. தயை செய்யும் காரியத்தையே வேங்கடமலையும் செய்கிறபடியால் தயையே பெருமாளிடமிருந்து ஒரு ஆறாகப் பெருகி இந்த மலையாக உரைந்திருக்கிறதோ என்று இங்கே வர்ணிக்கப்படுகிறது.

ஸம்ஸ்கிருதத்தில் சர்க்கரை என்பது சர்க்கரையையும் கல்லையும் சொல்லும். இந்தக் கல்மலை சர்க்கரைக்கட்டியோ என்று சிலேஷையை முன்னிட்டு ரூபணம். ஸ்ரீனிவாஸன் ஒரு பெரிய கரும்பென்றும், அந்தக் கரும்பின் ஸாரமான கருப்பஞ்சாறு ஒரு நதியாகப் பெருகி சர்க்கரைக்கட்டி மலையாய் உரைந்ததோ! கரும்பின் ஸாரமில்லாத சக்கை முதலியவைகளைத் தள்ளிவிட்டு ஸாரமாகிய சாறைமட்டும் நாம் கொள்ளுவதுபோல இந்த் ஸ்ரீனிவாஸனிடத்தில் குற்றத்திற்குத் தக்க தண்டனை விதிப்பது முதலிய கோப குணங்களைத் தள்ளிவிட்டு நமக்கு வேண்டியதான தயையென்னும் ஸாரமான குணத்தைமட்டும் கொள்ளுகிறோம்

என்பது கருத்து. பாபத்தைப் போக்கும் இந்த மலை பாபத்தைப்போக்கும் தயையின் மூர்த்தியாகும். தயையில்லாதவனைக் கல்நெஞ்சன் என்பார். தயையைக் கல் மலையாக ரூபணம் செய்வது பொருந்தாதென்று ஆக்ஷேபம் செய்யக்கூடும். தயை செய்யும் காரியத்தை இந்த மலை செய்வதால் இதைத் தயையின் மூர்த்தியாகச் சொல்ல வேண்டியிருக்கிறது. தயைக்கு மலையை ஒப்பிட்டதிற்குக் கருத்து என்னவென்றால், மலையை எப்படி அசைக்க முடியாதோ, அப்படியே குற்றமுள்ள நம்மிடத்தில் ஸ்ரீநிவாசனுக்கு உண்டாகும் தயையை அசைக்க முடியாதென்பதுதான். ஓர் உபமானத்தில் எல்லா அம்சங்களிலும் பொருத்தம் பார்ப்பது ஸாத்யமன்று. ஒருவனைச் சிங்கமென்றால் சிங்கத்துக்கு உள்ளதெல்லாம் அவனுக்கிருப்பதாகச் சொல்லமுடியாது. ஒருவனிடத்தில் தயை இறங்கிவிட்டால் அது மலையைப்போல் சலிக்காமலிருக்குமென்பது உபமானத்தின் தாத்பர்யம். பாபத்தை நீக்கும் குணமும் நீக்கும் சக்தியும் இரண்டிற்கும் பொதுவென்பதும் கருத்து.

இந்தக் கலியுகத்தில் ஜனங்களுடைய கலியைத் தீர்க்க வேங்கடமலைமேல் வேங்கடநாயகன் அவதரித்ததாக சாஸ்த்ரம். இவருடைய தயை பாபவிநாசம் ஆகாச கங்கை முதலிய அருவிகளாகப் பிரவஹித்துப் பாபங்களை நீக்குவதாகவும் இந்த ஸ்தோத்ரத்தில் வர்ணிக்கப்படுகிறது. பகவானைச் சரணம் புகுவதால் பாபங்கள் தொலையும் என்பர். இந்த மலை பாபத்தைத் தீர்க்கும் மலையானதாலும் இதன்மேல் ஸ்ரீநிவாஸன் எழுந்தருளியிருப்பதாலும் இந்த மலையினடிவாரத்திலேயே முதலில் தண்டனிட்டு இந்த மலையைச் சரணம் புகுகிறோம் என்கிறார். சரணாகதி செய்யும் பாபவிமோசனத்தை இந்த மலை செய்வதால் இதைச் சரணமடைவது ந்யாயமாகும். இந்த ச்லோகத்தில் தயையென்னும் குணத்தை 'அநுகம்பை' என்கிற சப்தத்தினால் பேசுகிறார். 'அநுகம்பை' என்றால் ஒரு

பிராணி துக்கத்தால் நடுங்கும்பொழுது அதைக்கண்டு தானும் தயையினால் கூட நடுங்குகிறதென்பது அர்த்தம். ஸ்ரீநிவாஸனை பரம்பொருளைக் கண்டு ஸூர்யன், வாயு, அக்நி, யமன் முதலிய தேவர்களும் நடுங்கித் தங்கள் தங்கள் வேலையைச் செய்துவருகிறார்களென்று வேதம் சொல்லு கிறது. உலகம் முழுவதும் ஸ்ரீநிவாஸனுக்குப் பயந்து நடக்கும். ஸ்ரீநிவாஸனோ என்றால் தன்னுடைய தயா குணத்தினால், பேதையரான பிராணிகள் துக்கத்தினால் நடுங்கும்பொழுது தானும் கூட நடுங்குகிறானென்கிற ஆச்சர்யம் இதனால் காட்டப்படுகிறது. ராமன் தண்டகா ரண்யத்திற்குப் புறப்படும் அவசரத்தில் பக்ஷிகள்கூட 'ஸர்வ பூதாநுகம்பியான' அவரைக் காட்டுக்குப் போகக் கூடாதென்று யாசித்துக் கதறினதாக வால்மீகி பகவான் கூறுகிறார். ஒரு குருவிக்குக் கொஞ்சம் சரீரத்தில் நோய் உண்டாகி நடுங்கி வருந்தினால் தானும்கூட அந்தத் துக்கத்தைப் பொறுக்கமாட்டாமல் நடுங்கும் ஸ்வபாவ முடைய ராஜபுத்திரன மரவுரியுடுத்தித் தவசி வேஷம் பூண்டு காட்டுக்குச் செல்லுவது பக்ஷிகளுக்கும் ஸஹிக்க வில்லை. கைகேயிக்கு இது எப்படி ஸஹ்யமாயிற்றோ என்பது கவியின் தாத்பர்யம்.

'ஸ்ரீனிவாஸாநுகம்பயா' என்று ஸ்வாமி ஸ்ரீநிவாஸ னுடைய தயையினபரிமிதமான ப்ரபாவத்தைத் துதிக்கத் தொடங்குகையில், ஸ்ரீ பாகவதம் 6வது ஸ்கந்தம் 18-வது அத்யாயத்தில் 'ந மமார திதேர்கர்ப: ஸ்ரீநிவாஸாநுகம்பயா। பஹுதா குலிசக்ஷுண்ண: த்ரௌண்யஸ்த்ரேண யதா பவான்' என்று இந்த்ரன் தன் ஸபத்நீமாதாவாகிய திதி யின் கர்ப்பத்திற்குள் வஜ்ரஹஸ்தனாய்ப் புகுந்து முதலில் 7 துண்டங்களாக வஜ்ராயுதத்தால் சேதித்து பிறகு அந்த 7 துண்டங்களில் ஒவ்வொன்றையும் ஏழேழு துண்டங்களாகத் துண்டிக்கையில் அந்த 49 துண்டங்களும் 49 மருத்தேவதைகளாக உயிரோடு க்ஷேமமாய்ப் பிறந்த

வ்ருத்தாந்தத்தை அத்யாச்சர்யத்தோடு வர்ணிக்கையில் 'த்ரோண புத்ரன் அச்வத்தாமன், உன் தாயார் உத்தரை யின் கர்பத்தில் நீர் இருக்கையில், ப்ரஹ்மசிரஸ் என்னும் சஸ்திரம் ப்ரயோகித்தபோது, கர்ப்பப்பைக்குள் புகுந்து அஸ்த்ரம் உன்னைக் கொளுத்தி எரியும்போது ச்ரியப்பதி யான கண்ணன் கர்ப்பத்திற்குள் சக்ரஹஸ்தராகப் புகுந்து உன்னை ரக்ஷித்து உயிரோடு பிறக்கும்படி செய்ததுபோல், ச்ரியப்பதியான ஸ்ரீநிவாஸனுடைய தயையினாலேயே திதி வயிற்றுக்குள் 49 துண்டங்களாக வெட்டப்பட்ட எல்லாம் உயிருடன் மருத்துக்களான 49 பிள்ளைகளாகப் பிறந்தன. ஸ்ரீநிவாஸனுடைய அநுகம்பையின் எல்லையற்ற ஆச்சர்ய மான ப்ரபாவம் இது' என்று கூறியதை ஸ்வாமி இங்கே ஸ்மரித்து நமக்கு நினைப்பூட்டுவது திண்ணம். (1)

विगाहे तीर्थबहुलां शीतलां गुरुसन्ततिम् ।
श्रीनिवासदयाम्भोधिपरीवाहपरम्पराम् ॥ २ ॥

**விகாஹே தீர்த்தபஹுளாம் சீதளாம் குருஸந்ததிம் ।**
**ஸ்ரீநிவாஸதயாம்போதிபரீவாஹபரம்பராம் ॥** (2)

(பதவுரை) தீர்த்தபஹுளாம்—ஆசார்யர்களாலே நிறைந் திருக்குமதாய் (இறங்கும் துறைகளாலே ஸம்பூர்ணமாய்), சீதளாம்—குளிர்ச்சி பொருந்தினதாய் இருக்கும், குருஸந்த திம்—ஆசார்யவம்சமாகிற, ஸ்ரீநிவாஸ தயாம்போதி பரீவாஹ பரம்பராம்-ஸ்ரீநிவாஸனுடைய தயையாகிற மடுவினுடைய, போக்கு வீட்டின் வரிசையை (அதாவது வாய்க்காலை), விகாஹே-அவகாஹிக்கிறேன். (அந்த வாய்க்காலில் சிரஸ் ஸ்நானம் பண்ணுகிறேன்.)

"ஸ்ரீநிவாஸனுடைய தயை என்கிற ஒரு பெரிய ஏரியிலிருந்து ஓடிவரும் வெள்ளங்களான குளிர்ந்த குருபரம்பரையில் அதிலுள்ள அநேக ஸ்நான கட்டங்களில் இறங்கி ஸ்நானம் செய்கிறேன்."

(தாத்பர்யம்) ஸ்ரீநிவாஸனுடைய தயை வேங்கடமலை வடிவை எடுத்ததாக முதல் சுலோகத்தில் அநுபவம். இங்கே குருபரம்பரையிலுள்ள கருணை நிரம்பிய நம் ஆசிரியர்கள் ஸ்ரீநிவாஸனுடைய தயையின் ப்ரவாகங்கள் என்று அநுபவம். நாராயணனென்கிற தேவன் மானிட வேடம் பூண்டு ஆசிரியனாகிப் பிறவிக்கடலில் அமிழ்ந்து கிடக்கும் ஜீவர்களை சாஸ்த்ரமென்னும் கையினால் தன் கருணையால் தூக்கிவிடுகிறான் என்று சாஸ்த்ரம் சொல்லு கிறது. ஆசார்யனைத் தேவனென்றே பணியவேண்டும். இவ்வாசிரியர்கள் மிகவும் குளிர்ந்த மனமுடையவர். இவர் களுடைய க்ரந்தங்களின் அநுபவத்தில் முழுகினால் குளிர்ந்த ஜலத்தில் முழுகுவதால் தாபம் தீருவதுபோல எல்லாவித மான தாபங்களும் தீரும் என்பது கருத்து. இந்த தயா ப்ரவாஹத்தில் ஒவ்வொரு ஆசிரியரும் ஒரு இறங்கும் துறையாவர். ஸ்ரீநிவாஸனுடைய தயை மேலும் மேலும் அதிகமாகப் பெருகிக்கொண்டேயிருப்பதால் அந்த தயை நிரம்பின ஏரி அதிக வெள்ளத்தால் உடைத்துக்கொண்டு விடும். அதற்காக ஏரி அதிகமாய் நிரம்பிவிட்டால் அதிக ஜலத்தை வெளியில் போக்குவிடுவதுபோல் எப்பொழுதும் பொங்கி வெள்ளமிடும் ஸ்ரீநிவாஸனுடைய தயை ஏரியில் அடங்கமாட்டாமல் ஆசிரியர்களாக வழிந்து ஓடுகிறது. முதல் சுலோகத்தில் சொன்ன கிரியில் முழுகி ஸ்நானம் செய்து தாபத்தைத் தீர்த்துக்கொள்ள இடமில்லை. இங்கே அதற்கு இடம் ஏற்பட்டது. ஸ்ரீநிவாஸனுடைய தயை என்னும் வெள்ளத்தில் இறங்கி ஸ்நாநம் செய்ய ஒவ்வொரு ஆசிரியரும் ஒரு படிக்கட்டுத் துறையாவர். அவர்கள் வழி காட்டி நம்மை அந்த வெள்ளத்தில் இறக்கி ஸ்நாநம் செய்விக்கவேண்டும் என்பதும், அவர்களின்றில் அந்த வெள்ளத்தில் நாம் இறங்கி ஸ்நாநம் செய்யமுடியா தென்பதும் அபிப்பிராயம். (2)

कृतिनः कमलावासकारुण्यैकान्तिनो भजे ।
धत्ते यत्सूक्तिरूपेण त्रिवेदी सर्वयोग्यताम् ॥ ३ ॥

**க்ருதிந: கமலாவாஸ காருண்யைகாந்திநோ பஜே ।**
**தத்தே யத்ஸூக்திரூபேண த்ரிவேதீ ஸர்வயோக்யதாம் ॥**

(பதவுரை) கமலாவாஸ காருண்யைகாந்தின:- ஸ்ரீநிவாசனுடைய தயை ஒன்றையே சரணமாகப்பற்றின, கிருதிந:- கிருதிகளான ஆழ்வார்களை, பஜே-பஜனம் செய்கிறேன். த்ரிவேதீ-மூன்று வேதங்களும், யத்ஸூக்திரூபேண-எவர்களுடைய திருமொழியின் உருவத்தாலே, ஸர்வயோக்யதாம்-எல்லோர்க்கும் யோக்யமாக இருக்குகையை, தத்தே-தரிக்கிறதோ (அடைகிறதோ.)

"ஸ்ரீனிவாஸனுடைய தயையொன்றையே தஞ்சமாகப் பற்றியவரும் தங்கள் ப்ரபந்தங்கள் மூலமாய் வேதங்கள் எல்லாம் எல்லோருக்கும் யோக்யமாகும்படி செய்வித்த புண்ய புருஷர்களுமான ஆழ்வார்களை இடைவிடாமல் ப்ரியமாய்த் தொழுகிறேன்"

(தாத்பர்யம்) வேதங்களே இந்த ஆழ்வார்களின் ப்ரபந்தங்களின் வடிவை எடுத்துக்கொண்டு எல்லோர்க்கும் பொதுவாயிற்று. இந்தப் பிரபந்தங்களால் தத்வஞானமும் மோக்ஷமும் எல்லோர்க்கும் எளிதாயிற்று. இதனிலும் மிக்க கருணை உண்டோ? இவ்வாழ்வார்களை அவதரிக்கச்செய்து இவர்களைக்கொண்டு வேதங்களையே தமிழாகச்செய்வித்தது ஸ்ரீநிவாஸனுடைய தயை. அந்த தயையே வடிவானவர்கள் ஆழ்வார்கள். அவர்களையே நாம் தஞ்சமாக நாடுகிறோம். ஆழ்வார்கள் என்றால் பகவானுடைய குளிர்ந்த குண ஸமுத்திரத்தில் தாங்களும் ஆழ்ந்து அவர்களின் ப்ரபந்தங்களை ஸேவிப்பவரையும் ஆழும்படி செய்கிறவர்கள், பகவானையும் தங்களுடைய குளிர்ந்த மனதில் ஆழச் செய்கிறவர்கள். 'தெளியாத மறை நிலங்களை' இவர்கள் ஸூக்திகளை ஓதுவதால் தெளிகின்றோம் என்றும் கூறப் பட்டது. (3)

पराशरमुखान् वन्दे भगीरथनये स्थितान् ।
कमलाकान्तकारुण्यगङ्गाप्लावितमद्विधान् ॥ ४ ॥

**பராசரமுகாந் வந்தே பகீரதநயே ஸ்திதாந் ।**
**கமலாகாந்தகாருண்ய கங்காப்லாவிதமத்விதாந் ॥**

(பதவுரை) கமலாகாந்த காருண்ய கங்காப்லாவித மத்விதாந்-ஸ்ரீநிவாஸனுடைய தயையாகிற கங்கா நதியாலே என்போலிகளை நனைக்கிறவராய், (ஆதலால்) பகீரதநயே ஸ்திதாந்-பகீரதனுடைய ந்யாயத்தில் நிற்குமவரான, பராசரமுகாந்-பராசரர் முதலிய மஹரிஷிகளை, வந்தே-வணங்குகிறேன்.

"பகீரதன் தவஞ்செய்து கங்கையைக் கொண்டுவந்தது போல் ஸ்ரீநிவாஸனுடைய கருணை என்கிற குளிர்ந்த சுத்தமான கங்கா ப்ரவாஹத்தைக் கொணர்ந்து நம்போன்றவரை அதில் ஸ்நாநம் செய்யும்படி செய்வித்த பராசரர் முதலிய மஹர்ஷிகளை வந்தநம் செய்கிறேன்".

(தாத்பர்யம்) இதிஹாசங்களும் புராணங்களும் இல்லாவிட்டால் பகவானுடைய தயை என்கிற உத்தம குணத்தின் ப்ரபாவம் நமக்குத் தெரியமாட்டாது. பராசரர் முதலிய மஹாஷிகள் செய்தருளிய புராணக் கிரந்தங்களால்தான் ஸ்ரீநிவாஸனுடைய தயா மஹிமை நமக்கு வெளியாகிறது. அவர்களின் க்ரந்தங்களைப் பாராயணம் செய்வதாலும் சிரவணம் செய்வதாலும் பகவானுடைய தயாப்ரவாஹமாகிய கங்கையின் அலைகளால் நாம் நனைக்கப்பட்டுக் குளிர ஸ்நாநம் செய்விக்கப்படுகிறோம். முதலில் ஆழ்வார்களை வந்தநம் செய்துவிட்டுப் பிறகு மஹர்ஷிகளை வந்தநம் செய்வதற்குக் கருத்து யாது எனில், இது தயா ஸ்தோத்ரமாகையாலும் ஆழ்வார்கள் ஸ்ரீநிவாஸனுடைய தயையையே மோக்ஷோபாயமாகக் கைப்பற்றிய சரணாகதி நிஷ்டராகையாலும், திருவாய் மொழி முதலிய ப்ரபந்தங்கள்

நீண்ட சரணாகதியாகும் என்று பெரியோர்கள் சொல்லுவதாலும், பகவானுடைய தயாகுணத்தையே ஆழ்வார்கள் ப்ரதாநமாக ப்ரகாசப்படுத்துவதாலும பராசரர் போன்ற புராணக் கவிகள் பக்தி நிஷ்டரானபடியாலும், அவர்கள் தயாகுணத்தோடு மற்ற வீர்யம், பலம, தேஜஸ் முதலிய குணங்களையும் அதிகமாகக் காட்டுவதாலும் பகவானுடைய தயையின் அருமையையும் பெருமையையும் அறிந்து கொள்ளும் விஷயத்தில் ஆழ்வார்களின் உதவி பேருதவியாகும் என்பதுதான். மஹர்ஷிகள் பகீரதனைப்போல் தவம் செய்பவர்கள். தவத்தால கங்கையைப் பிறருக்கு உபகரிப்பதற்காகக் கொண்டுவந்ததுபோல் மஹர்ஷிகளும் தங்கள் தபோ பலத்தால் கங்காப்ரவாஹம் போன்ற தங்களுடைய க்ரந்தங்களை லோகோபகாரமாக ப்ரவர்த்திப்பித்தவர்கள்.

अशेषविघ्नशमनमनीकेश्वरमाश्रये ।
श्रीमतः करुणाम्भोधौ शिक्षास्रोत इवोत्थितम् ॥ ५ ॥

**அசேஷவிக்நசமநம் அநீகேச்வரமாச்ரயே ।**
**ஸ்ரீமத: கருணாம்போதௌ சிக்ஷாஸ்ரோத இவோத்திதம் ॥**

(பதவுரை) ஸ்ரீமத: - ஸ்ரீநிவாஸனுடைய, கருணாம்போதௌ உத்திதம்-தயையாகிற பெருமடுவில் உண்டான, சிக்ஷாஸ்ரோத இவ-சிக்ஷை என்கிற ப்ரவாஹம் போன்றவராய், அசேஷ விக்நசமநம்-ஸர்வ விக்நங்களையும் போக்கடிக்கும ஸ்வபாவமுள்ளவருமான, அநீகேச்வரம்-ஸேனாபதியான விஷ்வக்ஸேனரை, ஆச்ரயே-ஆச்ரயிக்கிறேன.

"எல்லா விக்நங்களையும் சமநம் செய்பவரும் வாஸனுடைய கருணை நிரம்பிய தடாகத்திலிருந்து சிக்ஷணம செய்கிறது என்கிற வாய்க்காலாகக கிளம்பினவருமான விஷ்வக்ஸேனரென்னும் ஸேனை முதலியாரை ஆச்ரயிக்கிறேன்".

(தாத்பர்யம்) கீழேயிருந்து குரு பரம்பரையில மேலே மேலே போகிறார். நம்மாழ்வாரை ஸேனை முதலியாரின்

அம்சமென்றும் சொல்லுவர். பெருமாளுக்கும் தாயாருக்கும் பிறகு இவர் குரு பரம்பரையில் முதல்வர். எல்லா திக்குக்களிலும் இவருடைய சேனைகள் பரவியிருப்பதால் இவரை விஷ்வக்ஸேனரென்றும் சேனைத்தலைவரென்றும் சொல்லுவர். இவருடைய ஸேனைகள் பகவானை ஆச்ரயித்து அவரிடத்தில் பக்தி செய்கிறவர்களுக்கு ஏற்படும் பக்தி விக்னங்களை எல்லாம் போக்குவதற்காகவே ஏற்பட்டவர்கள். எல்லா வைதிக கர்மங்களிலும் வைஷ்ணவர்கள் முதலில் விஷ்வக்ஸேன பூஜை செய்வர். ஸ்ரீநிவாஸனுடைய தயா தடாகம் அநேக கால்களாக வெளியில் ப்ரவஹிக்கிறது. தன்னை ஆச்ரயித்தவர்களின் ஸங்கடங்களைப் பரிஹரிப்பதென்கிற தயாகுணம் மற்றொரு காலாகும். இப்படி அநேக கால்களில் ஜ்ஞானோபதேசம் என்கிற சிக்ஷையைச் செய்கிறது ஸேனை முதலியாரென்கிற காலாகும். சிக்ஷை என்பது உபதேசிப்பதைச் சொல்லுவதோடு சிஷ்யன் தவறி நடக்கும்போது கொஞ்சம் சிக்ஷித்துத் திருத்துவதையும் சொல்லும். தவறுதலுக்கு சிக்ஷை விதிப்பதும் தயையின் கார்யமாகும். அப்பொழுது சிக்ஷித்து திருத்தாவிட்டால் தவறி நடப்பதே ஸ்வபாவமாகிவிடும். (5)

समस्तजननीं वन्दे चैतन्यस्तन्यदायिनीम् ।
श्रेयसीं श्रीनिवासस्य करुणामिव रूपिणीम् ॥ ६ ॥

**ஸமஸ்த ஜநநீம் வந்தே சைதந்யஸ்தந்யதாயிநீம் l**
**ச்ரேயஸீம் ஸ்ரீநிவாஸஸ்ய கருணாமிவ ரூபிணீம் ll (6)**

(பதவுரை) சைதன்யஸ்தன்யதாயினீம் - ஜ்ஞானமாகிற முலைப்பால கொடுக்கிறவளும், ச்ரேயஸீம்-யாவருக்கும் கொண்டாடத் தகுந்தவளும், ஸ்ரீநிவாஸஸ்ய—ஸ்ரீநிவாஸனுடைய, ரூபிணீம்-உருவங்கொண்ட, கருணாமிவ—கருணை போன்றவளுமான, ஸமஸ்த ஜனனீம்—ஸர்வலோக மாதாவான பெரிய பிராட்டியாரை, வந்தே—வணங்குகிறேன்.

" ஜ்ஞாநமென்கிற முலேப்பாலேக் கொடுப்பவளும் கருணையே வடிவெடுத்தது போன்றவளும் உலகத்துக்கெல்லாம் தாயும் ஸ்ரீநிவாஸனுக்கும் ச்ரேயஸ்ஸை அளிப்பவளுமான லக்ஷ்மியை வந்தனம் செய்கிறேன்.

(தாத்பர்யம்) குருபரம்பரையில் ஆதிகுருவாகிய பெருமாளுக்கு அடுத்தபடி லக்ஷ்மீ குருவாவாள். குருவாயிருப்பதன்னியில் அவள் எல்லோர்க்கும் தாயுமாவாள். அவள் எப்படித் தாயாவாள், அவள் பால்கொடுத்து வளர்க்கிருளா என்று கேட்டால், அவள் ஜ்ஞாநப்பாலேக் கொடுக்கிருளென்கிருர். ஜ்ஞானத்தைக் கொடுப்பதால் குருவாயும் பாலேக்கொடுப்பதால் தாயாகவும் ஆகிருள். ஸ்ரீநிவாஸனுடைய தயையென்னும் தத்துவமே லக்ஷ்மீ என்பது தாத்பர்யம். இது பின்னலும் ஸ்பஷ்டமாய் விவரிக்கப்படும். இந்த சுலோகத்தில் லக்ஷ்மியையும் அடுத்த சுலோகத்தில் பூமிப்பிராட்டியையும் அதற்கடுத்த சுலோகத்தில் நீளா என்கிற நப்பின்னேப் பிராட்டியையும் நமஸ்கரிக்கிருர். இந்த மூன்று தேவிகளும் கருணைகார்யத்தை நிர்வஹிக்கிருர்கள். அதில் ஒவ்வொருவரும் ஓரோர் வ்யாபாரத்தைக் கூறுபோட்டுக் கொண்டிருக்கிருர்கள் போலும். முதலில் ஆச்ரிதன் கிட்ட வருகையில் அவனுடைய தோஷங்கள் ஸ்ரீநிவாஸன் கண்ணிலேயே படாதபடி நப்பின்னே மறைப்பை உண்டுபண்ணுகிருள். அந்த மறைப்பையும் மீறி ஏதாவது தோஷங்கள் ஸ்ரீனிவாஸன் கண்ணில் பட்டுவிட்டால் பொறுமையின் மூர்த்தியான பூமிப்பிராட்டி அந்த தோஷங்களேப் பொறுக்கும்படி செய்கிருள். குற்றங்களேப் பொறுத்தாலும் குணமொன்றும் இல்லாததால் ஸ்ரீநிவாஸனுடைய ஸ்வஜநமாக அவர் அருகாமையிலிருந்து அவருக்கு அந்தரங்கமான பணிவிடைகளேச் செய்ய இடமிராது. அந்த பாக்யமும் கிடைக்கும்படி நம்மைத் தன் பரிஜநமாக ஸ்ரீனிவாஸன் லாலநம் செய்யும்படி லக்ஷ்மி செய்விக்கிருள். பெருமாளுக்கு ஸ்வஜநமாகச் செய்விப்பதால் நீ எனக்கு

மாதாவாகிருய் என்று ஸ்ரீகுணரத்நகோசத்தில் பட்டர் ஸாதிக்கிருர். அதை அநுஸரித்து இந்த சுலோகத்திலும் பெற்ற தாயாரென்று கூறிஞர். சரீரத்தைப் போஷணம் செய்யும் மாதாபிதாக்களைவிட ஆத்மாவை ஹிதமாய்ப் போஷணம் செய்யும் ஆசிரியர்கள் மேற்பட்டவர்கள். அவர்கள் நமக்கு ஜ்ஞாநப்பிறப்பைக் கொடுப்பவர்கள். ' அன்று நான் பிறந்திலேன் ' என்பது மயர்வறு மதியுடைய ஆழ்வார் வசனம். (6)

वन्दे वृषगिरीशस्य महिषीं विश्वधारिणीम् ।
तत्कृपाप्रतिघातानां क्षमया वारणं यया ॥ ७ ॥

வந்தே வ்ருஷகிரீசஸ்ய மஹிஷீம் விச்வதாரிணீம் ।
தத்க்ருபாப்ரதிகாதாநாம் க்ஷமயா வாரணம் யயா ॥

(பதவுரை) யயா க்ஷமயா-எந்த பொறுமை உருவமான க்ஷமா (பூமி) தேவியிஞல், தத்க்ருபாப்ரதிகாதாஞம்-அந்த ஸ்ரீநிவாஸனுடைய தயைக்கு தடங்கல்களுக்கு, வாரணம்-தடங்கல் ஏற்படுகிறதோ, தாம்- அந்த, வ்ருஷகிரீசஸ்ய-ஸ்ரீநிவாஸனுடைய, மஹிஷீம்-பட்ட மஹிஷியான, விச்வ தாரிணீம்-உலகங்களைத் தாங்கும் பூமிப்பிராட்டியை, வந்தே-வந்தனம் செய்கிறேன்.

" புவநம் முழுவதையும் தாங்குகிறவளும் வெங்கடேச்வரனுக்கு மஹிஷியாயும் க்ஷமையென்னும் பொறுமை குணத்தால் வேங்கடேச்வரனுடைய க்ருபைக்கு விக்நங்களை எல்லாம் தடுப்பவளுமான க்ஷமை என்று பெயரையுடைய பூமிப்பிராட்டியை வந்தனம் செய்கிறேன்."

(தாத்பர்யம்) ஆச்ரிதர்களுடைய குற்றங்களைப் பொறுப்பிவிக்கும் பொறுமைக்குணம் இங்கே காண்பிக்கப்படுகிறது. பூமிக்கு க்ஷமை என்றே பெயர். அவள் பொறுமையின் வடிவாவள். ஆச்ரிதர்களின் குற்றங்கள் ஸ்ரீநிவாஸன் கண்ணில் பட்டால் அவைகளால் ஸ்ரீநிவாஸஞு

க்ருபைக்கு ஏற்படும் தடங்கல்களை அந்தக் குற்றங்களைப் பொறுப்பிவிப்பதன் மூலம் நிவ்ருத்தி செய்கிருள். (7)

निशामयतु मां नीला यद्भोगपटलैर्ध्रुवम् ।
भावितं श्रीनिवासस्य भक्तदोषेष्वदर्शनम् ॥ ८ ॥

**நிசாமயது மாம் நீளா யத்போகபடலைர் த்ருவம் ।**
**பாவிதம் ஸ்ரீநிவாஸஸ்ய பக்ததோஷேஷ்வதர்சநம் ॥**

(பதவுரை) யத்போகபடலை:- எந்த நீளாதேவியின் போகங்களாகிற நேத்ரதோஷங்களாலே, ஸ்ரீநிவாஸஸ்ய- ஸ்ரீநிவாஸனுக்கு, பக்ததோஷேஷு - ஆச்ரிதர்களுடைய அபராதங்களில், அதர்சநம்-பார்வையில்லாமை, பாவிதம்- உண்டுபண்ணப்பட்டதோ, ஸா-அந்த, நீளா-நீளாதேவி, மாம்-என்னை, த்ருவம் - கட்டாயமாக, நிசாமயது - கடாக்ஷிக்கக்கடவள்.

"யாருடைய போகமயக்குகளினுல் பக்தர்களின் குற்றங்களைப் பார்க்கவொட்டாமல் ஸ்ரீநிவாஸனுடைய கண் மறைந்ததுபோல அவர் அந்தக் குற்றங்களை அடியோடு பார்க்காததுபோலிருப்பரோ, அந்த நீளையென்னும் பிராட்டி என்னைத் தனது நீண்ட கண்களால் பார்த்தருளவேண்டும்"

(தாத்பர்யம்) 'அல்லிமலர் மகள் போகமயக்குக்கள்' என்பதுபோல் இங்கே நப்பின்னைப் பிராட்டியின் போக மயக்குகளைச் சொல்லுகிருர். அதிக போகத்தால் கண்ணிற்கு மறைவு உண்டாகுமென்று வைத்ய சாஸ்த்ரானுபவம். ஸ்ரீநிவாஸனுக்கு அளவில்லாத போக ஸுகங்களைக் கொடுத்துத் தன் குழந்தைகளாகிய பக்தர்களுடைய தோஷங்களைப் பார்க்கவொட்டாமல் அவர் கண்களில் மறைப்பு உண்டானது போலச் செய்துவிடுகிருள். அவரும் அவள் தாக்ஷிண்யத்திற்கு இணங்கி தான் ஸர்வஜ்ஞனும் ஸர்வதர்சியாயுமிருந்தும் பார்க்காததுபோல் பாவனை செய்கிருர். நப்பின்னை என்னைப் பார்க்கட்டுமென்று ப்ரார்த்திப்பதால், பெருமாள்

என் குற்றங்களோடு என்னை முதலில் பார்க்காமலிருக்க வேண்டும் என்று த்வனி.

இவள் சலுகைக்கிணங்கி எல்லாவற்றையும் எப்பொழுதும் நேரில் ஸம்பூர்ணமாய்ப் பார்க்கும் பெருமாள் குற்றங்களைப் பாராததுபோல பாவனை செய்கிறார். குற்றங்கள் என்கிற பன்மையினால் குற்றங்கள் ஆயிரக்கணக்காயிருந்தாலும் ஆயிரம் கண்களையுடைய பெருமாளுடைய ஒரு கண்ணில்கூடப் படுவதில்லைபோல என்று அணி. ஸ்ரீநிவாஸன் என்கிற பதத்தினால் புருஷஸூக்தத்தில் ஆயிரக் கண்ணன் என்று ஓதப்பட்டவனைச் சொல்லுகிறது. புருஷ ஸூக்தத்திற்கு அடுத்த அநுவாகத்தில் அவனுடைய பத்நீ 'ஹ்ரீ' லக்ஷ்மீ என்று ஓதப்பட்டது. எவன் ஆயிரக் கண்ணனோ அவனே ஸ்ரீநிவாஸன் ஆவான். (8)

**कमप्यनवधिं वन्दे करुणावरुणालयम् ।**
**वृषशैलतटस्थानां स्वयंव्यक्तिमुपागतम् ॥ ९ ॥**

**கமப்யநவதிம் வந்தே கருணாவருணாலயம் ।**
**வ்ருஷசைலதடஸ்தாநாம் ஸ்வயம் வ்யக்திமுபாகதம் ॥**

(பதவுரை) அனவதிம்-ஒருவகையிலும் அளவற்றதும், (ஆகையினாலேயே), கமபி - ஸர்வலோக விலக்ஷணமும், வ்ருஷசைலதடஸ்தாநாம் - திருமலையின் தாழ்வரையிலிருப்பவர்களுக்கு, ஸ்வயம் வ்யக்திம் - தானே பிரகாசிப்பதை, உபாகதம்-அடைந்திருப்பதுமான, கருணாவருணாலயம்-தயா ஸமுத்திரத்தை (ஸ்ரீநிவாஸனை), வந்தே - துதிக்கிறேன், வணங்குகிறேன்.

"கருணை என்னும் குணத்தினால் நிரம்பிய வருணாலயம் என்கிற எல்லையில்லாத ஸமுத்ரமாயும், வேங்கடமலையின் தடத்திலிருப்பவர்களுக்கு ஸ்வயம் வ்யக்தமாய் அணுகியவரும், இன்னார் இப்படிக்கொத்தவர் என்று வர்ணிக்கக்கூடாதவருமான (ஸ்ரீநிவாஸனை) வந்தனம் செய்கிறேன்".

(தாத்பர்யம்) இங்கே குருபரம்பரை முடிவடைகிறது. ஸ்ரீநிவாஸன் ஆதிகுரு. கருணையென்று ஸமுத்திரத்தைச் சொல்லுகிறது. தயாஸ்தோத்ரம் முழுவதும் பகவானுடைய தயையை சரணாகப் பற்றும் சரணாகதியின் மஹிமையைச் சொல்லுகிறது. பகவானை ஸமுத்ரமென்று சொல்லுகையில் ஸர்வலோக சரண்யனான ராகவனே சரணம் புகுந்தபொழுது அவரை அலக்ஷ்யம்செய்து இறுமாப்படைந்து பொங்கிய ஸமுத்ரமாக ஸ்ரீநிவாஸனை எப்படி நிரூபணம் செய்யலாமென்று சங்கை பிறக்கக் கூடியதை அகற்றுவதற்காகக் கருணை என்னும் விசேஷணத்தை வைத்து அவரை அருட்கடலென்றார். வேங்கட மலையின் தடத்திலிருப்பவருக்குத் தானே கிட்டே நெருங்கி ஸேவை ஸாதிப்பர் என்று சொன்னதில் இரண்டு ஸ்வாரஸ்யமுண்டு. தடமென்றால் கரையைச் சொல்லும். ஸ்ரீநிவாஸனுடைய குண ஸமுத்ரத்திற்குள் இறங்குவதற்குத் தங்களுக்குக் கொஞ்சமேனும் வலிமை இல்லை என்று கைவாங்கிக் கரையிலேயே மௌனமாய் நிற்கிறவர்கள் தடஸ்தரெனப்படுவர். யார் ப்ரஹ்மத்தை அறியமுடியாது என்று ப்ரஹ்மத்தை நினைப்பாரோ அவர்களுக்குத்தான் ப்ரஹ்மம் தெரிந்ததென்று சொல்லவேணும். யார் ப்ரஹ்மத்தைத் தெரிந்து கொண்டோம் என்று நினைக்கிறார்களோ அவர்களுக்கு ப்ரஹ்மம் தெரிந்ததே அல்ல என்று வேதம் சொல்லுகிறது. தெரிந்தோமென்று உள்ளே இறங்குகிறவர்களுக்கு ப்ரஹ்மம் தூரத்திலேயே இருக்கும். இறங்க அஞ்சிக் கரையிலேயே நிற்பவரை ப்ரஹ்மம் கிட்ட அணுகி அவர்களுக்குத் தானே ப்ரகாசிக்கும். வேங்கடமலையின் தடத்திலுள்ளவர்களுக்குத் தானே வலிய அணுகித் தன்னைப் பிரகாசிப்பித்துக்கொள்கிறார். தடத்திலுள்ளவர்க்குப் பிரகாசிக்கிறார் என்றதினால் மேற்சொன்ன வேதரஹஸ்யம் காட்டப்படுகிறது. பகவான் யாரைத் தனக்கு அன்பனென்று தன்னிடம் எல்லையில்லா அன்புடைமையைப்பற்றித் தன் க்ருபைக்கு லக்ஷ்யமாகப் பொறுக்கி எடுக்கிறானோ, அவனுக்குத்தான் தன்னுடைய

ஸ்வரூபத்தைப் பிரகாசப்படுத்துவான் என்று வேதம் சொல்லுகிறது. தனக்கு ப்ரியமான வேங்கட மலையைத் தேடிவந்து அந்த மலை ஏறுகிறவர்களுக்கு ஸ்வயம் வ்யக்த மான தனனுடைய திவ்யமூர்த்தியைக் காணும் பாக்யத்தை அளிக்கிருள. (9)

अकिंचननिधिं सूतिमपवर्गत्रिवर्गयोः ।
अञ्जनाद्रीश्वरदयामभिष्टौमि निरञ्जनाम् ॥ १० ॥

அகிஞ்சநநிதிம் ஸூதிமபவர்கத்ரிவர்கயோ: I
அஞ்ஜநாத்ரீச்வரதயாமபிஷ்டௌமி நிரஞ்ஜநாம் II (10)

(பதவுரை) அகிஞ்சநநிதிம் - தன் திருவடியல்லாது வேறொரு உபாயமில்லாதவர்களுக்கு அவர்கள் வேண்டும் புருஷார்த்தங்களை கொடுப்பதும, அபவர்க்க த்ரிவர்க்கயோ: ஸூதிம் - மோக்ஷம தர்மார்த்தகாமங்கள் இவைகளை யுண்டு பண்ணுபதும், நிரஞ்ஜநாம்-பக்ஷபாதமெனும் குற்றமற்றது மான, அஞ்ஜநாதரீசவரதயாம - அஞ்சன மலைக்கதிபதியான ஸ்ரீநிவாஸனுடைய தயையை, அபிஷ்டௌமி- துதிக்கிறேன்.

"ஒன்றுமில்லாத பேதைகளும் வேறு கதியற்றவர் களுமான சரணமடைபவர்க்கு நிதிபோன்றதும் அபவர்க மென்னும் மோக்ஷ புருஷார்த்ததையும், தரிவர்கமென்னும் தர்மாாத்தகாம புருஷார்த்தங்களையும் கொடுப்பவளும் அஞ்ஜநமென்கிற மாசு அடியோடு இல்லாதவளுமான அஞ்ஜநமலையரசனுடைய தயையென்னும் தேவியைப் பல விதமாய்த் துதிக்க எண்ணுகிறேன்".

(தாத்பர்யம்) *நிதியென்பது* பூமியின் கீழே மிக்க ஆழத்திலுள்ள தங்கம் முதலிய சுரங்கக்கனியைச் சொல்லும். அதை வெட்டியெடுக்க ஏராளமான பணமும் ஆட்களும் யந்திரங்களும் வேண்டும். ஒன்றுமில்லாத ஏழைகளுக்கு அப்படிக்கொத்த கனியை உபயோகத்திற்குக் கொண்டு வந்து பலனை அடைவது ஸாத்யமல்ல. இந்த தயை

யென்னும் நிதி யாதொரு ப்ரயாஸையும் செலவுமில்லாமல் தன்னை நினைதத மாத்ரத்தால் பேதையர்க்கு இரங்கி வேண்டு வதைக் கொடுக்கும். அபவர்கத்தையும் த்ரிவர்கத்தையும் கொடுக்கும். அபவர்கம் என்பது மோக்ஷத்தின் பெயர். த்ரிவர்கம் என்பது மற்ற மூன்று புருஷார்த்தங்களுக்குப் பெயர். தர்மார்த்தகாம மோக்ஷங்களென்று முதலில் தரி வர்கத்தையும் முடிவில் அபவர்கத்தையும் சொல்லுவது வழக்கம். அந்த க்ரமத்தை மீறி இங்கே மோக்ஷத்தை முதலில் எடுத்ததற்குக் காரணம் உயர்ந்த புருஷார்த்த மாகிய மோக்ஷத்தை அளிப்பதிலேயே தயையின் முக்கிய நோக்கென்பதே. ப்ராணிகள் மோக்ஷம் வேண்டாமென்று தள்ளிச் சில்லரை பலன்களே தங்களுக்கு வேண்டும் என்று கோரி நிர்பந்தம் செய்தால் மட்டும் அல்பமான த்ரிவர்க பலன்களைத் தயையின் இஷ்டத்திற்கு விரோதமாகக் கொடுக்க நேரிடுகிறது. உயர்ந்த பலமாகிய மோக்ஷத்தைக் கொடுப்பதிலேயே தயைக்கு பூர்ண ஸந்தோஷமாகையால் அதை இங்கே முதலில் எடுத்தது வேங்கடமலைக்கு அஞ்சந மலை என்றும் பெயர். அஞ்ஜநமலை அரசனுக்குப் பட்டமகிஷி யான தயாதேவிக்கு துளி அஞ்ஜநம் கிடையாதென்று வேடிக்கை. அஞ்ஜநம் என்பது குற்றத்தையும் சொல்லும். தயாதேவி அஞ்ஜநமற்றவள். இந்த ஸ்தோத்ரம் வெவ் வேறு விருத்தங்களில் பத்துப் பத்து பாட்டாக அமைந்தது. முதல் பத்துப் பாட்டு இதோடு முடிவடைகிறது. இதில் தயாதேவியை முதலில் நேராக வணங்கி அவளைத் துதிக்கப் போகிறதாகக் கூறுகிறார். முன் ஒன்பது பாட்டுக்களில் தயையின் அவதாரங்களான குரு பரம்பரைகளையும் கிரியை யும் வணங்கினார். பெருமாளோடு அந்த குருபரம்பரை ஒன்பதாவது பாட்டில் முடிந்தது. பத்தாவது பாட்டில் குரு பரம்பரையாக அவதாரம் எடுத்த தயாதேவியை நேராக வணங்குகிறார், அடுத்த பாட்டு முதல் அவளைத் துதிக்க ஆரம்பிப்பதாகவும் சொல்லுகிறார். முதல் பத்துப்பாட்டு தயா ஸ்தோத்ரத்திற்கு முகவுரையாகும். (10)

अनुचरशक्त्यादिगुणामग्रेसरबोधविरचितालोकाम् ।
स्वाधीनवृषगिरीशां स्वयं प्रभूतां प्रमाणयामि दयाम् ॥ ११ ॥

**அநுசரசக்த்யாதி குணுமக்ரேஸரபோதவிரசிதாலோகாம் ।**
**ஸ்வாதீநவ்ருஷகிரீசாம் ஸ்வயம்ப்ரபூதாம் ப்ரமாணயாமி**
**தயாம் ॥**

(பதவுரை) அநுசரசக்த்யாதி குணும்-சக்தி முதலான பகவத் கல்யாண குணங்களை தனக்கு அநுசர (சேஷபூத)ங்களாக உடையவளும், அக்ரேஸரபோதவிரசிதாலோகாம்—முன்னே போகின்ற ஞான குணத்தினுலே வெளிச்சம் காட்டப்பட்டவளும் (ஆலோக சப்தம் சொல்லப் பட்டவளும், அதாவது ஆச்ரிதரக்ஷணுதி கார்யார்த்தமாக (ராஜமஹிஷீபக்ஷத்தில் லீலாதி கார்யார்த்தமாக) தான் புறப் படும்போதுதான் போகவேண்டும் தேச விசேஷத்தை கையினுலே காட்டிக்கொண்டு இவ்விடம் பாரு, இவ்விடம் பாரு என்று சொல்லுகையாகிற வாசிகோபசாரம் சொல்லப் பட்டவளும்) ஸ்வாதீந வ்ருஷகிரீசாம் — திருவேங்கட முடையானை தனக்கதீனமாக உடையவளும் (ஆதலால்) ஸ்வயம் ப்ரபூதாம்—தானே ப்ரபுவாக இருப்பவளுமான, தயாம் — தயாதேவியை, ப்ரமாணயாமி — ப்ரமாணமாகப் பண்ணுகிறேன் (அதாவது சரணமாக நிச்சயிக்கிறேன்).

"சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ் என்னும் குணங்களைத் தனக்குப் பின்தொடரும் ஊழியக்காரர் களாகவும் ஜ்ஞாநமென்னும் குணம் தனக்கு முன் கையில் விளக்கை வைத்துக்கொண்டு வழி காட்டிக்கொண்டு போகும் வெளிச்சத்தை உடையவளாயும் வேங்கடமலையின் ஈச்வரனைத் தனக்கு ஸ்வாதீநமாக உடையவளாயும், தானே ப்ரபுவாயும், தானே ஆவிர்பவிப்பவளாயுமுள்ள தயாதேவியே கதியென்று அவளைச் சரணம் புகுகிறேன்".

(தாத்பர்யம்) ஆறு குணங்களாலும், இன்னும் அநந்த கல்யாண குணங்களாலும் பூர்ணமான பெருமானைத் துதி

செய்யாமல் அவருடைய குணங்களில் ஒன்றாகிய தயையை ஸ்துதிசெய்ய ஆரம்பித்தது உசிதமாகுமோ? குணங்களை ஸ்துதிசெய்ய ஆரம்பித்தாலும் ஜ்ஞாநம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ் என்கிற பகவானுடைய ஆறு முக்யமான குணங்களை ஸ்துதி செய்யாமல் ஏதோ ஒரு குணமாகிய தயையை ஸ்தோத்ரம் செய்வது கூடுமோ? இப்படி ஆக்ஷேபங்கள் வர, இந்த ச்லோகத்திலும் இதற்குப் பின் வரும் ஒன்பது ச்லோகங்களிலும் தயையைத்தான் ஸ்துதிசெய்யவேண்டியது ந்யாயமென்று நிரூபிக்கிறார். பகவானுக்கு ப்ரஸித்தமான ஆறு குணங்களில் சக்தி முதலுள்ள ஐந்து குணங்களும் தயையின் ஊழியக்காரர்கள் போல் அவள் இட்டது சட்டமாய் அவளைப் பின்தொடர்ந்து போகிறார்கள். அந்தக் குணங்கள் அவளுக்கு அநுசரர்கள். அநுசரரென்றால் வேலைக்காரரென்றும் பின் செல்லுகிறவரென்றும் பொருள். குழந்தைகள் கஷ்டப்பட்டு அழுகிற சப்தம் காதில் கேட்கவே எங்கிருந்து சப்தம் வருகிறது என்றும், எந்தக் குழந்தை அழுகிறதென்றும், பரபரப்புடன் தாயான தயாதேவி அதைக் காப்பாற்றவேண்டுமென்று ஓடுகிறாள். தான் பட்டமஹிஷியாயிருந்தாலும் பரபரப்புடன் வருத்தப்படும் குழந்தையைத் தேடிப்போகும் அவஸரத்தில் பல்லக்கிலேறிப் போகமாட்டாள். பட்டராணியானவள் ஓடும்பொழுது சக்தி முதலான குணங்கள் கூட ஓடுகிறார்கள். ஜ்ஞாநமென்னும் குணம் முன் சென்று இங்கே இங்கே என்று வெளிச்சம் காட்டுகிறது. சக்தி முதலிய குணங்கள் தயைக்குப் பாத்ரமானவர்களிடம் சென்று தயையின் இஷ்டப்படிக்கு அவர்களுக்கு வேண்டிய உபகாரங்களைச் செய்கின்றன. ஜ்ஞாநமென்னும் குணம் எந்த எந்த இடத்திற்குச் சென்று யார் யாரைக் காப்பாற்றலாமென்று தயைக்கு வழி காட்டுகிறது. அறிகிறான், இச்சிக்கிறான், ப்ரயத்நம் செய்கிறான் என்று க்ரமம். ஒரு குழந்தை கஷ்டப்படுகிறது என்கிற அறிவு முதலில் உண்டாகவேணும். அந்த அறிவு உண்டான பிறகு அந்தக் குழந்தையைக்

ரக்ஷிக்கவேண்டுமென்கிற இச்சை உண்டாகும். காக்க வேணுமென்கிற இச்சையைத்தான் தயை என்பர். தயை என்கிற இந்த இச்சை உண்டாகவே இந்த இஷ்டத்தை நிறைவேற்றுவதற்காக ப்ரயத்நமும் வ்யாபாரங்களும் சக்தி, பலம், ஐச்வர்யம் முதலியவைகளால் கூடும். இந்த க்ரமத்தை அநுஸரித்து தயைக்கு முன்பு ஜ்ஞாநம் சென்று வழிகாட்டுவதாகவும், தயைக்குப் பின்பு சக்தி, பலம் முதலியவைகள் சென்று தயையின் இஷ்டத்தை நிறைவேற்றி வைப்பதாகவும் இங்கே கூறுகிறார். ப்ரபுவாகிய ஸ்ரீநிவாஸனுடைய ஸம்மதியன்னியில் ஒரு கார்யமும் நிறைவேறாது. அவனன்றியில் ஓரணுவும் அசையாது. எந்தப் பலமானாலும் அவன் கைதான் கொடுக்கவேணும். அவன் இந்த தயாதேவிக்கு ஸ்வாதீநன் என்கிறார். ப்ரபுவாகிய ஸ்ரீநிவாஸனும் இவளுக்கு ஸ்வாதீநனென்றால் இவளுக்குமேல் யார் ப்ரபு? என்று சங்கை வர இவள் தனக்குத்தானே ப்ரபு என்கிறார். (11)

अपि निखिललोकसुचरितमुष्टिंधयदुरितमूर्च्छनाजुष्टम् ।
संजीवयतु दये मामञ्जनगिरिनाथरञ्जनी भवती ॥ १२ ॥

**அபி நிகிலலோகஸுசரிதமுஷ்டிந்தய துரிதமூர்ச்சநா**
**ஜுஷ்டம் ।**
**ஸஞ்ஜீவயது தயே மாமஞ்ஜநகிரிநாதரஞ்ஜநீ பவதீ ॥ (12)**

(பதவுரை) ஹே தயே - ஓ தயையே, அஞ்ஜனகிரி நாதரஞ்ஜனீ - அஞ்ஜனமலை என்ற திருமலைக்கதிபதியான ஸ்ரீநிவாஸனை ரஞ்சிப்பிக்கின்றவளான, பவதீ-நீ, நிகிலலோக ஸுசரித முஷ்டிந்தய துரித மூர்ச்சனா ஜுஷ்டம்பி - ஸமஸ்த ஜனங்களுடைய புண்யங்களை ஓர் முஷ்டியாலே பானம் பண்ணத்தக்கதான பாபங்களாலே ப்ரக்ஞையை இழப்பதாகிற மூர்ச்சையுடன் கூடியவனானபோதிலும், மாம் என்னை, ஸஞ்ஜீவயதி - உயிர்ப்பிக்கிறாய் (மூர்ச்சையைத் தெளிவிக்கிறாய்).

"உலகம் முழுவதும் செய்த புண்யம் முழுவதையும் ஒரு கையாலெடுத்து உரிஞ்சிவிடக்கூடிய பாபங்களைச் செய்து அந்தப் பாப விஷ மூர்ச்சை மிகமிஞ்சி ஏறியிருக்கும் என்னையும் அஞ்ஜனமலைக்கு அதிபதியான ஸ்ரீநிவாஸனை ரஞ்சிப்பிக்கும் தேவியாகிய நீ என்னை உயிர்ப்பித்து என் ஆத்மாவை உளதாகச் செய்யவேணும்.

(தாத்பர்யம்) குழந்தைக்கு ஜ்வரத்தாலோ விஷத்தாலோ தோஷம் ப்ரபலமாக மிதமிஞ்சி முற்றி மூர்ச்சை ஏற்பட்டு ப்ராணாபாயம் வந்திருக்கும் ஸமயத்தில் உயர்ந்த ஸஞ்ஜீவினியாகிய ஔஷதங்களை மலைப்பிரதேசங்களிலுள்ள அபூர்வமான மூலிகைகளைக்கொண்டு செய்து அந்தக் குழந்தையைத் தாயானவள் உயிர்ப்பிப்பாள். உலகத்தில் எல்லோரும் செய்யும் புண்யத்தை ஒரு தட்டில் வைத்து என் பாபத்தை ஒரு தட்டில் வைத்தால் என் பாபமே மிக்க கனமாகும் பாபமென்பது விஷம். அந்த விஷத்தால் என்னுடைய ஆத்மாவுக்கு மூர்ச்சை தலைகொண்டு போயிருக்கிறது. இந்த அவஸ்தையில் அஞ்ஜநகிரியிலுள்ள ம்ருத சஞ்ஜீவன ஔஷதியாகிய தயையானவள் என்னைக் காப்பாற்றி என் உயிராகிய ஆத்மாவை எனக்கு அளிக்கிறாள். ஸ்ரீ பாஷ்யத்தின் இரண்டாவது மங்கள சுலோகத்தில் 'வ்யபகதப்ராணாத்ம ஸஞ்ஜீவினீம்' என்று வ்யாஸருடைய அம்ருதம் போன்ற ப்ரஹ்ம ஸூத்திரங்களை வர்ணித்தார். அந்த வர்ணநம் இங்கே இந்த தசகத்தின் இரண்டாவது சுலோகத்தில் அநுஸரிக்கப்படுகிறது. ஸ்ரீ பாஷ்யத்தின் முதலாவது மங்கள சுலோகத்தில் 'அகில புவந' என்ற வார்த்தையை அநுஸரித்து இங்கே முதலில் 'நிகில லோக' என்று ப்ரயோகித்தார். வேதாந்தாச்சார்யார் இங்கே கவி பாடுவதால் வேதாந்தத்திற்கு முதல் நூலாகிய ஸ்ரீ பாஷ்யத்தின் ஆரம்பத்தை அநுஸரித்துக் கவி பாடுகிறார். இவ்வளவு பாப மூர்ச்சை ஏறிய என்னையும் விஷத்தை நீக்கி உயிருள்ளவனாகச் செய்வதால் பாபத்தைப் போக்குவதில் தயைக்கு

உள்ள சக்தி வெளியாகிறதென்கிறார். ஸஞ்ஜீவனமென்பது மோக்ஷமென்கிற நித்யானந்தாநுபவத்தைக் காட்டும். தயையினால் உயிர்ப்பிக்கப்பட்ட பிறகுதான் தான் உளனாக வெண்ணி அதற்குப்பிறகு ‘என்னை’ என்று தன்னைக் கூறுகிறார். ஹநுமார் ஜாம்பவானால் தெரிவிக்கப்பட்ட ஓஷதி பர்வதத்திற்குச் சென்று அங்கிருந்து ம்ருதஸஞ்ஜீவினி முதலான ஓஷதிகளைக் கொண்டுவந்து ராமன் முதலிய வீரர்களை உயிர்ப்பித்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீநிவாஸனுடைய தயை ஆத்மாக்களை உயிர்ப்பிக்க அஞ்ஜன மலையிலுள்ள ஓர் ம்ருத ஸஞ்ஜீவன ஓஷதி என்று பாவம். (௧௨)

भगवति दये भवत्या वृषगिरिनाथे समाप्लुते तुङ्गे ।
अप्रतिघमज्जनानां हस्तालम्बो मदागसां मृग्यः ॥ १३ ॥

**பகவதி தயே பவத்யா வ்ருஷகிரிநாதே ஸமாப்லுதே துங்கே !**
**அப்ரதிகமஜ்ஜநாநாம் ஹஸ்தாலம்போ மதாகஸாம் ம்ருக்ய: ॥**

(பதவுரை) பகவதி-பூஜ்யையான, ஹே தயே-ஓ தயையே, துங்கே-எல்லோரைக்காட்டிலும் உயர்ந்தவனான, வ்ருஷகிரிநாதே-ஸ்ரீநிவாஸன், பவத்யா-உன்னால், ஸமாப்லுதே-நன்கு முழுகாநிற்குமளவில், அப்ரதிகமஜ்ஜனானாம்-தடங்கலில்லாமல் நிச்சயமாக முழுக்கையுடைய, மதாகஸாம் என்னுடைய பாபங்களுக்கு, ஹஸ்தாலம்ப: -கைப்பிடியானது, ம்ருக்ய: -தேட்டமாய் விடும்.

“பகவதியான தயையே! மிகவும் உயர்ந்த இடத்திலுள்ள வேங்கடகிரிநாதன் உன்னால் பெரிய தயாவெள்ளத்தால் முழுகும்படி செய்யப்பட்டபொழுது அந்த மலை முழுவதும் கரைபுரண்ட தடுக்கக் கூடாத வெள்ளத்தில் முழுகிப்போகிற என்னுடைய பாபங்களுக்கு எவ்வளவு தேடினாலும் கைபிடிப்பு அகப்படமாட்டாது”.

(தாத்பர்யம்) பாபங்களைப் போக்குவது தயையின் முக்கியமான உபகாரம், பாபமென்கிற நம்முடைய

செய்கையால் ஸ்ரீநிவாஸனுடைய நெஞ்சில் நம்மை அதற்காக தண்டிக்கவேண்டுமென்கிற கோபமுண்டாகும். நம் பாபச்செய்கைகள் ஸ்ரீநிவாஸன் நெஞ்சில கோபமாக நிற்கும். தயாதேவி ரொம்பவும் சாதுர்யமாய் நம்முடைய பாபங்களை முழுகச்செய்து இருக்கவிடமில்லாமல் தொலைக்கிருள். ஸ்ரீநிவாஸன் உயர்ந்த மலைமேல் இருப்பவர். அவரும் தயையின ப்ரவாஹத்தால் முழுகிப்போகிருர். மலை முழுகி அவரும் முழுதும் தயாவெள்ளத்தில் அவர் தலைக்குமேல் வெள்ளம் போகும்பொழுது அவர் நெஞ்சிலுள்ள நம்முடைய பாபங்களும முழுகிப்போய் இருக்க இடமில்லாமலும் கைபிடிப்பு அகப்படாமலும் தொலைந்துபோகும். ஜகத்தை எல்லாம ப்ரளயமென்கிற வெள்ளத்தில பெருமாள் முழுக்கடிப்பார். அவரையும் தன் வெள்ளத்தில் தயை முழுகச்செய்கிருள். "ஜ்ஞாநமென்னும் நெருப்பு ஸர்வ கர்மங்களையும் கொளுத்திச் சாம்பலாக்கும்" என்று அர்ஜுனனிடம் கீதையில் சொல்லப்பட்டது. கருணாமூர்த்தியான தயா தேவி பாபங்களைக் கொளுததுகிறதிலலை. நம் பாபஙகளைத் தன் நெஞ்சில் வைத்திருக்கும் பெருமாளை முழுக அடித்து அவர் நெஞ்சிலிருந்து அந்தப் பாபங்கள் மறக்கும்படி நெஞ்சை அலம்பிவிடுகிருள். (13)

कृपणजनकल्पलतिकां कृतापराधस्य निष्क्रियामाद्याम् ।
वृषगिरिनाथदये त्वां विदन्ति संसारतारिणीं विबुधाः ॥ १४ ॥

**க்ருபணஜநகல்பலதிகாம் க்ருதாபராதஸ்ய நிஷ்க்ரியா மாத்யாம் ।**
**வ்ருஷகிரிநாததயே த்வாம் விதந்தி ஸம்ஸாரதாரிணீம் விபுதா: ॥**

(பதவுரை) வ்ருஷகிரிநாத தயே – ஸ்ரீநிவாஸனுடைய தயையே, க்ருபண ஜன கல்பலதிகாம்-தீனஜனங்களுக்குக் கற்பகக்கொடியாயும், க்ருதாபராதஸ்ய – அபராதம் பண்ணினவருக்கு, ஆத்யாம் நிஷ்க்ரியாம்—முதன்மையான பிராயச்சித்த பூதையாயுமிருக்கும், த்வாம் – உன்னையே,

விபுதா:—சாஸ்த்ரம் அறிந்தவர்கள், ஸம்ஸாரதாரிணீம்—ஸம்ஸாரக்கடலைத் தாண்டுவிக்குமவளாக, விதந்தி—அறிகிறார்கள்.

"வேங்கடமலை நாதனின் தயையே! தீனர்களான அகிஞ்சனர்களுக்கு மெல்லிய கற்பக்கொடியாயும், குற்றம் செய்தவருக்கு குற்றத்தைப் போக்கும் முதன்மையான ப்ராயச்சித்தமாகவும் ஸம்ஸாரத்தின் அக்கரை சேரும்படி தாண்டுவிக்கிறவளுமாக சாஸ்த்ர ஆராய்ச்சி உள்ளவர்கள் உன்னைத் தீர்மானிக்கிறார்கள்".

(தாத்பர்யம்) தயையென்னும் சிறந்த மாதை வர்ணிப்பதில் அவளை ஓர் இளம் கற்பகக்கொடி என்கிறார். தேவலோகத்திலுள்ள கற்பகக்கொடி தனிகர்களான தேவர்களுக்கு வேண்டியதை அளிக்கும். இந்தக் கற்பகக்கொடி தனக்கு ஒரு கைமுதலில்லாதவரும் வேறு கதியற்றவருமான அகிஞ்சனர்களுக்கு வேண்டுமதைத் தரும். கற்பகக்கொடி வேண்டிய பொருளைக் கொடுக்குமேயல்லாது செய்த குற்றத்திற்கு ப்ராயச்சித்தமாகாது. செய்த பாபம் வெகு த்ரவ்யத்தைச் செலவிட்டுப் பட்டினி பாரணைகளோடு ப்ராயச்சித்தம் செய்தால் தொலையுமென்பது சாஸ்த்ரம். செய்த குற்றத்தை மன்னிக்கவேணுமென்று அநுதாபத்துடன் தயையின் தயவைப் பிரார்த்தித்தால் தயை தானே ப்ராயச்சித்தமாக நின்று அது செய்யும் வேலையைச் செய்து பாபத்தைத் தொலைக்கிறாள். கற்பகக்கொடி ஸம்ஸார போகங்களைக் கொடுக்குமேயல்லாது ஸம்ஸாரத்தைத் தாண்ட உதவி செய்யாது. தயை நம்மை ஸம்ஸாரத்தைத் தாண்டும்படி செய்து அக்கரை சேர்ப்பிப்பாள். (14)

वृषगिरिगृहमेधिगुणा बोधबलैश्वर्यवीर्यशक्तिमुखाः ।
दोषा भवेयुरेते यदि नाम दये त्वया विनाभूताः ॥ १५ ॥

வ்ருஷகிரிக்ருஹமேதிகுணா போதபலைச்வர்யவீர்யசக்திமுகா: ।
தோஷா பவேயுரேதே யதி நாம தயே த்வயா விநாபூதா: ॥

(பதவுரை) ஹே தயே-ஓ தயையே, போதபலைச்வர்ய வீர்ய சக்தி முகா: – எக்காலத்திலும் எப்பொருளேயும் எல்லா வகையாலும் உண்மையாகக் காண்கையாகிற ஜ்ஞானம், எக்காலத்திலும் எல்லாப்பொருளையும் ச்ரமலேசமுமில்லாமல் தாங்குகையாகிற பலம், லோகத்திலுள்ள எல்லா சேதனு சேதனங்களையும் நியமிக்கையாகிற ஐச்வர்யம், தானே எல்லாப்பொருளுமாக பரிணமித்தாலும், எல்லாவற்றையும் தாங்கினாலும் எல்லாவற்றையும் உட்புகுந்து நியமித்தாலும் அவைகளிடத்திலிருக்குமவையும், அவைகளாலுண்டாகு மவையுமான ஓர் விகாரமுமில்லாமையாகிற வீர்யம், (அதாவது ஜடத்வபரிணமித்வாதிகளும் அஜ்ஞத்வ துக்கித்வாதிகளுமில்லாமை), ஒருவராலும் செய்யமுடியாத ஓர் கார்யத்தை தான் நினைத்தபோது முடிக்கையாகிற சக்தி, தன்னையொழிந்த எல்லோரையும் ஜயிக்கையாகிற தேஜஸ்ஸு இவை முதலிய, ஏதே-இந்த, வ்ருஷகிரிக்ருஹமேதி குணா: - வ்ருஷகிரியிலிருக்கின்ற ஜகத்குடும்பியான ஸ்ரீனிவாஸனுடைய குணங்கள், த்வயா விநாபூதா: - உன்னைவிட்டுப் பிரிந்தவைகளாக (உன்னோடு கூடாதவைகளாக) யதி நாம-இருக்குமாகில், தோஷா: – தோஷங்களாகவே, பவேயு: – ஆகிவிடும்.

“தயையே, வேங்கடமலையில் குடித்தனம் செய்யும் க்ருஹமேதியான ஸ்ரீனிவாஸனுடைய ஜ்ஞானம், பலம், ஐச்வர்யம், சக்தி முதலிய குணங்கள் உன்னோடுகூடியிராமல் உன்னைவிட்டு அகன்றிருந்தால் ஜனங்களுக்குக் கெடுதி உண்டாக்கும் தோஷங்களே ஆய்விடும்”

(தாத்பர்யம்) ஜ்ஞானம், சக்தி, முதலிய குணங்கள் தயையைவிட்டுப் பிரிந்தால் குற்றம் மிகுந்த நமக்குக் கெடுதலையே விளைவிக்கும். தயையில்லாதவனுக்கு சக்தி பலம், செல்வாக்கு முதலியதிருந்தால் அவனுடைய சக்தி பலம் முதலியது அநர்த்தத்தையே விளைவிக்கும். சக்தி பலம் அதிகமாயிருப்பவர்க்கு தயையும் இருந்தால் லோகத்

திற்கு உபகாரம் அதிகமாயிருக்கும். இதனுல் தயையோடு சேர்ந்தால்தான் சக்தி பலம் முதலிய குணங்கள் குணமாகும். இல்லாவிட்டால் தோஷமாகும். தயாகுணத்தின் சேர்க்கையால் மற்ற குணங்கள் குணமாக்கப்படும். ஆகையால் தயையே தாஞக குணமாகும் ஆதலால் தயையை ஸ்தோத்ரம் செய்யவேண்டியது ந்யாயம். வேங்கடமலையில் இருக்கும் குடும்பி என்று ஸ்ரீநிவாஸனைச் சொல்கிருர். ப்ரபஞ்சம் முழுமையும் ஸ்ரீனிவாஸனுடைய குடும்பம். குடும்பிக்கு தயையில்லாவிடில் அநர்த்தமே பெரிதாகும். (15)

आसृष्टिसन्ततानामपराधानां निरोधिनीं जगतः ।
पद्मासहायकरुणे प्रतिसञ्चरकेळिमाचरसि ॥ १६ ॥

**ஆஸ்ருஷ்டிஸந்ததாநாமபராதாநாம் நிரோதிநீம் ஜகத: ।**
**பத்மாஸஹாயகருணே ப்ரதிஸஞ்சரகேளிமாசரஸி ॥**

(பதவுரை) பத்மாஸஹாய கருணே-ஸ்ரீநிவாஸனுடைய தயையே, ஆஸ்ருஷ்டி ஸந்ததாநாம் - ஸ்ருஷ்டி காலம் தொடங்கி ஒழிவில்லாமல் பண்ணப்படுகின்ற, ஜகத: - இவ்வுலகிலுள்ள ஜனங்களுடைய, அபராதாநாம் - அபராதங்களுக்கு, நிரோதிநீம் - தடையாயிருக்கின்ற, ப்ரதிஸஞ்சர கேளிம்-ப்ரளயமாகிற விளையாட்டை, ஆசரஸி-நடத்துகிருய்.

"லக்ஷ்மீஸஹாயமான ஸ்ரீநிவாஸனுடைய தயையே, உலகம் படைத்தது முதல் தொடர்ந்து விஸ்தாரமாய் உலகத்தோர் செய்த பாபங்களையெல்லாம் நிரோதம் செய்வதற்காக ப்ரளயமாகிற ப்ரதிஸஞ்சரமென்னும் விளையாட்டை நீ ஆசரிக்கிருய்"

(தாத்பர்யம்) பெருமாள் தயைக்கு வசமாயிருந்தால். ப்ரளயம் என்பது எப்படிக்கூடும். ப்ரளயம் உலகத்தை அழிப்பதல்லவா? அந்த க்ரூரமான கார்யம் எப்படி தயாராஜ்யத்தில் ஸம்பவிக்கலாம்? இப்படி ஆக்ஷேபம் வர, முதலில் ப்ரளயம் தயாரூபமான கார்யம் என்று

நிர்வஹிக்கிறார். குழந்தைகள் அதிகமாக துஷ்டத்தனமே செய்துகொண்டு துஷ்ட நினைவு அடங்காமலிருந்தால் தாயார் அந்தக் குழந்தைகளை துஷ்டத்தனத்தை மறப்பதற்காகத் தூங்கச்செய்வாள். தூங்கினால் முன்பிருந்த துஷ்டத்தனம் கொஞ்சம் தணியும். உலகம் ஸ்ருஷ்டித்தது முதல் பாபமே மிகுதியாகச் செய்துவந்த ப்ராணிகளே ப்ரளயத்திற்கு முன் உலகத்தில் மிகுதியாயிருப்பவர். நல்வழியுள்ளவர் அதற்கு முன்பே முக்தியடைந்திருப்பர். முக்தியடையாமல் மிகுதியாயுள்ள கொடும் பாபிகள் துஷ்டவாஸனை தலைகொண்டுபோய் நல்வழியில் திரும்புவதற்கு இடமேயில்லாமலிருப்பர். அந்த துஷ்டர்களின் கொடிய துர்வாஸனையை மறக்கடிப்பதற்காக ப்ரளயமென்னும் நீண்ட தூக்கத்தை தயவினுல் தாய்போல ஸ்ரீநிவாஸன் செய்விக்கிருன் என்று கூறுகிறார். 'ப்ரதிஸஞ்சர' மென்பது திரும்பிப் பின் நடத்தல் என்பதையும் சொல்லும். ஸ்ருஷ்டியில் காரணப்பொருளிலிருந்து உலகம் வெளிப்பட்டு வரிசைக்கிரமமாய் முன்வரும். ப்ரளயத்தில் உலகம் பின்சென்று காரணப் பொருளுக்குள்ளே ஒடுங்கும். இங்கே பின் செல்லும் ப்ரளயத்தை ஒரு நர்த்தகியின் ப்ரதிஸஞ்சரகேளியாக ரூபிக்கிறார். நர்த்தன காலத்தில் நர்த்தகி முன் செல்வதும் பிறகு விலாஸத்துடன் பின் திரும்புவதும் விளையாட்டாகும். (16)

अचिदविशिष्टान् प्रलये जन्तूनवलोक्य जातनिर्वेदा ।
करणकलेवरयोगं वितरसि वृषशैलनाथकरुणे त्वम् ॥ १७ ॥

**அசிதவிசிஷ்டாந் ப்ரளயே ஜந்தூநவலோக்ய ஜாத நிர்வேதா ।**
**கரணகளேபரயோகம் விதரஸி வ்ருஷசைலநாத கருணே த்வம் ॥**

(பதவுரை) வ்ருஷசைலநாத கருணே-ஓ ஸ்ரீநிவாஸனின் தயையே, த்வம்-நீ, ப்ரளயே-ப்ரளய காலத்தில் அசிதவிசிஷ்டான்-அசேதனங்களைக்காட்டிலும் வேறுபாடில்லாத, ஜந்தூன்—சேதனர்களை, அவலோக்ய-பார்த்து, ஜாதநிர்

வேதா-ஜயோவென்று வெறுப்புள்ளவளாய் (அவர்களின் பொருட்டு) கரணகளேபரயோகப-இந்திரியங்கள், சரீரம் இவைகளுடைய ஸம்பந்தத்தை, விதரஸி-கொடுக்கிறாய்.

"வேங்கடகிரிநாதனுடைய காருண்யே, அசேதனத்தோடே அசேதனமாய் சேதனகுணமேயில்லாமல் ப்ரளயத்தில் கிடக்கும் ப்ராணிகளைப் பார்த்து ப்ரளயத்தில் இச்சையொழிந்து நீ அவர்கள் கடைத்தேறுவதற்காக ஜ்ஞானம் ப்ரஸரிக்க உபயோகமான இந்திரியங்கள் கூடிய களேபரமென்னும் சரீரத்தை அளிக்கிறாய்".

(தாத்பர்யம்) காரணப் பொருளைத்தான் ஸ்துதிசெய்ய வேண்டும் என்று சாஸ்த்ரம். தயையை ஸ்துதிசெய்ய அவள் ஜகத்துக்குக் காரணமென்று நிரூபிக்கவேணும். ஜகத்தின் ஸ்ருஷ்டி தயையினால் ஸ்ரீநிவாஸனைக் கொண்டு செய்விக்கப்படுகிறதென்று கூறுகிறார். ப்ரளயகாலத்தில் சேதனங்களும் அசேதநங்களும் ஒன்றுக்கொன்று பிரிவில்லாமல் ஒன்றாய்க் கிடக்கும். அறிவுள்ள சேதனம் அறிவற்ற அசேதனம்போலேயே ஜ்ஞாநத்திற்கே யோக்யதை இல்லாமல் கிடக்கும். ஜ்ஞானம் எல்லையில்லாமல் ப்ரஸரிக்கும் மோக்ஷதசைக்கு இந்தச் சேதனர்கள் யோக்யராயிருந்தும் அவர்கள் ஜடத்தோடு ஜடமாய்க் கிடப்பதைப் பார்த்துத் தாயாகிய தயாதேவிக்கு நிர்வேதம் பிறக்கிறது. அவளுக்கு நிர்வேதம் பிறந்ததும் உலகம் பிறக்கிறது என்று ஸூசிக்கிறார். தேகமிருந்தால்தான் தர்மங்களை அனுஷ்டிக்கவும் மோக்ஷத்திற்குவேண்டிய யோகங்களைச் செய்யவும் கூடும். இந்தச் சேதனர்கள் எப்படியாவது கர்மயோகம், ஜ்ஞாநயோகம், பக்தியோகம், ப்ரபத்தியோகம் முதலிய யோகங்களில் இறங்கி மோக்ஷத்தை அடையட்டுமென்று எண்ணி அவர்களுக்கு தேஹயோகத்தை ஸ்ருஷ்டி ஆரம்பத்தில் தயாதேவி கொடுக்கிறாள். இதனால் ஸ்ருஷ்டி ஒரு பெரிய கருணை என்பதும் ஸ்ருஷ்டி தயையினால் செய்விக்கப்படுகிற

வென்பதும் ஏற்படுகிறது. தயையே ஸ்ருஷ்டி காரணமாத லால் தயையை த்யாகம் செய்து ஸ்துதிக்கத் தட்டில்லை.

अनुगुणदशार्पितेन श्रीधरकरुणे समाहितस्नेहा ।
शमयसि तमः प्रजानां शास्त्रमयेन स्थिरप्रदीपेन ॥ १८ ॥

**அநுகுண தசார்ப்பிதேந ஸ்ரீதர கருணே ஸமாஹித ஸ்நேஹா !**
**சமயஸி தம: ப்ரஜாநாம் சாஸ்த்ரமயேந ஸ்திரப்ரதீபேந ॥**

(பதவுரை) ஸ்ரீதர கருணே - ஸ்ரீனிவாஸனுடைய கருணையே! ஸமாஹிதஸ்நேஹா - (ஆச்ரிதர் பக்ஷலில்) ப்ரீதியை விசேஷித்துப் பண்ணுகிற (ஸம்பூர்ணமாகச் சேர்க்கப்பட்ட தைலத்தையுடைய) நீ, அனுகுண தசார்ப்பிதேந-அனுகூலமான ஸத்வகுணமுள்ள அவஸ்தையில் கொடுக்கப்பட்ட (நூல்களாலே செய்யப்பட்ட திரியில் ஏற்றப்பட்ட), சாஸ்த்ரமயேன - சாஸ்த்ரமாகிற, ஸ்திரப்ரதீபேன - ஸ்திரமான தீபத்தினுல், ப்ரஜாநாம் - ஜனங்களுடைய (குழந்தைகளுடைய), தம: - அஜ்ஞானத்தை (இருளை), சமயஸி - போக்கடிக்கிறாய்.

“ஸ்ரீநிவாஸனுடைய கருணையே! ஸ்நேஹத்தை (எண்ணையை) நிரம்பவைத்து ஸரியான தசையில் (திரியில்) ஏற்றி வைத்த சாஸ்த்ரமயமான ஸ்திரமான தீபத்தினுல் ப்ரஜைகளுக்கு இருட்டைப் போக்குகிறாய்”.

(தாத்பர்யம்) வேதங்களில் சொல்லுகிற கிரமப்படி முதலில ப்ரளயத்தையும் பிறகு ஸ்ருஷ்டியையும் தயையின் கார்யமாகக் கூறினார். ஜகத்தை ஸ்ருஷ்டிக்க ஆரம்பித்த பிறகு ப்ரஹ்மதேவனை ஸ்ருஷ்டித்து அவருக்கு வேதங்களை உபதேசித்து அவர் மூலமாக உலகத்திற்கு சாஸ்த்ரங்களை ஈச்வரன் கருணையால் கொடுக்கிறார்.

சாஸ்த்ரங்களைக் கொண்டுதான் நாம் நமது ஆத்மாவை ரக்ஷித்துக் கொள்ளக்கூடும். தேஹத்தின் ரக்ஷணத்தைவிட ஆத்மரக்ஷணமே பேருதவியாகும். ப்ரளயத்தையும்

ஸ்ருஷ்டியையும் சொல்லிவிட்டு ரக்ஷணத்தைச் சொல்லு மிடத்தில் ஆத்மா உஜ்ஜீவிப்பதற்கு உபயோகமான சாஸ்த்ரத்தைக் கொடுப்பதையே தயையின் பேருதவியாகக் கூறுகிறார். அதீந்த்ரியமான பொருள்களை சாஸ்த்ரமொன்று தான் விளக்கிக் காட்டும். மனதில் இருட்டையும் ஜ்ஞானத்தை மறைக்கும் தமோகுணத்தையும் நம்முடைய மனதில் ஏற்றிவைக்கப்படும் சாஸ்த்ரமென்கிற ப்ரகாசமான விளக்குதான் அகற்றும். ஆழ்வார் கூறியபடி 'சுடர்மிகு சுருதி' இந்த ஜ்ஞானப்ரதீபமாகும். ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் உத்தரசதகத்தின் முதல் சுலோகத்தில் இருட்டைப் போக்கவும் ஸத்தையும் அஸத்தையும் பகுத்தறியவும் ப்ரதீபம் போன்ற சாஸ்த்ரப்ரமாணத்தைக் காருணிகனான பகவான் அளிக்கிறார் என்று கூறியதை இந்த சுலோகம் அநுஸரிக்கிறது. பட்டரும், கிராதார்ஜுநீயம் என்னும் மஹாகாவ்யத்தில் பாரவி என்னும் கவி, புத்தியானது இருளடையும் பொழுது நன்றாய் ப்ரகாசிக்கும் பரிசுத்தமான சாஸ்த்ரமென்னும் தீபம் பொருள்களை உள்ளபடி காட்டும் என்று கூறியதை அநுஸரித்தார். இங்கே சாஸ்த்ரத்தை விளக்காகக் காட்ட தயாதேவியின் நிறைந்த ஸ்நேஹத்தை விளக்குக்கு வேண்டிய நிறைந்த எண்ணெயாகவும், புத்தி ஸரியான தசையில் உள்ளபொழுது சாஸ்த்ர விளக்கை ஏற்றிவைக்க வேண்டியபடியால் அந்த தசையைப் பரிசுத்தமான திரியாகவும் காட்டுகிறார். ப்ரஜைகளென்பது சிசுக்களைச் சொல்லும். சிறிய சிசுக்கள் உறங்கும் அறையில் இரவு முழுவதும் ஸ்திரமாய் எரியும்படி எண்ணெயை நிரம்ப விட்டு ஸரியான திரியில் விளக்கை ஏற்றிவைப்பதுபோல் தயையென்னும் தாய் தன் குழந்தைகளுக்கு ஸம்ஸார இருளில் இருட்டை அகற்ற சாஸ்த்ரமென்னும் ஸ்திரமான விளக்கை ஏற்றிவைக்கிறாளென்பது கருத்து. சாஸ்த்ரமயமான விளக்கென்றதால் சாஸ்த்ரத்தையே மிகுதியாகவும் சாஸ்த்ரத்துக்கு விரோதமில்லாத தர்க்கங்களையும் யுக்திகளையும் இடையிடையே உள்ள தீபமென்பது கருத்து.

ஸ்திரமான தீபமென்பதால் கேவலமான தர்க்கத்தைப்போல் ப்ரதிஷ்டிதமல்லாமலும் சஞ்சலமுயுமிராமல் அசைக்கக் கூடாத ச்ரத்தையால் ஸ்திரமாய் ப்ரகாசிக்கும் என்பது கருத்து. (18)

रूढा वृषाचलपतेः पादे मुखकान्तिपत्रलच्छाया ।
करुणे सुखयसि विनतान् कटाक्षविटपैः करापचेयफलैः ॥

ரூடா வ்ருஷாசலபதே: பாதே முககாந்திபத்ரலச்சாயா ।
கருணே ஸுகயஸி விநதாந் கடாக்ஷவிடபை: கராப
சேயபலை: ॥

(பதவுரை) கருணே-தயையே, வ்ருஷாசலபதே: – திருமலைக்குடையவனுன ஸ்ரீநிவாஸனுடைய, (வ்ருஷமென்ற ஒரு உயர்ந்த பர்வதத்தினுடைய), பாதே - திருவடியில் (தாழ்வரையில்), ரூடா-முளைத்தவளும், முககாந்தி பத்ரலச்சாயா-(ஸ்ரீநிவாஸனுடைய) முகத்தின் ஒளியாகிற இலைகள் நிரம்பியதாலுண்டான சோலையை உடையவளுமான நீ, கராபசேயபலை: – கைகளால் பறிக்கத் தகுந்த பழங்களை (தர்மார்த்தகாமங்களை) உடையவைகளான, கடாக்ஷவிடபை: – ஸ்ரீநிவாஸனின் கடாக்ஷங்களாகிற கிளைகளாலே, விநதாந் – வணங்கினவர்களை (உயரமில்லாதவர்களை) ஸுகயஸி-ஸந்தோஷப்படுத்துகிறாய்.

"ஏ கருணையே! வேங்கடமலையரசன் திருவடியில் முளைத்து வளர்ந்து அவருடைய 'பச்சைமாமலைபோல் மேனியின்' திருமுகத்தின் நீலகாந்திகளாகிய இலைகளால் நிறைந்த வ்ருக்ஷமாகிய நீ உன்னை வணங்கி உன் நிழலை அடைந்தவர்களுக்குக் கையால் பறிக்கக்கூடிய பழங்கள் தொங்கும் நீலகடாக்ஷமென்னும் கிளைகளால் ஸுகப்படுத்துகிறாய்"

(தாத்பர்யம்) கருணையை வேங்கடமலைமேல் பெருமாள் திருவடியாரத்தில் முளைத்து வளர்ந்து ஓங்கிய பச்சைமரமாக நிருபிக்கிறார். பகவான் தன்னுடைய மேகவர்ண

மான திருமுகமண்டலத்தால் தன் திருவடியில் முளைக்கும் தயை யென்னும் வ்ருக்ஷத்தைக் குளிர நோக்குகிறபொழுது அங்கிருந்து கீழே விழும் நீலகாந்திகள் இந்த வ்ருக்ஷத்திற்கு தலையிலுள்ள பசுமையான அடர்ந்த தழைகளாகி குளிர்ந்த நிழலைக்கொடுக்கும். பகவானுடைய கடாக்ஷங்கள் இந்த வ்ருக்ஷத்தின் கிளைகளாகும். இந்த வ்ருக்ஷத்தில் புருஷார்த்த மென்னும் பழங்கள் நிரம்ப உண்டு. இந்த தயையை வணங்கி தரையில் ஸாஷ்டாங்கமாய் நமஸ்காரம் செய்கிற வர்கள் தரையோடு தரையாய்க் கிடக்கும் ஸ்திதியிலேயே தங்களுக்கு வேண்டிய பழங்களைக் கையால் பறித்துக் கொள்ளும்படி பழங்கள் கருணையால் அவ்வளவு தாழத் தொங்கும். தயை ஆச்ரிதர்களை ஸுகப்படுத்துகிறாள் என்று சொல்வதால் தயை என்பது பிறர் துக்கத்தைப்பார்த்து தனக்கு உண்டாகும் துக்கம் என்று சிலர் சொல்லுகிறபடி ஒருகால் துக்கரூபமாயிருந்தாலும் அவளை ஆச்ரயித்தவர் களுக்கு அவள் ஸுகத்தையே கொடுப்பாள் என்பது திண்ணம். (19)

नयने वृषाचलेन्दोस्तारामैत्रीं दधानया करुणे ।
दृष्टस्त्वयैव जनिमानपवर्गमकृष्टपच्यमनुभवति ॥ २० ॥

**நயநே வ்ருஷாசலேந்தோஸ்தாராமைத்ரீம் ததாநயா கருணே!**
**த்ருஷ்டஸ்த்வயைவ ஜநிமாநபவர்கமக்ருஷ்டபச்ய மநுபவதி ॥**

(பதவுரை) கருணே - ஓ தயையே, வ்ருஷாசலேந்தோ: - திருமலையில் பூர்ண சந்திரன்போல் விளங்கும் ஸ்ரீநிவாஸ னுடைய நயனே - திருக்கண்ணில், தாராமைத்ரீம் - கருவிழி யின் ஸ்நேஹத்தை (பத்னியின் ஸ்நேஹத்தை) ததாநயா - தரிக்கின்ற, த்வயா - உன்னால், த்ருஷ்ட: - பார்க்கப்பட்ட, ஜநிமாநேவ - ஜன்மமுடையவனே, அக்ருஷ்டபச்யம் - உழப் படாத பூமியில் பலிப்பதான, அபவர்க்கம் - மோக்ஷத்தை, அனுபவதி - அனுபவிக்கிறான்.

"ஓ கருணையே! வேங்கடமலைமேல் உதித்த சந்த்ர னுடைய திருக்கண்களில் தாராமைத்ரீ என்னும் அத்ருஷ்ட

வசமான அருள் நிறைந்த ஸ்நேஹத்தை உண்டுபண்ணும் உன்னால் குளிர்ந்த கடாக்ஷத்தோடு பார்க்கப்பட்டு பிறவி அடைகிறவன் உழவு முதலிய பயிர்த்தொழில் ச்ரமமன்னி யில் மோக்ஷமென்னும் பலத்தை அநுபவிக்கிறான்".

(தாத்பர்யம்) ஸ்ரீநிவாஸனை வேங்கட மலைமேல் நித்யோதிதனை சந்த்ரனாக நிரூபிக்கிறார். அபராதிகளான நமக்கு பகவானுடைய ஸ்நேஹமுண்டாவதற்கு யாதொரு ஸுக்ருதமும் இல்லை. காரணத்தையே நோக்காமல் நிர்ஹேதுகமாக கேவலம் அத்ருஷ்டவசத்தால் தானாக உண்டாகும் ஸ்நேஹத்தை முகம் விழித்த வேளை என்றும் தாராமைத்ரீ என்றும் சக்ஷுராகம் என்றும் சொல்லுவர். தாரை என்றால் நக்ஷத்ரம். நக்ஷத்ர பலத்தால் ஏற்படும் ஸ்நேஹம் த்ருஷ்டமான காரணத்தை எதிர்பாராது. நம மிடத்தில் ஸ்ரீநிவாஸனுடைய கண்களுக்கு காரணமன்றியில் தாராமைத்ரீ என்னும் ஸ்நேஹம் ஸஹஜமாயுண்டாகும்படி தயாதேவி செய்விக்கிறாள். தயாதேவியின் கடாக்ஷம் நம பேரில் விழவே அதை அநுஸரித்து ஸ்ரீநிவாஸனுடைய குளிர்ந்த கடாக்ஷம் அதே காலத்தில் நம்மீது விழும். நாம் பிறக்கும்பொழுது தயாகடாக்ஷம் விழுந்தால் ஸ்ரீநிவாஸ கடாக்ஷமும் கூட விழுந்து நாம் ஸாத்விகராகி மோக்ஷத்தை ச்ரமமன்னியில் அவனுடைய அருளாலேயே அடையலாம். தனிமுதலாய் முளைக்கும் செடி தோட்டக்காரனுடைய க்ருஷியில்லாமல் தெய்வம் வர்ஷிக்கும் மழை முதலியதாலும் நதிப்ரவாஹம் முதலியதாலும் செழித்து வளர்ந்து பல தசையை அடையும். அடுத்த சுலோகத்தில் ஸ்ரீநிவாஸன் சரணாகதர் என்னும் பயிர்களைப் பயிரிட்டு வ்ருத்தி செய்வதற்காக ஜலம் நிறைந்த அருவிகளையுடைய திருமலை மேல் ஒரு பயிர்த்தொழிலாளியாக அவதரித்து நிற்கிறா னென்று கூறப்போகிறார். உழுது பயிரிடுகிற ச்ரமம் நமக் கில்லாமல் தயாதேவியின் ஸஹாயத்தால் அவனே நாம் மோக்ஷத்திற்காகச் செய்யவேண்டிய க்ருஷியைச் செய்து நமக்கு க்ருஷி ச்ரமமன்னியில் மோக்ஷமென்கிற பலம்

கிடைக்கும்படி செய்கிறனென்பது கருத்து. பக்தி என்பது க்ருஷியாகும். அந்த ச்ரமமன்னியில் சரணாகதர்கள் விஷயத்தில் தயையின் அருளால் ஸ்ரீநிவாஸன் தானே அந்த ச்ரமத்தை ஏற்றுக்கொண்டு பலம் கைகூடும்படி செய்கிறன். (20)

समयोपनतैस्तव प्रवाहैरनुकम्पे कृतसंप्लवा धरित्री ।
शरणागतसस्यमालिनीयं वृषशैलेशकृषीवलं धिनोति ॥ २१ ॥

ஸமயோபநதைஸ்தவ ப்ரவாஹைரநுகம்பே க்ருத
ஸம்ப்லவா தரித்ரீ ।
சரணாகதஸஸ்யமாலிநீயம் வ்ருஷசைலேசக்ருஷீவலம்
திநோதி ॥ (21)

(பதவுரை) அநுகம்பே-ஓ தயையே! ஸமயோபநதை:-உசித காலங்களில் ப்ரவஹித்துவரும், தவ-உன்னுடைய, ப்ரவாஹை:-ப்ரவாஹங்களாலே, க்ருதஸம்ப்லவா-நனைக்கப்பட்டதும், (ஆகையினலேயே) சரணாகதஸஸ்யமாலிநீ-சரணாகதர்களாகிற பயிர்களுடைய வரிசைகளுடன் கூடியதுமான, இயம்-இந்த, தரித்ரீ-பூமியானவள், வ்ருஷசைலேச க்ருஷீவலம்-ஸ்ரீநிவாஸனுகிற க்ருஷீவலனை (பயிரிடுபவனை), திநோதி-ஸந்தோஷிப்பிக்கிறள்.

"தயையே! ஸமயத்தில் (காலத்தில்) வரும் உனது ப்ரவாஹங்களால் ஜலம் நிறைந்த பூமியானவள் சரணாகதரென்னும் பயிர்களை மாலையாய் அணிந்துகொண்டு வேங்கடமலைக்கு அதிபதியாகிய பயிராளியை ஸந்தோஷப்படுத்துகிறள்".

(தாத்பர்யம்) ஏலக்காய், தேயிலை முதலிய செடிகளைப் பயிரிடுவதற்காகப் பயிராளிகள் மலைகளில் வாஸம் செய்துகொண்டு பயிரிடுவார்களென்பது ப்ரஸித்தம். சரணாகதரென்னும் பயிர்களை பயிரிட்டு வ்ருத்தி செய்வதற்காக வேங்கடமலையில் பெருமாள் குடியிருப்பதாகவும், வடமாமலையின் உச்சியாகிய தம்மிடமிருந்து ப்ரவஹிக்கும்

தயாப்ரவாஹங்களால் பூமியெல்லாம் வெள்ளமிட்டோடி, சரணாகதரென்னும் பயிர்கள் மாலை மாலையாகக் கிளம்பி செழித்து அந்த மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட பூமிதேவியைக்கண்டு வேங்கடமலையரசன் மகிழ்ச்சி அடைகிறான். இங்கே ஸமயத்தால் வரும் தயாப்ரவாஹங்கள் என்று சொல்லியிருப்பது உடையவர் ஸமயமாகிய சரணாகதி தர்சனத்தையும் சொல்லும். ஸமயமென்பதற்கு உசித காலமென்றும், தர்சனம் என்றும் பொருள். இரண்டு அர்த்தங்களையும் இங்கே கொள்ளவேணும். உடையவர் தர்சனம் ஏற்பட்டபிறகு சரணாகதர்கள் கூட்டம் கூட்டமாகப் பெருகி அவர்களால் பூமி நிறைந்து பூதேவி மகிழ்ச்சி அடைகிறாள். பாபிகளைச் சுமந்து அந்தச்சுமை தாங்க மாட்டாமல் தன் பாரத்தைக் குறைக்கவேண்டுமென்று பூமி தன் நாதனிடம் முறையிட்டுக்கொள்ள, அவள் சுமையைக் குறைப்பதற்காகவே அவர் அடிக்கடி அவதாரம் செய்வதுண்டு. இப்பொழுது உடையவர் ஸமயம் ஏற்பட்ட பிறகு சரணாகதர் என்னும் புண்யவான்களால் பூமி நிறைய அவள் அதனால் மகிழ, அவள் மகிழ்ச்சியைக் காணும் அவள் நாதனும் மகிழ்கிறார். உடையவர் ஸமயம் தயாஸமயமாகும். தயாபரிபாக ஸமயத்தில் தயாப்ரவாஹங்கள் வெள்ளமிட்டோடி சரணாகதர் என்னும் பயிர்களை வ்ருத்தி செய்யும். சரணாகதப் பயிர் மாலைகளால் பூமிதேவி அலங்கரிக்கப்பட்டு மகிழ்வது அவள் நாயகனான வேங்கடேசனையும் மகிழச் செய்கிறது. (21)

**कलशोदधिसम्पदो भवत्याः करुणे सन्मतिमन्थसंस्कृतायाः ।**
**अमृतांशमवैमि दिव्यदेहं मृतसञ्जीवनमञ्जनाचलेन्दोः ॥**

**கலசோததிஸம்பதோ பவத்யா: கருணே ஸந்மதிமந்த**
**ஸம்ஸ்க்ருதாயா: ।**
**அம்ருதாம்சமவைமி திவ்யதேஹம் ம்ருதஸஞ்ஜீவந**
**மஞ்ஜநாசலேந்தோ: ॥ (22)**

(பதவுரை) கருணே-ஓ கருணையே ! ம்ருதஸஞ்ஜீவனம்-இறந்தவர்களைப் பிழைப்பிக்கும், அஞ்ஜனாசலேந்தோ:-

அஞ்ஜனமலையிலிருக்கும் (ஸ்ரீநிவாஸனென்கிற) சந்திரனுடைய, திவ்யதேஹம்—அப்ராக்ருதமான திருமேனியை ஸந்மதி மந்த்தஸம்ஸ்க்ருதாயா:—ச்ரேஷ்டமான பகவத் ஸங்கல்ப மாகிற மத்தினாலே கடையப்பட்டவளும், கல்சோததிசம் பத:—க்ஷீரஸமுத்திரத்தினுடைய சோபையை உடையவளு மான, பவத்யா:—உன்னுடைய, அம்ருதாம்சம்—அம்ருத மென்கிற சாராம்சமாக, அவைமி—எண்ணுகிறேன்.

"கருணையே! அஞ்ஜநமலையில் சந்திர பிம்பம்போல விளங்கும் ஸ்ரீநிவாஸனுடைய ம்ருதஸஞ்ஜீவினி போன்ற திவ்ய திருமேனியை நன்மதி என்னும் மத்தினால் கடையப் பட்ட பாற்கடல்போன்ற உன்னுடைய அம்ருதமென்னும் ஸாராம்சமாக நினைக்கிறேன்".

(தாத்பர்யம்) பூமிதேவிக்கு சரணாகதமாலையைச் சூட்டிப் பெருமாளுக்கு மகிழ்ச்சியென்னும் உபகாரத்தை தயை செய் வதாக முன் சுலோகத்தில் கூறினார். இங்கே ஸ்ரீநிவாஸ னுடைய திவ்யமங்கள விக்ரஹம் தயாதேவி கடைந்தெடுத்த அம்ருதஸாரம் என்கிறார். வெண்மையான தயா ப்ரவாஹமே ஒரு பாற்கடலாகும். அந்தப்பாற்கடல் தயையாலேயே கடையப்படுகிறது அப்படிக் கடைவதில் சக்கையைத்தள்ளிக் கேவலம் ஸாராம்சம் மட்டும் ஸ்ரீநிவாஸனுடைய விக்ரஹமாகத் திரண்டு வந்ததுபோலும். இந்த தயாஸமுத்திரத்தைக் கடைவதற்குச் சுபமான ஸங்கல்பமே மத்தாகும். யாருடைய ஸங்கல்பமென்று இங்கே குறிப்பிடவில்லை. அதனால் தயை யினுடைய ஸங்கல்பத்தையும், ஸ்ரீநிவாஸனுடைய ஸங்கல் பத்தையும், பக்தர்களான தமர்களுடைய ஸங்கல்பத்தையும் கொள்ளலாம். தமருகந்த உருவத்தைத் தானும் உகந்தானாய், தன்னிச்சையினால் ஆச்ரிதர்களைக் காக்கத் தாம் திவ்யமங்கள விக்ரஹத்துடன் அவதரிப்பதாக கீதையில் தமது வார்த்தை. பெருமாளுடைய விக்ரஹம் ம்ருதப்ராயரான ஆத்மாக்களை உயிர்ப்பிக்கும். அந்த விக்ரஹ தர்சனமாத்ரத்தால் கலியும் கெடும். கருணையுமான தயை

தன்னையே கடைந்து கொள்ளுகிறுள். வேறொருவரைக் கடையாள். பாற்கடலைக் கடைய அதில் சந்திரன் உதித்தான். தயையென்னும் பாற்கடலைக் கடைய ஸ்ரீநிவாஸனென்னும் சந்திரன் உதித்தான் மதியென்னும் மத்தினால் சாஸ்த்ரமென்னும் கடலைக் கடைய மஹாபாரதமென்னும் சந்திரன் உதித்ததாகப் பாரதத்தில் கூறப்பட்டுள்ளது. (22)

जलधेरिव शीतता दये त्वं वृषशैलाधिपतेस्स्वभावभूता ।
प्रलयारभटीनटीं तदीक्षां प्रसभं ग्राहयसि प्रसत्तिलास्यम् ॥

ஜலதேரிவ சீததா தயே த்வம் வ்ருஷசைலாதிபதே:
ஸ்வபாவபூதா ।
ப்ரளயாரபடீ நடீம் ததீக்ஷாம் ப்ரஸபம் க்ராஹயஸி
ப்ரஸத்திலாஸ்யம் ॥ (23)

(பதவுரை) ஹே தயே-ஓ தயாதேவியே, ஜலதே:-ஸமுத்ரத்திற்கு, சீததா இவ-குளிர்ச்சிபோல, வ்ருஷசைலாதிபதே:-ஸ்ரீநிவாஸனுக்கு, ஸ்வபாவபூதா-இயற்கையாக இருக்கின்ற, த்வம்-நீ, ப்ரளயாரபடீநடீம்-ப்ரளயமாகிற உத்ததநர்த்தனத்தில் நர்த்தகியாக இருக்கும், ததீக்ஷாம்-அந்த ஸ்ரீநிவாஸனுடைய ஈக்ஷையை (ஸங்கல்பத்தை) ப்ரஸபம்—பலாத்காரமாக, ப்ரஸத்திலாஸ்யம் - ஸ்ருஷ்டி ப்ரவ்ருத்தியாகிற (அல்லது அநுக்ரஹமாகிற) ஸுகுமார நர்த்தனத்தை, க்ராஹயஸி-க்ரஹிக்கும்படி செய்கிருய்.

" தயையே! ஸமுத்ரத்திற்குக் குளிர்ச்சி எப்படி ஸ்வபாவமோ, அப்படியே வேங்கடமலையரசனுக்கு நீ ஸ்வபாவமானவள். ப்ரளயகாலத்தில் தலைவிரிகோலமாய்க் கூத்தாடும் அவருடைய கொடும பார்வையென்னும் நர்த்தகியை நீ பலாத்காரமாக அந்தக் கொடுமையான ஆட்டத்திலிருந்து, திருப்பி ஸ்ருஷ்டி என்னும் ம்ருதுவான ப்ரஸந்நநர்த்தனத்தில் ப்ரவர்த்திக்கச் செய்கிருய்".

(தாத்பர்யம்) குளிர்ச்சி என்பது ஜலத்தின் ஸ்வபாவம். ஜலத்தை எவ்வளவு சுடக்காய்ச்சினாலும் அது மறுபடியும்

குளிர்ந்துபோகும். அப்படியே திருவேங்கடமுடைய னுடைய திருவுள்ளத்திற்குக் குளிர்ந்த குணமுடைய தயை தான் ஸ்வபாவம். நம்முடைய கொடிய அபராதங்களா நாம் அந்தத் திருவுள்ளத்தை எவ்வளவு சுடச்செய்தாலு சீக்கிரம் கொதிப்பு நீங்கிக் குளிர்ந்து தயை என்னு ஸ்வபாவத்தன்மையை அடையும். ப்ரளயகாலத்தில் கோ மாக உலகத்தையெல்லாம் அழிக்கும் க்ரூரமான த்ரு டியை, அந்தக் கோபத்தையெல்லாம் தன் வலிமையினு மாற்றி ஸ்ருஷ்டி காலத்திலுள்ள குளிர்ந்த கடாக்ஷமா தயை செய்விக்கிருள். (2

प्रणतप्रतिकूलमूलघाती प्रतिघः कोऽपि वृषाचलेश्वरस्य ।
कलमे यवसापचायनीत्या करुणे किङ्करतां तवोपयाति ॥

ப்ரணதப்ரதிகூலமூலகாதீ ப்ரதிக: கோzபி வ்ருஷா
சலேச்வரஸ்ய
களமே யவஸாபசாய நீத்யா கருணே கிங்கரதாம்
தவோபயாதி ॥ (24

(பதவுரை) கருணே! - ஓ கருணையே, ப்ரணதப்ரதிகூல மூலகாதீ-ஆச்ரிதர்களின் விரோதிகளை வேருடன் அறுக் கின்ற, கோபி-விலக்ஷணமான, வ்ருஷாசலேச்வரஸ்ய- ஸ்ரீநிவாஸனுடைய, ப்ரதிக:- கோபமானது, களமே-நெல் பயிர் விஷயத்தில், யவஸாபசாயநீத்யா-களை பிடுங்குகிற ந்யாயத்தால், தவ-உனக்கு, கிங்கரதாம்-சேஷமாயிருக்கும் தன்மையை, உபயாதி-அடைகிறது.

"தன்னை ஆச்ரயிப்பவர்களுக்கு ப்ரதிகூலமானவர்களை வர்ணனைக்கு அடங்காத வேங்கடேச்வர னுடைய கோபம் பயிர் வயல்களில் களைபிடுங்கும் ந்யாயத் தைப்போல், கருணையே, உனக்கு ஊழியஞ்செய்கிறது".

(தாத்பர்யம்) இந்த சுலோகத்தில் கூறும் த்ருஷ்டாந்தம் மிக்க அழகானது. நெல் பயிரொன்றுக்கு அநேகக் களைகள் விரோதிகளாகும். களைகளை வேரோடு பிடுங்கி எரியா

விட்டால் பயிரழிந்துபோகும். களை பிடுங்குவது நெல் பயிரின் வ்ருத்திக்காகவே ஒழிய களைகளை அழிக்கவேண்டு மென்பது முக்கிய நோக்கல்ல. ஸாதுக்களைப் பரித்ராணம் செய்யவும், துஷ்க்ருத்துக்களை விநாசம் செய்யவும் பகவான் அவதாரம் செய்வதாகக் கீதையில் கூறப்பட்டதற்கு ஸாதுக்களை ரக்ஷிப்பதே முக்யமான உத்தேசமென்றும், அதற்கு உதவியாக அவர்களுடைய சத்ருக்களை ஸம்ஹாரம் செய்வதே ஒழிய அதில் முக்யக் கருத்தில்லை என்றும் அர்த்தம் பயிரிடும் குடியாக வேங்கடேசனை வர்ணிக்கிற படியால் அவருடைய மஹிஷியாகிய தயாதேவிக்கு நன்றாய் அநுபவத்திற்கு வரக்கூடிய வேளாண்மை விஷயமாக த்ருஷ்டாந்தம் கூறுகிறார். களைகளை வேரோடு பிடுங்குவது போல் சத்ருக்களைச் சேஷமன்னியில் வேறுடறுக்க வேணும். ஆச்ரிதவிரோதிகள் விஷயத்தில் கிளம்பின அடங்காத கோபம் தயைக்குள் ஊழியக்காரனாக அடங்கி ஆச்ரிதரக்ஷணம் என்னும் தயா கார்யத்தைச் செய்கிறது களையை விரல் நுனியாலும் நகங்களாலும் அநாயாஸமாகப் பிடுங்கி எறிவதுபோல் தசகண்டன் ஹிரண்யன் முதலிய ப்ரபல சத்ருக்களை அங்குள்யக்ரத்தாலும் நகத்தாலும் கிள்ளி எறியக்கூடிய ஸாமர்த்தியமும் இந்த த்ருஷ்டாந்தத்தால் ஸூசிக்கப்படுகிறது. (24)

अबहिष्कृतनिग्रहान् विदन्तः कमलाकान्तगुणान् स्वतन्त्रतादीन् ।
अविकल्पमनुग्रहं दुहानां भवतीमेव दये भजन्ति सन्तः ॥ २५ ॥

**அபஹிஷ்க்ருதநிக்ரஹாந் விதந்த: கமலாகாந்தகுணாந்**

**அவிகல்பமநுக்ரஹம் துஹாநாம் பவதீமேவ தயே**
**பஜந்தி ஸந்த: ॥ (25)**

(பதவுரை) ஹே தயே-ஓ தயையே, ஸ்வதந்த்ரதாதீந்-ஸ்வாதந்த்ர்யம் முதலிய, கமலாகாந்தகுணான்-ஸ்ரீநிவாஸ ...டைய குணங்களை, அபஹிஷ்க்ருதநிக்ரஹாந்-வெளியேற்றப்

படாத நிக்ரஹத்தையுடையவையாக, (அதாவது அநுக்ரஹத்திற்குப் போல நிக்ரஹத்திற்கும் பொதுவானதாக) விதந்த:-அறிந்திருக்கும், ஸந்த:-ஸாதுக்கள், அவிகல்பம்-வேறுபக்ஷத்திற்கு (அதாவது நிக்ரஹபக்ஷத்திற்கு) இடமில்லாமல், அநுக்ரஹப-அநுக்ரஹத்தையே, துஹாநாம்-கறக்கின்ற, பவதீமேவ-உன்னையே, பஜந்தி-அடைகிறார்கள்.

"ஸ்வாதந்த்ரியம் முதலிய லக்ஷ்மீகாந்தனுடைய குணங்கள் தண்டிக்கும் என்கிற நிக்ரஹத்தை விலக்காதன வென்று அறிந்து தயையே! வேறுபாடில்லாமல் அநுக்ரஹத்தையே எப்பொழுதும் சொறியும் உன்னையே, ஸத்துக்கள் பஜநம் செய்கிறார்கள்."

(தாத்பர்யம்) தயையைத் தவிர மற்ற குணங்கள் ஐச்வர்யமுறைமையில் குற்றம் செய்தவர்களைத் தண்டிக்க வேண்டிய அவச்யத்தினால் நிக்ரஹமென்பதை அடியோடு தள்ளமாட்டாது. ஸ்வாதந்த்ரியமென்பது ஐச்வர்யகுணம், ஆஜ்ஞையை மீறுகிறவர்களைத் தண்டனைக்குள்ளாக்காமல் ப்ரபுத்வம் நடக்கமாட்டாது. நிக்ரஹத்துக்கு எதிர்த்தட்டானது அநுக்ரஹம். அன்பும் பொறுமையுமே ஸ்வரூபமான தயாதேவி நிக்ரஹமென்பதை அடியோடு பஹிஷ்காரம் செய்து அநுக்ரஹத்தையே பால்போல் சொரிகிறாள். நிக்ரஹத்தை அடியோடு பஹிஷ்காரம் செய்தால்தான் குற்றமுள்ள நம்மை ஸ்வீகாரம் செய்யக்கூடும். நிக்ரஹத்தை ஸ்வீகாரம் செய்தால் நமக்கு பஹிஷ்காரம்தான் ஏற்படும். ஆகையால் புத்திமான்களான ஸத்துக்கள் நிக்ரஹத்தை அடியோடு தள்ளி அநுக்ரஹத்தையே ஸ்வபாவமாக உடைய உன்னையே ஆச்ரயிக்கிறார்கள். (25)

कमलानिलयस्त्वया दयालुः करुणे निष्करुणा निरूपणे त्वम्
अत एव हि तावकाश्रितानां दुरितानां भवति त्वदेव भीतिः ॥

**கமலாநிலயஸ்த்வயா தயாளு: கருணே நிஷ்கருணா**
**நிரூபணே த்வம்।**

அத ஏவ ஹி தாவகாச்ரிதாநாம் துரிதாநாம் பவதி
த்வதேவ பீதி: ॥ (26)

(பதவுரை) கருணே - தயையே!, கமலாநிலய:- ஸ்ரீநிவாஸன், த்வயா — உன்னால், தயாளு:-தயையுள்ளவனாகிறான். நிரூபணே-நன்கு ஆலோசித்துப் பார்க்குமளவில், த்வம்-நீ, நிஷ்கருணா — தயையில்லாதவளாகிறாய். அத ஏவஹி- ஆகையினால்தானன்றோ, தாவகாச்ரிதாநாம்-உன்னை ஆச்ரயித்திருப்பவரை ஆச்ரயித்திருக்கும், துரிதாநாம்-பாபங்களுக்கு, த்வதேவ - உன்னிடமிருந்தே, பீதி:-பயம், பவதி- உண்டாகிறது.

"கருணையே! ஸ்ரீநிவாஸன் உன்னால் தயாளுவாகிறான். நிரூபித்துப் பார்த்தால் உனக்குக் கருணையில்லை என்று ஏற்படுகிறது. உனக்கு இரக்கமில்லை என்று உன்னை ஆச்ரயித்தவர்களுடைய பாபங்கள் உன்னிடமிருந்துதான் நடுங்குகின்றன."

(தாத்பர்யம்) பாபங்கள் ஸ்ரீநிவாஸனைக்கண்டு பயப்படுகிறதில்லை. அவன் நெஞ்சிலே தான் அவைகள் குடிகொண்டிருக்கும். ஸ்ரீநிவாஸனுடைய தயையைக் கண்டுதான் ஆச்ரிதர்களுடைய பாபங்கள் நடுங்கி ஓடும். தயை அந்தப் பாபங்களை விழுங்கிவிடுவாள் என்று அவை பயப்படும். தயையின் ஸம்பந்தத்தால் பெருமாள் தயாளுவாகிறார். ஆச்ரிதர்களின் பாபங்கள் விஷயத்தில் தயைக்கு தயை கிடையாது. தயையால் பெருமாள் தயாளுவாகையில் தயை ஸ்வயம் நிர்த்தயையாயிருக்கிறாளென்று வேடிக்கை. ஆச்ரிதர்களை ஆச்ரயித்திருக்கும் பாபங்கள் விஷயத்தில் நிர்த்தயையாயிருந்தால்தான் ஆச்ரிதர்கள் விஷயத்தில் தயை செய்யலாம். இரண்டு விஷயத்திலும் தயையைக் காட்டுவது அஸாத்யம். இரண்டுக்கும் அபயம் அளிக்கமுடியாது. (26)

अतिलङ्घितशासनेष्वभीक्ष्णं वृषशैलाधिपतिर्विजृम्भितोष्मा ।
पुनरेव दये क्षमानिदानैर्भवतीमाद्रियते भवत्यधीनैः ॥ २७ ॥

அதிலங்கிதசாஸநேஷ்வபீக்ஷ்ணம் வ்ருஷசைலாதிபதிர்
விஜ்ரும்பிதோஷ்மா
புநரேவ தயே க்ஷமாநிதாநைர்பவதீமாத்ரியதே பவத்
யதீநை: II (27)

(பதவுரை) ஹே தயே-ஓ தயையே! அபீக்ஷ்ணம்-பல தடவை, அதிலங்கிதசாஸநேஷு - தன் ஆக்ஞையை மீறியிருப்பவர்களிடத்தில், விஜ்ரும்பிதோஷ்மா - மிகவும் அதிகமான கோபமுள்ள, வ்ருஷசைலாதிபதி: - ஸ்ரீநிவாஸன், பவத்யதீநை:-உன்னால் உண்டு பண்ணப்பட்டவைகளான, க்ஷமாநிதாநை:—பொறுமையின் காரணங்களால், (அதாவது ப்ராயச்சித்த ப்ரபதநாதிகளால்) பவதீம் - உன்னை, ஆத்ரியதே- ஆதரிக்கிறான்.

" தயையே! அடிக்கடி தன்னுடைய ஆக்ஞையை மீறுகிறவர் விஷயத்தில் அதிகக் கொதிப்புடைய வேங்கடமலையரசன் மறுபடியும் அக்குற்றங்களைப் பொறுக்கக் காரணமான உன்னால் ஏற்படும் நிமித்தங்களால் உன்னையே ஆதரிக்கிறான் ".

(தாத்பர்யம்) நாம் பலகால்செய்யும் குற்றங்களால் ஈச்வரனுக்குக் கொதிப்புண்டாகிறது. ஆயினும் எப்படியாவது அந்தக் குற்றங்களை மன்னிக்கும் வழி ஏதாவது நாம் செய்வோமா என்று பார்த்துக்கொண்டிருக்கிறான். நம் குற்றங்களைப் பொறுக்கும் உபாயங்களை நாம் ஸ்வயமாகத் தேடமாட்டோம். தயைதான் அந்த உபாயங்களில் நம்மை மூட்டிவிக்கவேணும். குற்றங்களை மன்னித்து தன் உஷ்ணம் தணிந்து திருவுள்ளம் குளிரவேணுமென்று ஆசைப்படும் ஸ்ரீநிவாஸன், நீ தான் அதற்கு உபாயமென்று உன்னையே ஆதரிக்கிறான். (27)

करुणे दुरितेषु मामकेषु प्रतिकारान्तरदुर्जयेषु खिन्नः ।
कवचायितया त्वयैव शार्ङ्गी विजयस्थानमुपाश्रितो वृषाद्रिम् ॥

**கருணே துரிதேஷு மாமகேஷு ப்ரதிகாராந்தரதுர்ஜ**
**யேஷு கிந்ந: ।**
**கவசாயிதயா த்வயைவ சார்ங்கீ விஜயஸ்தாநமுபாச்ரிதோ**
**வ்ருஷாத்ரிம் ॥**

(பதவுரை) ஹே கருணே-ஓ கருணையே, மாமகேஷு-என்னுடையவையான துரிதேஷு-பாபங்கள், ப்ரதி காராந்தர துர்ஜயேஷு-வேறொரு வகையாலும் நீக்கக் கூடாதவைகளாயிருக்கும் பொழுது, கிந்ந: - துக்கமடைந்த, சார்ங்கீ - சார்ங்கமென்னும் வில்லேந்திய ஸ்ரீநிவாஸன், கவசாயிதயா - கவசம்போன்றவளான, த்வயா - உன்னுடன் கூடியவனாகவே, விஜயஸ்தாநம் - விஜயத்தைக் கொடுக்கும் ஸ்தானமாயிருக்கிற, வ்ருஷாத்ரிம் - திருமலையை, உபாச்ரித:- அடைந்திருக்கிறான்.

"கருணையே! சரமாரியாக நான் குற்றங்களைப் புங்கானு புங்கமாய் தொடுத்துக்கொண்டிருக்கும் பொழுது ப்ராயச் சித்தம் முதலிய உபாயங்களால் என்னைத் துன்மார்க்கத்தி லிருந்து திருப்ப ஸாத்யமில்லாமல் நைராச்யத்தையடைந்து உன்னையே கவசமாகப்பூண்டு கையில் சார்ங்கமென்னும் வில்லை வைத்துக்கொண்டு ஒருக்கால் ஜெயத்தை அடைய லாமென்று வேங்கடமலை என்னும் ஸ்தானத்தை ஸ்ரீநிவாஸன் அடைந்திருக்கிறான் போலும்".

(தாத்பர்யம்) நம்முடைய கணக்கில்லாத கொடிய அபராதங்களென்னும் அம்புகளை நாம் ஈச்வரன்பேரில் ப்ரயோகித்து அவன் நெஞ்சைப் புண்படுத்துகிறோம். அந்த அபராதங்களை ப்ராயச்சித்தங்களால் கழிக்கலா மென்றாலும் ப்ராயச்சித்தங்களைச் செய்ய நாம் இணங்காத தால் அந்த வழியாக நம்மை ஜெயித்து தன் வசமாக்கிக் கொள்ள அஸாத்யமென்று தீர்மானித்து தயையையே கவசமாகப் பூண்டால் நாம் செய்யும் குற்றங்கள் தன் நெஞ்சுவரையிலும் உள்ளே போகாதென்று தயாகவசத்தைச்

நம்மை ஜெயிக்க உயர்ந்த புண்ய

மாகிய வேங்கடமலையில் வில்லுங்கையுமாகக் காத்துக் கொண்டிருக்கிருன் போலும். இந்தப் புண்ய க்ஷேத்ரத்திற்கு நாம் போனால் க்ஷேத்ர ப்ரபாவத்தால் நமக்கு ஸத்வம் தலையெடுத்து நம் மனஸு பெருமாள் வசப்பட்டு பெருமாளுக்கு ஜெயமுண்டாகுமென்று தாத்பர்யம். நாம் வசப்படுவதுதான் அவருக்கு ஜெயம். (28)

मयि तिष्ठति दुष्कृतां प्रधाने मितदोषानितरान्विचिन्वती त्वम् ।
अपराधगणैरपूर्णकुक्षिः कमलाकान्तदये कथं भवित्री ॥ २९ ॥

**மயி திஷ்டதி துஷ்க்ருதாம் ப்ரதாநே மிததோஷாநிதராந் விசிந்வதீ த்வம் ।**
**அபராதகணைரபூர்ணகுக்ஷி: கமலாகாந்ததயே கதம் பவித்ரீ ॥**

(பதவுரை) கமலாகாந்ததயே-ஓ ஸ்ரீநிவாஸனுடைய தயையே! துஷ்க்ருதாம்-பாபத்தைப் பண்ணினவர்களுக்கெல்லாம், ப்ரதாநே-முக்யனை, மயி-நான், திஷ்டதி-இருக்கும்பொழுது, மிததோஷாந்-அல்ப தோஷமுள்ளவரான இதரான்-மற்றவர்களை, விசிந்வதீ-தேடுகின்ற, த்வம்-நீ, அபராதகணை:-அபராத ஸமூஹங்களாலே, அபூர்ணகுக்ஷி:-வயிறு நிரம்பாதவளாய், கதம் பவித்ரீ-எவ்வாறு ஜீவித்(பிழைத்)திருக்கப்போகிருய்.

"ஸ்ரீநிவாஸனுடைய தயையே, பாபிகளுக்குள் முதல்வனான நான் எதிரே நிற்கையில் என்னைக் கவனியாமல் ஸ்வல்ப தோஷமுடைய மற்றவர்களை நீ தேடினால் வர்க்கம் வர்க்கமாக அநேகவித பாபங்களென்னும் ஆஹாரங்களால் உன் வயிறு நிரம்பாமல் பட்டினி கிடந்து நீ எப்படி ஜீவிப்பாய்."

(தாத்பர்யம்) பாபங்கள் தயைக்கு ஆஹாரம். தயையின் வயிறு பெரிது. கணக்கில்லாத அபராதங்களை அவள் பக்ஷித்துக்கொண்டேயிருந்தால்தான் அவள் வயிறுநிறையும். குற்றங்களைப் பொறுத்துக்கொண்டேயிருந்தால்தான்

தயைக்கு நல்ல இருப்புண்டு. குற்றங்களைப் பொறுக்க இடமகப்பட ாவிட்டால் தயைக்கு ஆஹாரமில்லை. பாபங்கள் நிரம்ப அகப்பட்டால் முழு ஆஹாரம். என்னுடைய பாபங்கள் கணக்கற்றன. அநேக வர்க்கங்கள் உள்ளன. என்னை நீ அங்கீகரித்தால்தான் உனக்குப்பூர்ண ஆஹாரம் கிடைக்கும். என்னிலும் கொடியவரில்லை. என்னையபேக்ஷித்து மற்றவர்கள் ஸ்வல்ப குற்றமுடையவர்களே. அவர்களின் தோஷங்கள் உனக்கு ஸ்வல்ப உணவுதான் கொடுக்கும். பூர்ண ஆஹாரம் கையில் கொடுக்கும் என்னை வேண்டா மென்று தள்ளி ஸ்வல்ப தோஷமுடையவர்களைத் தேடுவது உசிதமல்ல. கையில் கிடைக்கும் பூர்ண ஆஹாரத்தைத் தள்ளலாகாது. உனக்கு உன் வயிறு நிரம்பாமல் பட்டினியால் உன்னிருப்புக்கே என்ன தீங்கு வருமோ என்று தயையாகிய உன் விஷயத்தில் நான் இரக்கப்படுகிறேனென்கிறார். (29)

अहमस्म्यपराधचक्रवर्ती करुणे त्वं च गुणेषु सार्वभौमी ।
विदुषी स्थितिमीदृशीं स्वयं मां वृषशैलेश्वरपादसात्कुरु त्वम् ॥

**அஹமஸ்ம்யபராதி(த)சக்ரவர்த்தீ கருணே த்வம் ச குணேஷு ஸார்வபௌமீ ।**
**விதுஷீ ஸ்திதிமீத்ருசீம் ஸ்வயம் மாம் வ்ருஷ சைலேச்வரபாதஸாத்குரு த்வம் ॥**

(பதவுரை) ஹே கருணே-ஓ தயையே! அஹம்-நான் அபராதசக்ரவர்த்தீ அஸ்மி- அபராதங்களுக்கு சக்ரவர்த்தியாக இருக்கிறேன். த்வம் ச - நீயும், குணேஷு ஸார்வபௌமீ - குணங்களில ஸார்வபௌமியாக இருக்கிறாய். ஈத்ருசீம் ஸ்திதிம்-இத்தகைய (நம்மிருவருடைய) நிலையை, விதுஷீ-அறிந்திருக்கின்ற, த்வம்-நீ, மாம்-என்னை, ஸ்வயம்-நீயாகவே (என் ப்ரயத்னமில்லாமலேயே) வ்ருஷசைலேச்வர பாதஸாத்குரு-ஸ்ரீனிவாஸனுடைய திருவடிகளுக்கதீனனாகப் பண்ணக்கடவாய்;

"நான் அபராதி சக்ரவர்த்தியாயிருக்கிறேன். கருணையே, நீயும் குணங்களுக்குள் அரசியாயிருக்கிறாய். இவ்விதமான ஸ்திதியை அறிந்திருக்கும் நீ என் ப்ரயத்ந மன்னியில் நீயாகவே வேங்கடமலையரசன் திருவடிகளுக்கு என்னை ஆளாக்கிக்கொள்ள வேணும்."

(தாத்பர்யம்) குற்றம் செய்பவர் ஸ்ரீநிவாஸனுக்கு எதிரிகளாவார். குற்றமுடையாரில் என்னிலும் பெரியாரில்லை. அபராதிகளில் என்னையே சக்ரவர்த்தியென்று சொல்லலாம். குணங்களுக்குள் தயைதான் பட்டமஹிஷி. சக்ரவர்த்தியாகிய என்னை ஜெயித்து உனது நாயகனாகிய வேங்கடேச்வரனுடைய திருவடிகளில் என்னை விழும்படி செய்து அவனுக்கு அடிமையாக்கினால் அன்றோ, அவன் மஹிஷியாகிய உனக்குப் பெருமை. (30)

अशिथिलकरणेऽस्मिन्नक्षतश्वासवृत्तौ
वपुषि गमनयोग्ये वासमासादयेयम् ।
वृषगिरिकटकेषु व्यञ्जयत्सु प्रतीतै-
र्मधुमथनदये त्वां वारिधाराविशेषैः ॥ ३१ ॥

அசிதிலகரணே஽ஸ்மிந்நக்ஷதச்வாஸவ்ருத்தௌ
வபுஷி கமநயோக்யே வாஸமாஸாதயேயம் ।
வ்ருஷகிரிகடகேஷு வ்யஞ்ஜயத்ஸு ப்ரதீதை:
மதுமதநதயே த்வாம் வாரிதாராவிசேஷை: ॥

(பதவுரை) ஹே மதுமதனதயே – மது கைடபரை (விரோதி வர்கத்தை) நிரஸநம் செய்த ஸ்ரீநிவாஸனுடைய தயையே! அஸ்மிந் வபுஷி- இச்சரீரம், அசிதிலகரணே – தளராத இந்திரியங்களையுடையதாகவும், அக்ஷதச்வாஸ வ்ருத்தௌ-தடைபடாத மூச்சுக் காற்றின் ப்ரவ்ருத்தியை யுடையதாகவும், (ஆகையினாலேயே) கமநயோக்யே—தான் நினைத்தவிடம் போகும் சக்தி இருக்கும்போதே, ப்ரதீதை:— ப்ரஸித்தங்களான, வாரிதாராவிசேஷை: – விலக்ஷணங்

களான அருவிகளால், த்வாம்—உன்னை, வ்யஞ்ஜயத்ஸு—வ்யஞ்ஜநம் செய்துகொண்டிருக்கும், வ்ருஷகிரிகடகேஷு—திருமலையின் தாழ்வரைகளில், வாஸம்—வாஸத்தை, ஆஸாதயேயம்—அடையக்கடவேன்.

"மதுஸூதநனுடைய தயையே! இந்த்ரியங்கள் தளர்ச்சியடையாமல் ச்வாஸவ்ருத்தியும் பலக்குறைவடையாமல் தேஹம் நன்றாய் நடக்க வலிமை இருக்கையிலேயே ப்ரஸித்தங்களான உயர்ந்த அருவிகளால் உன் தன்மையை வெளிப்படுத்தும் திருமலைத் தாழ்வரைகளில் எனக்கு வாஸம் கிடைக்கவேண்டும்".

(தாத்பர்யம்) தயாதேவி தன்னை வசப்படுத்திப் பின் கட்டுமுறையாய்ப் பெருமாள் திருவடிவாரத்திற்குக் கொண்டுபோவதாக முன் சுலோகத்தில் கூறப்பட்டது. 'கிளரொளி யிளமை கெடுவதன் முன்னம் வளரொளி மாயோன் மருவியகோயில் வளரிளம் பொழில்சூழ் மாலிருஞ்சோலை தளர் விலராகில் சார்வது சதிரே" என்னும் திருவாய்மொழியில் இளமைப் பருவத்திலேயே திருமாலிருஞ்சோலை மலைக்குச் செல்லவேண்டுமென்று ஆழ்வார் பாரித்ததுபோல இங்கேயும் வேங்கடமலைக்குப் பால்யத்திலேயே செல்லவேண்டுமென்று மனோரதத்தைக் காட்டுகிறார். அங்கே தளர்விலராகில் என்று கூறியதையே இங்கே கரணங்கள் என்னும் இந்த்ரியங்கள் சிதிலமல்லாமல் இருக்கையிலேயே செல்லவேண்டும் என்கிறார். சிதிலமென்பது தளர்வைச் சொல்லும். மலையேறுவதற்கு ச்வாஸமென்னும் ப்ராணன் த்ருடமாயிருக்க வேணும், அப்படிக் கில்லாவிடில் இரண்டடி ஏறுகையிலேயே பெருமூச்சு வாங்கும். 'கிளரொளித்' திருவாய்மொழியில் 'மறுவில் வண்சுனை சூழ் மாலிருஞ்சோலை' என்று குளிர்ந்த சுத்தமான நீர் நிறைந்த அருவிகளை ஆழ்வார் பாடியது போல திருமலையில் உள்ள பாபவிநாசம் ஆகாசகங்கை முதலிய குளிர்ந்த தாரைகளையுடைய புண்யமான அருவி

திருவேங்கடமுடையானுடைய சீதளமான தயா ப்ரவாஹங்கள் என்று வர்ணிக்கிறார். இந்தக் குளிர்ந்த அருவிகள் குளிர்ந்த தயைக்கு அடையாளம் என்று கூறுகிறார். (31)

अविदितनिजयोगक्षेममात्मानभिज्ञं
गुणलवरहितं मां गोप्तुकामा दये त्वम् ।
परवति चतुरैस्ते विभ्रमैः श्रीनिवासे
बहुमतिमनपायां विन्दसि श्रीधरण्योः ॥ ३२ ॥

குணலவரஹிதம் மாம் கோப்துகாமா தயே த்வம் ।
பரவதி சதுரைஸ்தே விப்ரமை: ஸ்ரீநிவாஸே
பஹுமதிமநபாயாம் விந்தஸி ஸ்ரீதரண்யோ: ॥

(பதவுரை) ஹே தயே—ஓ தயையே! அவிதிதநிஜ யோக க்ஷேமம்—தன்னுடைய யோகக்ஷேமங்களை அறிய மாட்டாதவனும், ஆத்மாநபிக்ஞம்—தன் ஸ்வரூபத்தை யின்னபடியென்றறியாதவனையும், குணலவரஹிதம் – குண லேசமுமில்லாதவனையுமிருக்கிற, மாம்-அடியேனை, கோப்து காமா—ரக்ஷிக்கவேண்டுமென்ற விருப்பமுள்ள, த்வம்-நீ, ஸ்ரீநிவாஸே—ஸ்ரீநிவாஸன், சதுரை:—ஸமர்த்தங்களான, தே- உன்னுடைய, விப்ரமை:—விலாஸங்களால், பரவதி-(உனக்கு) அதீனனாக விருக்கும்பொழுது, ஸ்ரீதரண்யோ:- ஸ்ரீதேவி பூதேவி இவர்களுடைய, அநபாயாம்—சாச்வதமான, பகுமதிம்-பகுமானத்தை, விந்தஸி-அடைகிறாய்.

"தயையே! தன் யோகக்ஷேமங்களை அறியாதவனும், தன்னையே அறியாதவனும், எள்ளத்தனை குணமும் இல்லாதவனுமான என்னைக் காப்பாற்ற விரும்பி, ஸ்ரீநிவாஸனை அவன் சாதுர்யமுடைய உன் விலாஸ சேஷ்டை களால் உனக்கு வசப்படும்பொழுது, நீ லக்ஷ்மிப் பிராட்டி பூமிப் பிராட்டி இவர்களுடைய நீங்காத கௌரவத்தைப் பெறுகிறாய்".

(தாத்பர்யம்) தன்னைத் தயாதேவி கைதியாக்கி பலாத்காரமாகத் திருவேங்கடமுடையானுடைய ந்யாய ஸபைக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கிறாள். அங்கே ஒரு பெரிய ஸபை கூடி கைதி தண்டிக்கத் தகுந்தவனா? அல்லது விடுதலைசெய்து மோக்ஷத்திற்கு அர்ஹனா? என்று விசாரணை நடக்கப்போகிறது. ஒழுங்காக பக்ஷபாத மன்றியில் விசாரணை நடந்து சட்டப்பிரகாரம் தீர்மானம் ஏற்படுவதானால் இந்தக் கைதிக்கு விமோசனத்திற்கு இடமில்லை. தயையின் புருஷகாரமெல்லாம் வீணாய்விடும். ப்ரபுவாகிய ஸ்ரீநிவாஸனைத் தயாதேவி தன் போகமயக்குகளினால் மயக்கின்துபோலத் தானிட்டது சட்டமாயிருக்கும் படி வசப்படுத்திக்கொள்ளுகிறாள். தயாதேவிக்குப் பெருமாள் வசப்படுவதைப் பார்த்து ஸ்ரீதேவியும் பூதேவியும் தங்கள் குற்றம் செய்த குழந்தையைக் காப்பாற்ற முயற்சிக்கப்படுவதைக் கொண்டு மிகவும் ஸந்தோஷம் அடைந்து தயாதேவியினிடத்தில் நீங்காத பஹுமானத்தை வைக்கிறார்கள். விசாரணைக்கு வந்திருக்கும் குற்றவாளிக்குக் குணலேசமும் கிடையாது. துளியேனும் குணமிருந்தால் அந்தக் குணத்தைக்கொண்டு ரக்ஷித்ததாகுமேயொழிய கேவலம் தயையின் வலிமையினால் ரக்ஷித்ததாகாது. (32)

फलवितरणदक्षं पक्षपातानभिज्ञं
प्रगुणमनुविधेयं प्राप्य पद्मासहायम् ।
महति गुणसमाजे मानपूर्वं दये त्वं
प्रतिवदसि यथार्हं पाप्मनां मामकानाम् ॥ ३३ ॥

பலவிதரணதக்ஷம் பக்ஷபாதாநபிஜ்ஞம்
ப்ரகுணமநுவிதேயம் ப்ராப்ய பத்மாஸஹாயம் ।
மஹதி குணஸமாஜே மாநபூர்வம் தயே த்வம்
ப்ரதிவதஸி யதார்ஹம் பாப்மநாம் மாமகாநாம் ॥

(பதவுரை) ஹே தயே - ஓ தயாதேவியே! த்வம் - நீ, பலவிதரணதக்ஷம் - கர்மாநுரூப பலன்களைக் கொடுக்கையில்

ஸாமர்த்யமுடையவனுயும், (ஜயாபஜய பலங்களான ஸமாநுவமானங்களைக் கொடுக்க வல்லமையுள்ளவனும்), பக்ஷபாதாநபிஜ்ஞும் – பக்ஷபாதமறியாதவனுயும், ப்ரகுண மநுவிதேயம் – உத்க்ருஷ்டமான அஷ்டாக்ஷராதி மந்த்ரங் களுக்கு வச்யனுகுமவனுயும், (ப்ரகுணம்—மிகுந்த குணமுள்ள வனுகவும், அநுவிதேயம் – எல்லோராலும் அனுஸரிக்கத் தகுந்த ஸௌலப்யமுள்ளவனுயும்) பத்மாஸஹாயம்—லக்ஷ்மீ பதியை, (லக்ஷ்மீ ஸஹாயமுள்ள ராஜாவை) ப்ராப்ய— அடைந்து அதாவது வசீகரித்து, (ஸபாநாயகனுகப்பண்ணி) மஹதி குணஸமாஜே—பெரிய குணங்களுடைய கோஷ்டியில், (குணங்களால் நிரம்பிய ஸபையில்) மாமகாநாம்—என்னுடையவைகளான, பாப்மநாம் – பாபங் களைக்குறித்து, யதார்ஹம்—தகுந்தபடி, ப்ரதிவதஸி—உத்தர மருளிச் செய்கிருய்.

"தயையே! செய்த விணைக்குத் தக்கபடி பலனை அளிப்பதில் கைதேர்ந்தவனும் பக்ஷபாதம் என்பதையே அறியாதவனும் உயர்ந்த குணங்களுடையவனுமான ஸ்ரீனிவாஸனென்னும் ந்யாயாதிபதியை அணுகி அநேக குணங்கள் வீற்றிருக்கும் பெரிய ஸபையில் என்னுடைய பாபங்களுக்கெல்லாம் சரியான ப்ரமாணங்களோடு தக்கபடி எதிர்வாதம் செய்து உன் கக்ஷியை ஸாதிக்கிருய்".

(தாத்பர்யம்) பெருமாள் ஸபையில் அத்யக்ஷராய் எழுந் தருளி இருக்கிருர். பிராட்டியும் அவருடன் இருக்கிருள். பிராட்டி பக்கத்தில் இருப்பது தயாதேவிக்குப் பரம அனுகூலம். ஸர்வஜ்ஞத்வம், ஸர்வசக்தித்வம், ஈச்வரத்வம், ஸமத்வம், கர்மபலப்ரதத்வம் முதலிய அநேக குணங்கள் ஸப்யர்களாக நிறைந்திருக்கும் மஹாஸபை. அந்தக்குணங் களெல்லாம் இந்தக் குற்றவாளியின் குற்றங்களையெல்லாம் மூதலித்துக்காட்டி அதற்கு சிக்ஷைவிதிக்கும் சாஸ்த்ரவசனங் களை உதாஹரித்துச் சட்டப்படிக்குக் கடுந்தண்டனை விதிக்க

வேண்டும் என்று வாதாடுகிருர்கள். அந்த வாதங்களுக்கு எதிர்வாதம் செய்வது மிகவும் சங்கடமான கார்யம். அந்தக் கார்யத்தைத் தயாதேவி மிகவும் சிரமப்பட்டுத் தன் எதிர் கக்ஷியால் ஸாதிக்கிருள். தயாதேவி செய்யும் விசித்ரமான எதிர்கக்ஷி அடுத்த சுலோகத்தில் விவரிக்கப்படுகிறது. குணம் என்னும் பதம் வடமொழியில் ஆண்பால். அநேக ஆண் பிள்ளைகள் வீற்றிருந்து வழக்குச்செய்யும் மஹா ஸபையில் எனக்காக ராஜமசிஷியான தயாதேவி வந்து என்னைக் காப்பாற்றுவதற்கு விசித்ரமாக எதிர்வாதம் செய்கிருளே என்று ஆச்சர்யம். குழந்தையைக் காப்பாற்ற நாணத்தையும் துறந்து ஸபை நடுவே வந்து பேசுகிருள்.

अनुभवितुमघौघं नालमागामिकालः
प्रशमयितुमशेषं निष्क्रियाभिर्न शक्यम् ।
स्वयमिति हि दये त्वं स्वीकृतश्रीनिवासा
शिथिलितभवभीतिः श्रेयसे जायसे नः ॥ ३४ ॥

அநுபவிதுமகௌகம் நாலமாகாமிகால:
ப்ரசமயிதுமசேஷம் நிஷ்க்ரியாபிர் ந சக்யம் ।
ஸ்வயமிதி ஹி தயே த்வம் ஸ்வீக்ருதஸ்ரீநிவாஸா
சிதலிதபவபீதி: ச்ரேயஸே ஜாயஸே ந: ॥

(பதவுரை) ஹே தயே— ஓ கருணையே! அகௌகம்— பாபஸமூஹத்தை, அசேஷம்-மிகுதியில்லாமல், அநுபவிதும்- அநுபவிப்பதற்கு, ஆகாமிகால:—வரும்காலம் முழுவதும்கூட, நாலம்-போராது. அகௌகம்-பாப ஸமூஹத்தை, நிஷ்க்ரியாபி:-ப்ராயச்சித்தங்களாலும், அசேஷம்-மிகுதியில்லாமல், ப்ரசமயிதும் - போக்கடிப்பதற்கும், ந சக்யம் — முடியாது, இதி-என்று ஆலோசித்து, ஸ்வயம் - தாளுகவே, ஸ்வீக்ருத ஸ்ரீநிவாஸா — ஸ்ரீநிவாஸனை வசீகரித்துக்கொண்டிருக்கும், த்வம்-நீ, சிதிலிதபவபீதி:-ஸம்ஸாரபயத்தைப் போக்குகின்றவளாய்க்கொண்டு, ந:-எங்களுடைய, ச்ரேயஸே-ச்ரேயஸ்ஸின் பொருட்டு, ஜாயஸே-காரணமாகிருய்.

"வருங்காலமெல்லாம், செய்த கணக்கிலாப் பாபங்களை அநுபவிக்கப் போதாது. எல்லாப் பாபங்களையும் ப்ராயச்சித்தங்களால் கழிப்பது ஸாத்யமாகாது, தயையே! இந்த ப்ரகாரமாய் நீயாகவே ஸ்ரீநிவாஸனை ஏவப்படுத்திக் கொண்டு எங்கள் ஸம்ஸார பயத்தைத் தளர்த்தி எங்கள் க்ஷேமத்திற்காக நீ ஸ்வயமாகப் பிறக்கிறாய்".

(தாத்பர்யம்) தயாதேவி சொல்லும் எதிர்கக்ஷியை எடுத்துக் காட்டுகிறார். அரைக்ஷணப்பொழுதில் ஒரு மனுஷ்யன் செய்யும் பாபம் அநேகாயிரம் ப்ரஹ்ம கல்பங்கள் அநுபவித்தாலும் தீராது. இந்தக் குற்றவாளியின் எண்ணிலாக் கொடும் பாபங்களுக்குத் தகுந்தபடி பலன் கொடுத்து அநுபவிக்கும்படி செய்ய வருங்கால முழுவதும் போதாதே; ஸர்வசக்தனுகிய பெருமானுக்கும் இவன் குற்றத்திற்குத் தக்கபடி சிக்ஷை விதித்து அநுபவிக்கச் செய்யப் பின்வரும் அநந்த காலம் முழுவதும் போதாதே; தக்கபடி தண்டனை விதிப்பது அஸாத்யமானபடியால் குறைந்த தண்டனைதானே விதிக்கவேணும். போதாத தண்டனையை விதிப்பதைவிட தண்டனையை விதிக்காமல் மன்னிப்பது மேன்மை. பாபங்களை அநுபவித்துத்தான் தொலைக்கவேண்டும். அல்லது அந்தந்த பாபத்திற்குச் சாஸ்த்ரங்களால் விதிக்கப்பட்ட ப்ராயச்சித்த கர்மங்களைச் செய்து கழிக்கவேண்டும், அநுபவித்துத் தொலைக்கக் காலம் போதவே போதாது. ப்ராயச்சித்தங்கள் செய்வது ஸாத்யமன்று. ப்ராயச்சித்தம் செய்வதில் அநேகக் குறைவுகள் ஏற்படுவது ஸம்பாவிதம். அந்தக்குறைவுகளைத் தீர்க்க வேறு ப்ராயச்சித்தம் செய்யவேணும் இப்படி ப்ராயச்சித்த பரம்பரைகள் ஓயாமல் மேல் மேல் வளரும். செய்த பாபங்களைக் கழிக்க இந்த இரண்டு வழிகளும் கூடாதபடியால் மன்னிப்பினுல்தான் தொலைக்கவேணும் என்று தயா தேவியின் எதிர்வாதம். தயாதேவிக்கு இந்தக் குற்றவாளி வக்காலத்துக் கொடுக்கவில்லை. எதிர்வாதம் செய்யும்படி

கோரவும் இல்லை. தானாக வந்து வாதாடுகிறாள். குற்ற வாளிகளான ப்ரஜைகளின் ரக்ஷணத்திற்காகத் தானாக வந்து பிறக்கிறாள். எங்கள் ச்ரேயஸ்ஸுக்காகத் தயா தேவியான நீ பிறக்கிறாய். பெருமாள் அவதாரமென்னும் பிறப்பினால் தனக்கு ச்ரேயஸ்ஸை அடைகிறான் என்று வேதத்தின் மொழி. தயாதேவி நம்முடைய ச்ரேயஸ்ஸின் பொருட்டுப் பிறக்கிறாள் என்பது ஆச்சர்யம். (34)

अवतरणविशेषैरात्मलीलापदेशै-
रवमतिमनुकम्पे मन्दचित्तेषु विन्दन् ।
वृषभशिखरिनाथस्त्वन्निदेशेन नूनं
भजति शरणभाजां भाविनो जन्मभेदान् ॥ ३५ ॥

அவதரணவிசேஷை ராத்மலீலாபதேசை
ரவமதி மநுகம்பே மந்தசித்தேஷு விந்தந் ।
வ்ருஷபசிகரிநாத ஸ்த்வந்நிதேசேந நூநம்
பஜதி சரணபாஜாம் பாவிநோ ஜந்மபேதாந் ॥

(பதவுரை) ஹே அநுகம்பே-ஓ தயையே, வ்ருஷபசிகரி நாத:-ஸ்ரீநிவாஸன், த்வந்நிதேசேந-உன் ஆஜ்ஞையாலே, ஆத்மலீலாபதேசை:- தன்னுடைய லீலையை வ்யாஜமாக உடைய அவதரண விசேஷை:-பலவித அவதாரங்களாலே, மந்த சித்தேஷு-மதிகேடரிடத்தில், அவமதிம் - அவமானத் தை, விந்தன்-அடைகின்றவனாய், சரணபாஜாம் - தன்னை யடைக்கலம் புகுந்தவர்களுக்கு, பாவிந:- அவச்யம் அநுபவிக்க வேண்டியவைகளான, ஜந்மபேதாந்-ஜந்ம விசேஷங்களை, பஜதி-அடைகிறான். நூநம்-நிச்சயம்.

"தயையே! உன்னுத்தரவிற்கட்டுப்பட்டு ஸ்ரீநிவாஸன் லீலை என்னும் வியாஜத்தை வைத்துக்கொண்டு பூமியில் அவதாரங்கள் செய்து மூடர்களால் அவமதிக்கப்பட்டுத் தன் திருவடிகளை ஆச்ரயிப்பவர்கள் அடையவேண்டிய பின் ஜன்மங்களையெல்லாம் அடைகிறான் என்பது நிச்சயம்".

பர்யர்] தயாதேவி அழகாக எதிர்வாதம் செய்து குற்றங்களை எடுத்துக்காட்டும் வாதிகளின் கக்ஷிகளைத் தள்ளும் வழியை முன் ச்லோகத்தில் காட்டினார். தயா தேவியின் கக்ஷி ஜயித்து கைதிக்கு மோக்ஷம் என்னும் விடுதலை தீர்மானிக்கப்படுகிறது. கைதி செய்த குற்றங்கள் போகும் வழியென்ன? செய்த குற்றங்களுக்காக அநுபவிக்க வேண்டிய பலன் அநேக ஜந்மங்கள். கைதியின் குற்றங் களுக்கு ந்யாயமாய் ஏற்படவேண்டிய தண்டனை அவன் பல ஜந்மங்களை எடுத்து செய்த வினைகளை அநுபவித்துக் கழிக்க வேணும். அவனெடுக்கவேண்டிய ஜந்மங்களைத் தயா தேவியின் பேச்சுக்கு இணங்கி ஸ்ரீநிவாஸன் தானே ஆச்ரிதனை கைதிக்குப் பதிலாக எடுக்கிறானென்று கூறுகிறார். நாம் பிறக்கவேண்டிய ஜந்மங்களை நீக்குவதற் காக ஸ்ரீநிவாஸன் தானே அவதாரங்களால் பிறக்கிறான், 'பகவானுடைய அவதார ரஹஸ்ய மஹிமையைத் தெரிந்து கொண்டவர்கள் இந்த தேஹம் முடிந்தபின் மறுபடியும் ஜந்மம் அடைகிறதில்லை, அவர்கள் உடனே பகவானை அடைகிறார்கள்' என்பது கீதையில் பகவானுடைய வார்த்தை. அதற்கு "நானும் பிறந்து நீயும் பிறக்க வேண்டுமோ" என்று ஈட்டில் கருத்துக்கூறப்பட்டது. சரணமடைந்தவனுடைய குற்றங்களுக்காக அவன் பிறக்க வேண்டிய பிறப்புகளுக்குப் பதிலாக அவன் சுமையை ஏற்றுக்கொள்ளும் ஈசுவரன் தானே அந்தப் பிறப்புக்களின் பாரத்தை ஏற்றுக்கொண்டு அவதாரங்கள் செய்கிறான் என்று வேடிக்கையாய்க் கூறுகிறார். லீலையாக அதாவது விளையாட்டுக்காக அவதாரம் செய்வதாகப் பேர் மட்டுமே ஒழிய வாஸ்தவத்தில் தயாதேவியின் உத்தரவிற்கு வசப் பட்டுக் கேவலம் கருணையினால் அவதாரங்கள் செய்யப்படு கிறதென்று கூறுகிறார். "மநுஷ்ய தேஹத்தைப் பரிக்ரஹித்து நான் அவதரிப்பதை உத்தமமான ஸௌலப்யகுணம் என்று அறிந்துகொள்ளாமல் அறிவுகேடர்கள் என்னை அவமதிக் கிறார்கள்" என்ற கீதையில் பகவானுடைய வார்த்தையை

அநுஸரித்து, மந்தமதிகளின் அவமதிப்பையும் பொறுத்துக் கொண்டு பகவான் கருணாவசராய்ப் பிறக்கிறார் என்கிறார். தயாதேவி பிறக்கும்பொழுது தன் ஸபத்நிகளாகிய ஸ்ரீ பூமி தேவிகளுடைய நித்யமான பஹுமதியை அடைகிறாள் என்று முன்பு கூறினார். அவள் பேச்சுக்குக் கட்டுப்பட்டுப் பூமியில் அவதாரம் செய்யும் பெருமாள் மூடர்களுடைய அவமதியை அடைகிறார் என்று கீதாவசனத்தைக்கொண்டு வேடிக்கையாய்க் காட்டுகிறார். (௩௫)

परहितमनुकम्पे भावयन्त्यां भवत्यां
स्थिरमनुपधि हार्दं श्रीनिवासो दधानः ।
ललितरुचिषु लक्ष्मीभूमिनीलासु नूनं
प्रथयति बहुमानं त्वत्प्रतिच्छन्दबुद्ध्या ॥ ३६ ॥

பரஹிதமநுகம்பே பாவயந்த்யாம் பவத்யாம்
ஸ்திரமநுபதி ஹார்தம் ஸ்ரீநிவாஸோ ததாந: ।
லலிதருசிஷு லக்ஷ்மீ பூமி நீளாஸு நூநம்
ப்ரதயதி பஹுமாநம் த்வத்ப்ரதிச்சந்தபுத்த்யா ॥

அநுகம்பே - ஓ தயையே, பரஹிதம்-சத்ரு மித்ரபேதமற எல்லோர்க்கும் நன்மையையே, பாவயந்த்யாம்-ஆலோசிக்கின்ற, பவத்யாம்-உன்னிடத்தில், ஸ்த்திரம்-நிலையானதாயும், அநுபதி-ஒரு பயனையும் கணிசியாததாயுமிருக்கும், ஹார்தம் - ஸ்நேஹ விசேஷத்தை, ததாந:-விசேஷித்துச் செய்கின்ற, ஸ்ரீநிவாஸ: ஸ்ரீநிவாஸன், லலிதருசிஷு-அழகிய காந்தியையுடைய, லக்ஷ்மீபூமி நீளாஸு-லக்ஷ்மீதேவி, பூமிதேவி, நீளாதேவி, இவர்கள் திறத்தில், த்வதப்ரதிச்சந்தபுத்யா - உன்னுடைய ப்ரதிமைகள் என்கிற புத்தியாலே, (உன்னை அநுஸரித்து இருக்கிறார்கள் என்ற எண்ணத்தினால்) பஹுமானம் - பஹுமானத்தை, ப்ரதயதி-விசேஷித்துச் செய்கிறான். நூநம்-நிச்சயம்.

"தயையே, பிறருக்கு ஹிதத்தை ஆலோசித்துக் கொண்டிருக்கும் உன்னிடத்தில் ஸ்திரமும் நிர்வ்யாஜமுமான

ஸ்நேஹத்தை வைக்கும் ஸ்ரீநிவாஸன், மனத்தை அபஹரிக்கும் காந்தியையுடைய லக்ஷ்மீபூமி நீளாதேவிகள் விஷயத்தில் அவர்கள் உன்னுடைய ப்ரதிமைகள் என்கிற பாவனையினால் பஹுமானத்தை விஸ்தாரம் செய்கிறான் என்பது திண்ணம்".

(தாத்பர்யம்) முன் ச்லோகத்தில் தயாதேவியின் பேச்சுக்கிணங்கி ஸ்ரீநிவாஸன் அவதாரம் செய்வதால் மூட ஜனங்களால் இளப்பத்தை அடைகிறானென்று கூறினார். இதனால் தயாதேவியினிடம் பெருமானுக்கு சலிப்பு வருகிறதோ என்று சங்கை வர ஒருக்காலும் அவளிடத்தில் சலிப்பே கிடையாது. சலிப்பில்லை என்பது மட்டுமல்ல அவளிடத்தில் எல்லையில்லாத கௌரவத்தையே செய்கிறார் தனக்கு உயிர்க்குயிரான லக்ஷ்மீபூமி நீளாதேவிகளிடத்திலும் அவர்கள் தயையின் ப்ரதிபிம்பங்கள் என்கிற புத்தியினால் மிக்க கௌரவம் செய்கிறார், என்று கூறுகிறார். தயையின் உருவங்கள் என்ற நினைப்பினால் அந்த தேவிமார்களிடத்தில் கௌரவம் ஓங்குகிறதெனில் தயாதேவியினிடத்தில் கௌரவத்திற்கு எல்லையில்லையென்பதில் என்ன ஸந்தேஹம். தேவிமார்களும் தயையின் உருவங்களே, பிம்பமும் ப்ரதிபிம்பமும் எப்படி வேறல்லவோ அப்படியே தயாதேவியும் அந்த தேவிமாரும் வேறல்ல. (36)

वृषगिरिसविधेषु व्याजतो वासभाजां
दुरितकलुषितानां दूयमाना दये त्वम् ।
करणविलयकाले कान्दिशीकस्मृतीनां
स्मरयसि बहुलीलं माधवं सावधाना ॥ ३७ ॥

வ்ருஷகிரிஸவிதேஷு வ்யாஜதோ வாஸபாஜாம்
துரிதகலுஷிதாநாம் தூயமாநா தயே த்வம் ।
கரணவிலயகாலே காந்திசீக ஸ்ம்ருதீநாம்
ஸ்மரயஸி பஹுலீலம் மாதவம் ஸாவதாநா ॥

(பதவுரை) ஹே தயே!-ஓ. தயாதேவியே, வ்ருஷகிரி ஸவிதேஷு - திருமலையின் ஸமீபப்ரதேசங்களில், வ்யாஜத:- ஒரு வ்யாஜத்தாலே, வாஸபாஜாம்-வாஸம் செய்பவர்களா யிருக்கும், துரிதகலுஷிதாநாம்-பாபங்களால் கலக்கமுற்றவர் களான சேதனர்களைக்குறித்து, தூயமானு-வருத்தமுறுகின்ற, த்வம்-நீ, கரணவிலயகாலே - இந்திரியங்கள் லயிக்கும் காலத்தில், காந்திசீகஸ்ம்ருதீநாம்-ஸ்மரணையற்றவர்களாக இருக்குமவர்களைக் குறித்து, பஹுலீலம்-பலவிதமான லீலைகளையுடைய, மாதவம்-ஸ்ரீநிவாஸனை, ஸாவதானு- அவதானமுள்ளவளாய்க்கொண்டு, ஸ்மரயஸி-நினைவூட்டு கிறாய்.

"தயையே!, திருமலைக்கருகாமையில் ஏதோ ஒரு காரணத்தை முன்னிட்டு வாஸம் செய்யும் பாபிகளான ஜனங்களிடத்தில் நீ இரக்கங்கொண்டு அவர்கள் இந்திரியங் கள் ஓய்ந்து தேஹம் முடிவடையும் காலத்தில் அவர்கள் நினைப்புகளெல்லாம் பல திக்குகளில் ஓடிக்கொண்டிருக்கும் போது அனேகவிதமான விளையாட்டுகளையுடைய ஸ்ரீநிவாஸனை நீ கவனமாய் நினைக்கும்படி செய்கிறாய்"

(தாத்பர்யம்) நாராயணாலயமாகிய க்ஷேத்ரங்களில் வாஸம் செய்து அங்கேயே முடிவடைகிறவர்களுக்கு க்ஷேத்ர ப்ரபாவத்தால ஈச்வர தம்பதிகள் விஷயமாய் அந்திம ஸ்மரணபாக்யம் கிடைக்கும். திருமலைக்கு சமீபத்திலுள்ள ப்ரதேசங்களுக்கும் இந்த மஹிமை உண்டு என்கிறார். க்ஷேத்ரவாஸம் செய்யவேண்டுமென்கிற கருத்தைமட்டும் கொண்டு இந்த க்ஷேத்ரத்தின் அருகாமையில் வஸிப்பவர் களுக்குத்தான இந்த பாக்யம் என்பதில்லை. ஏதேனும ஒரு காரணத்தையிட்டு வாஸம் செய்தால் போதுமென்கிறார். ஸ்ரீநிவாஸன் லக்ஷ்மியோடு க்ரீடாரஸங்களில் முழுகி யிருப்பன். அவனுக்கு இந்த விஷயத்தில் கவனம் இராவிட்டாலும் தயாதேவி இந்த ஆபத்காலத்தில் அந்திம ஸ்மரணத்தைக் கொடுத்துக் கவனத்துடன் காப்பாற்றுகிறு ...ர். (37)

दिशि दिशि गतिविद्भिर्देशिकैर्नीयमाना
स्थिरतरमनुकम्पे स्त्यानलग्ना गुणैस्त्वम् ।
परिगतवृषशैलं पारमारोपयन्ती
भवजलधिगतानां पोतपात्री भवित्री ॥ ३८ ॥

திசி திசி கதிவித்பிர் தேசிகைர் நீயமாநா
ஸ்திரதரமநுகம்பே ஸ்த்யாநலக்நா குணைஸ்த்வம் ।
பரிகதவ்ருஷசைலம் பாரமாரோபயந்தீ
பவஜலதிகதாநாம் போதபாத்ரீ பவித்ரீ ॥

(பதவுரை) அநுகம்பே-ஓ தயையே, கதிவித்பி: தேசிகை:-உபாய ஸ்வரூபம் அறிந்திருக்கும் ஆசார்யர்களாலே (ஓடம்போகும் வழியறிந்தவர்களான அந்தந்த தேசத்திலுள்ள ஓடக்காரர்களாலே), திசி திசி - திக்குகள் தோறும், நீயமானா - அடைவிக்கப்படுபவளும், குணை:- பகவத்கல்யாண குணங்களோடு, (கயிறுகளோடு) ஸ்திரதரம் - எக்காலத்திலும் பிரிவில்லாதிருக்கும்படி, ஸ்த்யானலக்னா - உறுதியான ஸம்பந்தமுள்ளவளாய், பரிகதவ்ருஷசைலம் பாரம் - திருமலையிலிருக்கும் கரையை, ஆரோபயந்தீ - ஏற்றிவிடுபவளான த்வம்-நீ, பவஜலதி கதானாம்-ஸம்ஸாரமாகிற கடலிலுழலுகிறவர்களுக்கு, போத பாத்ரீ-ஓடமாக, பவித்ரீ-பாவிக்க யோக்யையாயிருக்கிறாய்.

"தயையே! அந்தந்த திக்குகளில் வழி தெரிந்த மாலுமிகள் என்னும் தேசிகர்களால் ஓட்டப்பட்டுப் பகவானுடைய ஜ்ஞானம் சக்தி முதலிய குணங்களென்னும் கயிறுகளால் கெட்டியாய்ப் பிணைக்கப்பட்ட கப்பலாகிற நீ திருமலை என்கிற மலைத்தடம் என்னும் கரையில் ஸம்ஸார ஸமுத்ரத்தில் அகப்பட்டுக்கொண்ட ஜனங்களைக் கரையேற்றுவிக்கிறாய்".

(தாத்பர்யம்) எந்தத் திக்கிலே போனாலும் இடத்தையும் வழியையும் திக்கையும் காட்டும் கருவிகளைக்கொண்டு வழிகளைக் கண்டுபிடிக்கத் தெரிந்தவர்கள் தான் கப்பலை

நடத்தவல்ல மாலுமிகளாவார். ஸம்ஸாரமென்னும் ஸமுத்ரத்தில் அகப்பட்டுக்கொண்டு கரையேற வழி தெரியாமல் தத்தளிப்பவர்களுக்கு வழிகாட்டிக் கரை சேர்ப்பவர் தேசிகர்கள். கப்பல் சங்கிலிகளாலும் கயிறு களாலும் மிகவும் த்ருடமாய்ப் பிணைக்கப்பட்டிருக்கும். தயாதேவி என்னும் கப்பல் பகவானுடைய அநேக குணங் களால் கெட்டியாய்ச் சேர்த்துக் கட்டப்பட்டிருக்கும். ஆசார்யர்கள் தயாதேவி என்னும் கப்பலில் தங்களை ஆச்ரயிக்குமவர்களை ஏறச்செய்து கரைசேர்ப்பிவிப்பார்கள். சேரவேண்டிய கரையாகிய மேட்டு நிலம் திருமலையாகும் ஸம்ஸாரஸமுத்ரத்திற்குத் திருமலையே கரையாகும். ஆசார்யர்களால் வழிகாட்டிக் கொண்டுவரப்படும் தயை என்னும் கப்பல் ஆச்ரிதர்களைத் திருமலையென்னும் கரையில் சேர்ப்பிக்கும். முகுந்தமாலையில் ஸம்ஸாரஸமுத்ரத்தில் தடுமாறுகிறவர்களுக்கு விஷ்ணுவென்னும் போதமே சரண மாகுமென்று கூறியதை அநுஸரித்து அங்குள்ள பதங் களையே ப்ரயோகித்து அவர்களுக்கு தயை போதமாகு மென்கிறார். போதமென்பது ஓடம். (38)

परिमितफलसङ्गात्प्राणिनः किंपचानाः
निगमविपणिमध्ये नित्यमुक्तानुषक्तम् ।
प्रसदनमनुकम्पे प्राप्तवत्या भवत्या
वृषगिरिहरिनीलं व्यञ्जितं निर्विशन्ति ॥ ३९ ॥

பரிமித பலஸங்காத் ப்ராணிந: கிம்பசாநா:
நிகமவிபணிமத்யே நித்யமுக்தாநுஷக்தம் 1
ப்ரஸதநமநுகம்பே ப்ராப்தவத்யா பவத்யா
வ்ருஷகிரிஹரிநீலம் வ்யஞ்ஜிதம் நிர்விசந்தி 11

(பதவுரை) அநுகம்பே-ஓ தயையே, கிம்பசாநா:-அல்ப ஸ்வபாவமுள்ள, ப்ராணிந:-ப்ராணிகள், பரிமிதபலஸங்காத்- அல்பப்ரயோஜனங்களிலுள்ள ஆசையால், நிகமவிபணி மத்யே-வேதங்களாகிற கடைத்தெருவின் மத்தியில்

(புகுந்தவராய், அங்குள்ள) ப்ரஸதனம் — அநுக்ரஹத்தை, ப்ராப்தவத்யா — அடைந்துள்ள பவத்யா — உன்னுல், வ்யஞ்ஜிதம்—காட்டப்பட்டதாயும், நித்யமுக்தாநுஷக்தம் — நித்யரோடும், முக்தரோடும் கூடியதாயும், (எக்காலத்திலும் முத்துக்களுடன் கூடியதாயும்) இருக்கும், வ்ருஷகிரிஹரிநீலம்—திருமலையிலுள்ள ஸ்ரீநிவாஸனுகிற இந்திர நீலமணியை நிர்விசந்தி— அநுபவிக்கிருர்கள்.

"தயையே! அல்பர்களான ப்ராணிகள் ஸ்வல்ப ப்ரயோஜனங்களில் ஆசையால் வேதங்களென்னும் கடைத்தெருவு நடுவில் ப்ரவேசிக்கையில் அங்கே அவர்களிடத்தில் அநுக்ரஹ புத்தியுடைய உன்னுலே காட்டப்படும் நித்ய முக்தரோடு கூடிய ஸ்ரீநிவாஸனென்னும் இந்திர நீலமணிக் கல்லை அனுபவிக்கிருர்கள்"

(தாத்பர்யம்) அவரவர்களுக்கு வேண்டிய சரக்குகளெல்லாம் வேதங்களென்னும் கடைத்தெருவில் அகப்படும். அங்கே வேண்டியவர்கள் தங்களுக்கு இஷ்டமான ப்ரயோஜனங்களைக் கொள்ளலாம். சில்லறை ப்ரயோஜனங்களில் ஆசைப்படும் அல்ப ஜனங்களும் தங்களுக்குவேண்டிய ப்ரயோஜனங்களைக் கொள்ள அந்தக் கடைத்தெருவில் புகுகிருர்கள். வேதமென்னும் கடைத்தெருவுக்கு வந்தும் அங்கே உள்ள ஸர்வோத்தம மோக்ஷமென்னும் பகவத் பிராப்தி பிரயோஜனத்தை இவர்கள் விரும்பிக் கொள்ளாமலே இருக்கிருர்களேயென்று தயாதேவியானவள் இவர்களிடத்தில் இரங்கி இவர்கள் மனதை உயர்ந்த மோக்ஷ மார்க்கத்தில் திருப்புவதற்காக வியாபாரிகள் முத்துக்களோடு கலந்து கோர்த்த உயர்ந்த கல்லுகளைக் காட்டுவது போல முக்தர்களோடு கலந்த நீலமணியான பெருமாளைக் காட்டி அவர்கள் மனஸு அவரிடம் ஈடுபடும்படி செய்கிருள்.

त्वयि वहुमतिहीनः श्रीनिवासानुकम्पे
जगति मतिमिह्नन्यां देवि संमन्यते यः ।

स खलु विबुधसिन्धौ संनिकर्षे वहन्त्यां
शमयति मृगतृष्णावीचिकाभिः पिपासाम् ॥ ४० ॥

த்வயி பஹுமதிஹீந: ஸ்ரீநிவாஸாநுகம்பே
ஜகதி கதிமிஹாந்யாம் தேவி ஸம்மந்யதே ய: ।
ஸ கலு விபுதஸிந்தௌ ஸந்நிகர்ஷே வஹந்த்யாம்
சமயதி ம்ருகத்ருஷ்ணா வீசிகாபி: பிபாஸாம் ॥

(பதவுரை) தேவி ஸ்ரீநிவாஸாநுகம்பே – ஸ்ரீநிவாஸனுடைய தயையாகிய தேவியே! ய:–எவன், த்வயி – உன்னிடம், பஹுமதிஹீந:–கௌரவ புத்தியில்லாமல் இஹ ஜகதி–இந்த பூமண்டலத்தில், அந்யாம் கதிம் – வேறு உபாயத்தை, ஸம்மந்யதே – நல்லதென்று கைப்பற்றுகிறானோ, ஸ:–அவன், ஸந்நிகர்ஷே–ஸமீபத்தில், விபுதஸிந்தௌ–தேவநதியான கங்கை, வஹந்த்யாம்–ஓடிக்கொண்டிருக்கையில், ம்ருகத்ருஷ்ணாவீசிகாபி:–கானலின் அலைகளால் பிபாஸாம்–தாஹத்தை, சமயதி கலு–தீர்த்துக்கொள்ளுபவனல்லவா.

"ஸ்ரீநிவாஸனுடைய தயையாகிய தேவியே! இவ்வுலகில் எவன் உன்னிடம் வெகுமானமில்லாமல் வேறு கதியைத் தேடுகிறானோ அவன் தேவநதியாகிய கங்காநதி அருகில் ப்ரவஹித்துக் கொண்டிருக்கையில் கானலில் தோன்றும் ஜலத்தினால் தாஹத்தைத் தீர்க்க விரும்புகிறவனைப் போலாவான்".

(தாத்பர்யம்) கோடைகாலத்தில் மத்யான்ன வேளையில் தாஹத்தால் பீடிக்கப்படும் மான்கள் மணலில் வெயிலில் தூரத்திலிருந்து பார்க்கையில் ஜலம் ஓடுவதுபோல் இருப்பதைக் கண்டு ப்ரமித்து, அந்த ஜலத்தைக் குடிக்கலாம் என்று அதனருகே ஓடும். வெயிலில் ஓடுவதினால் தாஹம் அதிகப்படுமேயொழிய அங்கே ஜலமில்லாததினால், தாஹம் தீராது. ஸ்ரீநிவாஸனுடைய தயை நம்முடைய பாபங்களையெல்லாம் போக்கவல்ல குளிர்ந்த ப்ரவாஹம். அந்த தயா

ப்ரவாஹம் நம் அருகாமையில் ஜிலுஜிலென்று ஓடிக்கொண்டே இருக்கிறது. நாம் நினைத்த மாத்திரத்காலேயே நாம் அதில் அவகாஹித்து நம்முடைய அநாதிதாபத்ரயங்களைச் சமநம் செய்துகொள்ளலாம். நாம் அபேக்ஷித்தவளவிலே தயா தேவி நம்மைக்காக்க ஸஜ்ஜமாயிருக்கிருள். அவளை விட்டு விட்டு வேறு கதியைத் தேடுவது அருகிலுள்ள கங்கா ப்ரவாஹத்தை விட்டுவிட்டுக் கானல் நீரைத் தேடி ஓடுவது போலாகும். சாகுந்தள நாடகத்தில் ஆருவது அங்கத்தில் சகுந்தளையின் விரஹகாலத்தில் பொழுதுபோக்குக்காகவும், விரஹவ்யஸனத்தின் ஆறுதலுக்காகவும் அவளைப்போல ஒரு சித்திரமெழுதி அந்தப் படத்தைப் பார்த்துத் தான் அதைப் புகழ்வதைப்பற்றி ராஜா தன்னையே நகைத்துப் பரிஹாஸத்துடன் ஒரு ச்லோகம் சொல்லுகிருர். "என்னுடைய ப்ரியையாகிய சகுந்தளை நேரில் ஸாக்ஷாத்தாக என்னிடம் வந்தபொழுது அவளை வேண்டாமென்று முன்பு திரஸ்கரித்துவிட்டுச் சித்திரத்தில் எழுதப்பட்டிருக்கும் இவளை நான் பஹுமதி செய்வது என்போலாகுமென்றால், செல்லும் மார்க்கத்தில் யதேஷ்டமான குளிர்ந்த ஜலமோடும் நதியில் தாஹத்தைத் தீர்த்துக்கொள்ளாமல், அதைத் தாண்டிய பிறகு ம்ருகத்ருஷ்ணிகை என்னும் கானலில் நீராடுவதாக ப்ரமித்து அதை ஆசையுடன் தேடுபவன்போல் ஆகிறேன்" என்பது அவர் வார்த்தை. அந்த ச்லோகத்திலுள்ள பதங்களையும் பாவங்களையும்வைத்து இந்த ச்லோகம் அமைக்கப்பட்டிருக்கிறது. (40)

आज्ञां ख्यातिं धनमनुचरानाधिराज्यादिकं वा
काले दृष्ट्वा कमलवसतेरप्यकिंचित्कराणि ।
पद्माकान्तं प्रणिहितवतीं पालनेऽनन्यसाध्ये
साराभिज्ञा जगति कृतिनः संश्रयन्ते दये त्वाम् ॥

**ஆஜ்ஞாம் க்யாதிம் தநமநுசராநாதிராஜ்யாதிகம் வா**
**காலே த்ருஷ்ட்வா கமலவஸதேரப்யகிஞ்சித்கராணி ।**

பத்மாகாந்தம் ப்ரணிஹிதவதீம் பாலநேzநந்யஸாத்யே
ஸாராபிஜ்ஞா ஜகதி க்ருதிந: ஸம்ச்ரயந்தே தயே த்வாம் ll

(பதவுரை) ஹே தயே–ஓ தயையே, ஜகதி–உலகத்தில், ஸாராபிஜ்ஞா: க்ருதின:–ஸாராம்சத்தை அறிந்த பாக்ய வான்கள், கமலவஸதே: அபி–ப்ரஹ்மதேவனுக்கும், ஆஜ்ஞாம்–ஆஜ்ஞை என்ன, க்யாதிம்–யசஸ்ஸென்ன, தனம்–பணம் என்ன, அனுசரான்–ஏவிய தொழில் செய்யுமவர்கள் என்ன, ஆதிராஜ்யாதிகம் வா–ஸார்வபௌமத்வம் முதலியவை என்ன, இவைகளை, காலே–ஒரு காலவிசேஷத்தில், அகிஞ்சித்கராணி–கார்யகரங்களாகாதவைகளாக, த்ருஷ்ட்வா–கண்டு, அநந்யஸாத்யே–மற்றொருவராலும் ஸாத்தியமல்லாத, பாலநே–ரக்ஷணத்தில, பத்மாகாந்தம்–ச்ரிய: பதியை, ப்ரணிஹிதவதீம–நியமிக்கின்றவளான, த்வாம்–உன்னையே, ஸம்ச்ரயந்தே–ஆச்ரயிக்கிறார்கள்.

"தயையே! உலகத்தில் ஸாரமறிந்த பாக்யசாலிகள் பகவானுடைய நாபீகமலத்தில் உதித்த ப்ரஹ்மாவினுடைய ஆஜ்ஞையும, பெருமையும், செலவமும், பரிவாரங்களும், ஆளுகை முதலியவைகளும் ஒரு காலவிசேஷத்தில் பயன் படாமற்போகின்றன என்பதைத தெரிந்துகொண்டு, வேறொருவருக்கு ஸாத்யமல்லாத ரக்ஷணவ்யாபாரத்தில் ஸ்ரீநிவாஸனை அமைத்து வைத்திருக்கும் உன்னையே ஆச்ரயிக்கிறார்கள்."

(தாத்பர்யம்) குலசேகராழ்வாருடைய முகுந்தமாலா ஸ்தோத்ரத்தில் உள்ள சில ச்லோகங்களை நினைத்துத் தயையை ஸம்ஸார ஸமுத்ரத்தைத் தாண்டுவிக்கும் ஓடம் என்று வர்ணித்தார். குலசேகராழ்வாருடைய முகுந்த மாலையையும், திருமலையைப்பற்றி அவருடைய பாசுரங்களையும், அநுஸரித்து இந்த சதகத்தில் அநுபவம். மலைமேல் ஸஞ்சரிப்பவர்கள் மேடு பள்ளமான இடங்களில் ஏறுவதும் இறங்குவதுமாய் ஸஞ்சரித்து மூச்சு வாங்கிக்

கொண்டு மந்தாக்ராந்தை என்னும் சந்தத்தில் பாடுவார்கள். ராமகிரிமலைமேல் ஸஞ்சரித்த யக்ஷன் மந்தாக்ராந்தா வ்ருத்தத்தில் மேகஸந்தேசத்தைப் பாடினான், இந்த தசகம் திருமலைமேல் மந்தாக்ராந்தாவ்ருத்தத்தில பாடப்படுகிறது. ப்ரஜைகளுக்கெல்லாம் பதியான ப்ரஜாபதியின் ஐச்வர்யத்தையும், பசுபதியின் ஐச்வர்யத்தையும் நான் விரும்பேன். யமுனைக்கரையில் கதம்பவ்ருக்ஷமாயாவது, குந்தவ்ருக்ஷமாயாவது பிறக்க ஆசைப்படுகிறேன் என்கிற பக்தர் மனோரதத்தை அநுஸரித்து, இந்த ச்லோகத்திலும் அடுத்த ச்லோகத்திலும ப்ரஜாபதியின் ஐச்வர்யத்தில் வைராக்யத்தைக் காட்டி, திருமலையில் ஜங்கம ஸ்தாவரங்களில் ஏதேனுமொன்றாய்ப் பிறக்கவேண்டும் என்ற ஆசையைக் காட்டுகிறார். ஸ்ரீநிவாஸனுடைய உந்திக் கமலத்தில் அவதரித்த ப்ரஹ்மாவின் ஐச்வர்யமே நிலையற்றது. ஒருகாலததில் அது இருந்த இடம் தெரியாமல் போய்விடுகிறது. ஆகையால அதையும அஸாரமென்று தள்ளி அழியாத பதத்தைப் பெறுவதற்காக ஸாரம் அறிந்தவர் ஸ்ரீநிவாஸனுடைய தயையையே ஆச்ரயிக்கிறார்கள். ஸர்வேச்வரனை ஹரியைத் தவிர வேறு ஒருவருக்கும் பாலன ஸாமர்த்யம் இல்லை என்றும, கருணையே வடிவெடுத்த லக்ஷ்மீதேவியோடு கூடிய ருஷீகேசன் ஸர்வ ஸித்தாந்தங்களிலும, வேதாந்தத்திலும் ரக்ஷகனென்று பாடப்படுகிறான் என்றும், ப்ரமாண வசனங்களை அநுஸரித்து இங்கே ஸ்ரீநிவாஸனைத்தவிர வேறு ஒருவராலும் பாலனவ்யாபாரம் ஸாத்யமில்லை என்றும் அந்த வ்யாபாரத்தில் தயாதேவி ஸ்ரீநிவாஸனை நியமித்து வைத்திருப்பதாகவும் கூறுகிறார்.

प्राजापत्यप्रभृतिविभवं प्रेक्ष्य पर्यायदुःखं
जन्माकाङ्क्षन्वृषगिरिवने जग्मुषां तस्थुषां वा ।
आशासानाः कतिचन विभोस्त्वत्परिष्वङ्गधन्यैः
स्वीकारं क्षणमपि दये हार्दतुङ्गैरपाङ्गैः ॥ ४२ ॥

ப்ராஜாபத்யப்ரப்ருதிவிபவம் ப்ரேக்ஷ்ய பர்யாயதுக்கம்
ஜந்மாகாங்க்ஷந் வ்ருஷகிரிவநே ஜங்கமஷாம்
தஸ்துஷாம் வா |
ஆசாஸாநா: கதிசந விபோஸ் த்வத்பரிஷ்வங்கதந்யை
ரங்கீகாரம் க்ஷணமபி தயே ஹார்ததுங்கைரபாங்கை: ||

(பதவுரை) ஹே தயே—ஓ தயையே, கதிசன — பகவத் பக்தர்கள், ப்ராஜாபத்யப்ரப்ருதிவிபவம்—ப்ரஹ்ம பட்டம் முதலிய ஸம்பத்தையும், பர்யாயது:கம்—துக்கத்தினுடைய நாமாந்தரமாக, ப்ரேக்ஷ்ய—பார்த்து, த்வத்பரிஷ்வங்கதந்யை:—உனது ஆலிங்கனத்தினால் பெருமை பெற்றவைகளாயும், ஹார்த்ததுங்கை:—ப்ரீதியை மேற்கொண்டவைகளுமான, விபோ: — ப்ரபுவான ஸ்ரீநிவாஸனுடைய, அபாங்கை: — கடாக்ஷங்களால், க்ஷணமபி—ஒருக்ஷணமாவது, அங்கீகாரம்—ஏற்றுக்கொள்ளுவதை, ஆசாஸாநா: ஸந்த: — அபிலஷித்தவர்களாய்க்கொண்டு, வ்ருஷகிரிவநே — திருமலை அரண்யத்தில், ஜங்கமஷாம் — அசையும் பொருள்களுடையவாவது, தஸ்துஷாம் வா — அசையாப் பொருள்களுடையவாவது, ஜன்ம—பிறப்பை, ஆகாங்க்ஷன் — இச்சித்தார்கள்.

" தயையே! சில மஹான்கள் ப்ருஹ்மபதம் முதலிய ஐச்வரியத்தையும் வாஸ்தவத்தில் துக்கமென்றே கண்டு கொண்டு உன்னுடைய ஸம்ச்லேஷத்தால் பெருமை பெற்றதும், ப்ரீதியினால் உயர்வு பெற்றதுமான, ஸ்ரீனிவாஸ கடாக்ஷங்களால் ஒரு க்ஷணமாவது அங்கீகாரம் கிடைத்தால் போதுமென்ற மனோரதத்துடன் அதை எதிர்பார்த்துக் கொண்டு திருமலையில் அசையும் பொருள்களிலாவது அசையாப் பொருள்களிலாவது, ஏதாவது ஒரு ஜன்மத்தை ஆசைப்பட்டார்கள்."

(தாத்பர்யம்) இப்படி ஆசைப்பட்டவர்கள் யமுனை தடத்தில் ஒரு மரமாக ஜந்மம் கோரினவரும், பெருமாள் திருமொழியில் திருவேங்கடமுடையான் விஷயமாக 'ஊனேறு செல்வத்து' என்று துடங்கி 'கோனேறி வாழும்

குருகாய்ப் பிறப்பேனே' என்றும், 'மீனாய்ப்பிறக்கும் விதியுடையேனாவேனே' என்றும், 'வேங்கடக்கோன் தானுமிழும் பொன்வட்டில் பிடித்து உடனே புகப்பெறுவேனே' என்றும், 'தம்பமாய் நிற்கும் தவமுடையேனாவேனே' என்றும், கடைசியில் 'எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே' என்றும், பாடிய குலசேகராழ்வாரும், அந்த மனோரதத்தை அனுசரித்து இங்கே ஸாதுக்களுடைய ஆசையின் க்ரமத்தைக் காட்டுகிறார். இவர் திருவேங்கடமுடையானுடைய கண்டையின் அம்சமானபடியால் இவருக்குத் திருமலையில் ஜந்மம் முன்பே ஸித்தமாயிற்று. தனக்காக அதைப் புதிதாய் வேண்டுமென்று கோரவேண்டியதில்லை; முதலில் ஜங்கமங்களாக பிறப்பில் ஆசையைக்காட்டிப் பிறகு அந்த ஜந்மம் கிடைக்க பாக்யமில்லாவிடினும் விருக்ஷங்கள் முதலிய ஸ்தாவர ஜந்மம் கிடைத்தாலும் போதுமென்கிறார். வெகுகாலம் ஒரு வ்ருக்ஷமாகத் திருமலைமேல் இருந்தாலும் ஒரு க்ஷணமாவது ஸ்ரீநிவாஸனுடைய தயை நிறைந்த ப்ரீதிமயமான கடாக்ஷங்களைப் பெறப்பெற்றால் அந்த ஜந்மம் உயர்ந்ததாகும். ராமனை எவன் பார்க்கவில்லையோ, எவனை ராமன் கடாக்ஷிக்கவில்லையோ, அவன் உலகத்தார் பழிப்புக்கு இடமாவதன்றி தன்னைத்தானே அவன் பழிப்பான் என்கிற வால்மீகி வசனப்படிக்கே பகவானை நாம் தரிசனம் செய்வதுடன் அவரும் நமைக் கடாக்ஷித்தருளும்படி பாக்யம் பெறவேணும் என்பதைக் காட்டுகிறார். (42)

नाभीपद्मस्फुरणसुभगा नव्यनीलोत्पलाभा
क्रीडाशैलं कमपि करुणे वृण्वती वेङ्कटाख्यम् ।
शीता नित्यं प्रसदनवती श्रद्धानावगाह्या
दिव्या काचिज्जयति महती दीर्घिका तावकीना ॥

நாபீபத்மஸ்புரணஸுபகா நவ்யநீலோத்பலாபா
க்ரீடாசைலம் கமபி கருணே வ்ருண்வதீ வேங்கடாக்யம்
சீதா நித்யம் ப்ரஸதநவதீ ச்ரத்ததாநாவகாஹ்யா
திவ்யா காசிஜ்ஜயதி மஹதீ தீர்க்கிகா தாவகீநா ॥

(பதவுரை) ஹே கருணே — ஓ தயையே, நாபீபத்ம ஸ்புரண ஸுபகா—நாபியிலுள்ள தாமரை புஷ்பத்தால் அழகு வாய்ந்த, நவ்ய நீலோத்பலாபா — புதியதான கருநைதற்பூப் போன்ற காந்தியுள்ளதாயும், நித்யம் சீதா—எக்காலத்திலும் குளிர்ச்சியுள்ளதாயும், நித்யம் ப்ரஸந்னவதீ—எப்பொழுதும் தெளிவுள்ளதாயும் (எக்காலத்திலும் ஸௌம்யதையும் அநுக்ரஹமுமுள்ளதாயும்) ச்ரத்ததாநாவகாஹ்யா-விச்வாஸ முள்ளவர்களுக்கு ஸ்நாநம் பண்ணத் தகுந்ததாயும், திவ்யா-ஸர்வோத்க்ருஷ்டமாயும் (பரமாகாசத்திலுள்ளதாயும்), மஹதீ — பெரியதாயும் (த்ரிவிதபரிச்சேதரஹிதமாயும்), தாவகீநா — உன்னுடையதாயுமிருக்கிற, காசித் — ஒரு, தீர்க்கிகா — நடைவாவியானது, வேங்கடாக்யம்—திருவேங்கட மென்று பெயரையுடைய, க்ரீடாசைலம்-லீலாபர்வதத்தை வ்ருண்வதீ — ஆச்ரயித்துக்கொண்டு, ஜயதி — ஸர்வோத் க்ருஷ்டமாக பிரகாசிக்கிறது.

"கருணையே, தாமரைப்பூவின் ப்ரகாசத்தால் அழகாயும் அப்பொழுதலர்ந்த கருநெய்தல் பூவைப்போல் காந்தி உள்ளதாயும் எக்காலத்திலும் ப்ரஸன்னமாயும், சீதமாயும், ச்ரத்தையுள்ளவர்களால் அவகாஹநம் செய்யத் தக்கதாயும், மிகப் பெரியதாயும் உள்ள உன்னுடையதான ஒரு தீர்க்கிகை என்னும் வாபி வேங்கடமென்னும் ஒரு விலக்ஷணமான க்ரீடா பர்வதத்தை ஆச்ரயித்துக்கொண்டு விளங்குகிறது".

(தாத்பர்யம்) இங்கே ஸ்ரீநிவாஸனுடைய திருமேனியை ஒரு குளிர்ந்த நடைவாபியாக வர்ணிக்கிறார். அந்த திருமேனியில் நாபீகமலம் என்னும் உயர்ந்த தாமரை உளது. புதிய கருநெய்தல் புஷ்பம்போன்ற காந்தி அந்தத் திருமேனியில் ஓடுகிறது. தாபத்ரயங்களையும் அந்தத் திருமேனியின் குளிர்ச்சி சமனம் செய்யவல்லது. ச்ரத்தை உள்ளவரெல்லாம் அந்தத் திருமேனியின் குளிர்ச்சியை அனுபவிக்கலாம், தயாதேவியின் விளையாட்டிற்காக

ஸ்ரீநிவாஸன் திருமேனி என்கிற இந்த நடைவாபி ஏற்பட்டிருக்கிறதுபோலும்! என்று இங்கே வர்ணிக்கிறார். இந்தத் திருமேனியின் காந்தி நீரோட்டத்தில் ஈடுபடும்பொழுது கரு நிறமான அந்தக் காந்தி ஜலத்தில் நீலோத்பல புஷ்பங்கள் மிதப்பதுபோல் அநுபவம். அந்தத் திருமேனியை அநுபவிப்பதற்கு ச்ரத்தையென்னும் வித்தம் வேண்டும். ச்ரத்தை அதை அநுபவிப்பதற்கு அதிகாரத்தைக் கொடுக்கும். வேறு ஜாதி குலம் வேண்டியதில்லை.

यस्मिन्दृष्टे तदितरसुखैर्गम्यते गोष्पदत्वं
सत्यं ज्ञानं त्रिभिरवधिभिर्मुक्तमानन्दसिन्धुम् ।
त्वत्स्वीकारात्तमिह कृतिनः सूरिबृन्दानुभाव्यं
नित्यापूर्वं निधिमिव दये निर्विशन्त्यञ्जनाद्रौ ॥ ४४ ॥

**யஸ்மிந் த்ருஷ்டே ததிதரஸுகைர்கம்யதே கோஷ்பதத்வம்**
**ஸத்யம் ஜ்ஞாநம் த்ரிபிரவதிபிர்முக்தமாநந்தஸிந்தும் ।**
**த்வத்ஸ்வீகாராத்தமிஹ க்ருதிந: ஸூரிப்ருந்தாநுபாவ்யம்**
**நித்யாபூர்வம் நிதிமிவ தயே நிர்விசந்த்யஞ்ஜநாத்ரௌ ॥**

(பதவுரை) ஹே தயே – ஓ தயையே! யஸ்மின் – எந்த பரமபுருஷன், த்ருஷ்டே ஸதி – காணப்பட்டிருக்குமளவில், ததிதர ஸுகை:–அவனிற்காட்டில் (அவன் தர்சனத்திற்காட்டில்) வேறுபட்ட ஆனந்தங்களாலே, கோஷ்பதத்வம்-மாட்டுக்குளப்படியாயிருக்குகை, கம்யதே – அடையப்படுகிறதோ, ஸத்யம் – விகாரசூன்யராயும், ஜ்ஞானம் – ஜ்ஞான ஸ்வரூபனுயும், த்ரிபி:– மூன்று, அவதிபி:– அளவுகளால், முக்தம்-விடப்பட்டிருக்கிறதாயும் ஆநந்தஸிந்தும்– ஆனந்தக் கடலாயும், ஸூரிப்ருந்தானுபாவ்யம் – நித்ய முக்தர்களின் கூட்டங்களாலே அநுபவிக்கத்தகுந்தவனுயும், நித்யாபூர்வம்–ஸர்வகாலத்திலும் புதியதாயுள்ளவனுயும் உள்ள, தம்– அந்த பரமபுருஷனை, த்வத்ஸ்வீகாராத்–உன்னுடைய அங்கீகாரத்தாலே, இஹ–இந்த ஸம்ஸாரமண்டலத்தில், க்ருதின:–பாக்யவான்கள், நிதிமிவ – நிதியைப்போல,

அஞ்ஜநாத்ரௌ — அஞ்ஜன மலையில், நிர்விசந்தி — அனுபவிக்கிறார்கள்.

"தயையே! யாரைக்கண்டவளவில் வேறு ஸுகங்களெல்லாம் மாட்டுக் குளப்படிபோல் மிக அல்பமாகுமோ, மூன்று எல்லைகளும் நீங்கிய ஸத்யமும், ஜ்ஞானமும், அநந்தமுமான, நித்யஸூரிகள் அனுபவிக்கத்தக்க அந்த ஆநந்தஸமுத்திரத்தை உன்னுடைய அங்கீகாரத்தால் பாக்யமுள்ளவர்கள் நித்யாபூர்வமான நிதியைப்போல் இந்த அஞ்ஜன மலையில் அனுபவிக்கிறார்கள்".

(தாத்பர்யம்: முன் சுலோகத்தில் ஸ்ரீநிவாஸனுடைய திருமேனியை ஒரு குளிர்ந்த நடைவாபியாக அநுபவித்தார். இங்கே அவருடைய திவ்யாத்ம ஸ்வரூபத்தை ஒரு எல்லையில்லாத ஆனந்த ஸமுத்ரமாக அனுபவிக்கிறார். இந்த ஸமுத்ரத்தை அனுபவிக்கும் கால் உலகத்திலுள்ள உயர்ந்த மற்ற ஸுகங்களெல்லாம் ஒரு குளப்படி நீராகும். பகவானுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்தை தைத்திரீயோபநிஷத்தில் ஸத்யம், ஜ்ஞாநம், அநந்தம் என்று ஸ்வரூபலக்ஷணத்தால் வர்ணிக்கப்பட்டது. அந்த ப்ரஹ்ம ஸ்வரூபத்தையே ஆனந்தமயமென்றும, அந்த ஆனந்தம் வாக்குக்கும் மனதிற்கும் எட்டாததென்றும், அங்கே கூறப்பட்டது. அந்த உபநிஷத்திலுள்ள ஸத்யம், ஜ்ஞானம் என்கிற பதங்களை இந்த ச்லோகத்தில் அப்படியே அமைத்துவிட்டு அநந்தமென்கிற பதத்தின் அர்த்தத்தை இங்கே 'மூன்று எல்லைகளும் நீங்கியது' என்று விளக்குகிறார். ப்ரஹ்மத்தைத் தவிர மற்றப் பொருள்களுக்கெல்லாம் தேசபரிச்சேதமென்றும், காலபரிச்சேதமென்றும், வஸ்து பரிச்சேதமென்றும், மூன்று எல்லைகள் உண்டு. ஒரு தேசத்தில் உள்ளது மற்றொரு தேசத்தில் இல்லாததென்று சொல்லக்கூடிய பொருள் தேசபரிச்சேதமுள்ளதாகும். ப்ரஹ்மம் இன்ன இடத்தில் மட்டும் உள்ளது இன்ன இடத்தில் இல்லாதது என்று சொல்லமுடியாது. ஒரு காலத்திலுள்ளது

மற்றொரு காலத்தில் இல்லாதது என்று சொல்லக்கூடிய பொருள்கள் கால பரிச்சேதமுள்ளவை. ப்ரஹ்மம் இன்ன காலத்தில் மட்டும் உள்ளது, இன்ன காலத்தில் இல்லாதது என்று சொல்லக்கூடியதல்ல. ஒவ்வொரு பொருளும் அந்தந்தப் பொருளாகுமே ஒழிய வேறு பொருளாகாது. மண் மண்ணேயொழிய ஜலமாகாது. ப்ரஹ்மமோ என்றும் எல்லா வஸ்துவுமாகும். எப்பொருள்களும் ப்ரஹ்மத்தின் உருவமேயாகும். ப்ரஹ்மமல்லாத பொருளில்லை. இன்ன பொருள்தான் ப்ரஹ்மம் இன்னது ப்ரஹ்மமன்று என்று சொல்வது கூடாது. ப்ரஹ்மம் தவிற மற்றப் பொருள் களுக்கெல்லாம் வஸ்து பரிச்சேதம் உண்டு. ப்ரஹ்மத்துக்கு மட்டும் அந்த எல்லை கிடையாது. உபநிஷத்தில் 'ஆநந்த மயன்' என்று சொல்லப்பட்டதை இங்கே ஆநந்தளிந்து என்கிறார். குஹையில் நிதியைப்போல் ப்ரஹ்மம் மறைந் துளது என்று அந்த உபநிஷத்தில் கூறப்பட்டது. அஞ்ஜன மென்னும் மையைக்கொண்டு நிதியை கண்டு பிடிக்கலா மென்பர். அந்த அஞ்ஜனமலையில் ஸ்ரீநிவாஸனென்னும் நிதி எல்லோரும் காண விளங்குகிறது. இந்த நிதி அநுபவிக்க அநுபவிக்க எப்பொழுதும் புதியதாகவே இருக்கும். இது ஆராத அமுதம். அபர்யாப்தமான அமிர்தம். திகட்டாத இன்பம். இந்த அம்ருதத்தை நித்யஸூரிகளும் பரமபதத்தி லிருந்து அநுபவிக்க வருகிறார்கள். 'தண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பு' என்கிற பாசுரத்தை நினைக்கிறார்.

முன் ச்லோகங்களில் பெருமாளுடைய திருமேனி யாகிய நீண்ட வாயியில் வேங்கடமலை ஓர் விளையாட்டு மலையைப்போல் காண்கிறதென்றார். இங்கே அஞ்ஜந மலையில் பெருமாளுடைய எல்லையில்லாத ஆநந்தஸ்வரூப மாகிய நிரதிசயப்ருஹத்தான திவ்யாத்மஸ்வரூபம் விளங்கு கிறது என்கிறார். ப்ரஹ்மஸ்வரூபம் மூன்று விதமான எல்லைகளில்லாத பெரியதாயிருந்தாலும் ஹ்ருதயமென்னும் குஹைக்குள் ஓர் நிதியைப்போல் அநந்தமான ப்ரஹ்ம

மறைந்து கிடக்கிறதென்றும், அங்கே அன்போடு தேடினோர் அந்த நிதி பெருமாளுடைய க்ருபை என்னும் அஞ்ஜநத்தால் ஜ்ஞாநக்கண்ணுக்கு அனுபவகோசரமாவதாக தைத்திரீய ச்ருதி ஓதுகிறது. ‘நிஹிதம்’ என்ற ச்ருதி சப்தத்திற்கு ‘நிதிபோல் வைக்கப்பட்டுளது’ என்று பொருள். அல்பமான ஹ்ருதயத்திற்குள் ஹிரண்ய நிதியாக ப்ரஹ்மம் உள்ளே ஸ்வரூபமாக இருப்பதாக தஹர வித்யை ஓதுகிறது. அதற்கு அநுகுணமாக ‘நிஹிதம்’ என்பதற்கும் ‘நிதிபோலுள்ளது’ என்று பொருள் கொள்ளுவது உசிதமே. பூமிக்குள் மறைந்து கிடக்கும் நிதியை அஞ்ஜநமென்னும் மையைக் கண்ணில் தடவிக்கொண்டு ஸுலபமாய்க் காணலாமென்பர். இங்கே ஒருமலை ப்ரவாஹமாக அஞ்ஜநமுளது. மலையே அஞ்ஜநமலை. அது தயையின் மூர்த்தி என்று முதல் சுலோகத்திலேயே ஸாதித்தார். இந்த அஞ்ஜநமலையை நாம் ஸேவித்துக்கொண்டு அதை நெருங்கி அதில் ஸஞ்சரிக்கையில், அது எல்லையில்லாத இன்பமான ஆநந்தமயப்ரஹ்மஸ்வரூபத்தை நமக்குத் தெரியச்செய்கிறது. இந்த ஆநந்த நிதியைக் கூட்டம் கூட்டமாகக் கூடிச் சேர்ந்து அனுபவிக்கவேணும். இந்த நிதியை அடைவதற்கு யாதொரு பொருள் செலவும் இல்லை. எத்தனைக்கெத்தனை பாகவதர்கள் கூட்டம் அதிகமாகிறதோ அவ்வளவுக்கவ்வளவு எல்லோருக்கும் ஆநந்தாதிக்யம். அவரவர்கள் முதலுக்குத் தக்கபடி ஏற்றத் தாழ்ச்சியாக ஆநந்தத்தில் பாகமென்பது இல்லை. ஆநந்தம் எல்லாருக்கும் ஸமம். (44)

सारं लब्ध्वा कमपि महतः श्रीनिवासाम्बुराशेः
काले काले घनरसवती कालिकेवानुकम्पे ।
व्यक्तोन्मेषा मृगपतिगिरौ विश्वमाप्याययन्ती
शीलोपज्ञं क्षरति भवती शीतलं सद्गुणौघम् ॥ ४५ ॥

ஸாரம் லப்த்வா கமபி மஹத: ஸ்ரீநிவாஸாம்புராசே:
காலே காலே கநரஸவதீ காளிகேவாநுகம்பே !

வ்யக்தோந்மேஷா ம்ருகபதிகிரௌ விச்வமாப்யாயயந்தீ
சீலோபஜ்ஞம் க்ஷரதி பவதீ சீதலம் ஸத்குணௌகம்॥

(பதவுரை) ஹே அநுகம்பே – ஓ தயையே, கநரஸவத் ஆச்ரிதர் பக்கல் த்ருடமான ஸ்நேஹமுள்ளவளாய் (உத்தரமான கர்ஜனமுள்ளவளாய், ஸாதாரணமாய் ஜலமுள்ளவளாய்) ஸ்ரீநிவாஸாப்புராசே:- ஸமுத்ரம் போன்ற ஸ்ரீநிவாஸனிடத்திலிருந்து, (ஸ்ரீநிவாஸன் போன்ற ஸமுத்ரத்தினிடத்திலிருந்து), கமபி-விலக்ஷணமான, ஸாரம்-ஜலத்தை, (ஸாராம்சத்தை) லப்த்வா – அடைந்து, ம்ருகபதிகிரௌ – ஸிம்ஹாசலம் என்ற பெயருடைய திருமலையில், (ஸிம்ஹங்கள் வஸிக்கும் மலையில்) வ்யக்தோந்மேஷா – ப்ரகாசமான ஆவிர்ப்பாவத்தையுடைய, பவதீ – நீ, காளிகேவ – மேக பங்க்திபோல, விச்வம் ப்ரபஞ்சத்தை, ஆப்யாயயந்தீ ஸதீ. ஸந்தோஷிப்பிக்க வேணுமென்ற அபிப்ராயமுள்ளவளாய்க் கொண்டு, காலே காலே–அந்த அந்தக் காலங்கள் தோறும் சீலோபஜ்ஞம் – ஸௌசீல்யத்தை முதலாக உடைய, சீதளம் குளிர்ந்த, ஸத்குணௌகம் – ப்ரவாஹம் போன்ற பகவத் கல்யாண குணத்தை, (கல்யாண குணங்கள் போன்ற ப்ரவாஹத்தை) க்ஷரதி – வர்ஷிக்கிறாய். (அதவா) சீலோபஜ்ஞம் – ஸ்வபாவஸித்தமாக, க்ஷரதி – வர்ஷிக்கிறாய்.

"அநுகம்பையே! மிகப்பெரியதான ஸ்ரீநிவாஸ ஸமுத்ரத்திலிருந்து விலக்ஷணமான ஸாரத்தை க்ரஹணம் செய்து அந்த அந்தக் காலங்களில் கனரஸத்தோடு கூடிய மேக மாலையைப்போல் ஸிம்ஹாசலத்தில் ஆவிர்பவித்து ஜகத்தை எல்லாம் குளிர்ச்சி அடைவிக்க ஸௌசீல்யம் முதலிய குளிர்ந்த வாத்ஸல்ய குணங்களை வர்ஷிக்கிறாய்".

(தாத்பர்யம்) மேகங்கள் ஸமுத்திரத்திலிருந்து ஜலத்தை ஆவிருபமாக க்ரஹணம் செய்து உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்கிற பேதமில்லாமல் எல்லோருக்கும் ஸமமாகக் குளிர்ந்த ஜலமாக வர்ஷிக்கும். இங்கே தயைக்கும் மேகமாலைக்கும் ஒக்கும்படியாக சில விசேஷணங்களில் ச்லேஷையாக

இரண்டர்த்தம் கொள்ளவேண்டும். கனரஸவதீ என்பதற்குக் கனமான ரஸமென்னும ப்ரீதி உடையவள் என்று தயாவிஷயத்திலும், மேகத்தின் கர்ஜனத்தை உடையது என்று மேகமாலை விஷயத்திலும் அர்த்தம். தயையை முன்பு நதியாகவும், ஸமுத்ரமாகவும், வ்ருக்ஷமாகவும் வர்ணித்திருக்கிறார். இங்கே தயையை மலையினுச்சியி லுள்ள மேகமாலையாக வர்ணிககிறார். மேகம் பக்ஷபாத மில்லாமலும், உயர்வு தாழ்வு கவனியாமலும் ஸமமாக எல்லா ஸ்தலங்களிலும் வர்ஷிப்பதுபோல தயையின் ஸ்வபாவம். விச்வம் என்பது உயர்ந்தது தாழ்ந்தது ஆகிய எல்லா வற்றையும் காட்டுகிறது. இஙகே சீலமென்பது ஸௌசீல் யத்தைச் சொல்லுகிறது. உயர்ந்தவன் தாழ்ந்தவரோடு நெருங்கி பேதமில்லாமல் அணைந்து வர்த்திப்பது ஸௌசீல்ய குணமென்பர். இது தயையால் ஏறபடும குணங்களில் முதன்மையானதாகும. ஸௌசீல்யம், ஸௌலப்யம், வாத் ஸல்யம் முதலிய கல்யாண குணங்கள் தயையினுடைய பரிவாரங்கள். அதனால் தயையென்னும் மேகமாலை அந்தக் குணங்களை வர்ஷிக்கிறதாக வர்ணிக்கிறார். (45)

भीमे नित्यं भवजलनिधौ मज्जतां मानवाना-
मालम्बार्थं वृषगिरिपतिस्त्वन्निदेशात्प्रयुङ्क्ते ।
प्रज्ञासारं प्रकृतिमहता मूलभागेन जुष्टं
शाखाभेदैः सुभगमनघं शाश्वतं शास्त्रपाणिम् ॥ ४६ ॥

பீமே நித்யம் பவஜலநிதௌ மஜ்ஜதாம் மாநவாநாம்
ஆலம்பார்த்தம் வ்ருஷகிரி பதிஸ்த்வந்நிதேசாத்
ப்ரயுங்க்தே ।
ப்ரஜ்ஞாஸாரம் ப்ரக்ருதிமஹதா மூலபாகேந ஜுஷ்டம்
சாகாபேதைஸ்ஸுபகமநகம் சாச்வதம் சாஸ்த்ரபாணிம் ॥

(பதவுரை) வ்ருஷகிரிபதி:-ஸ்ரீநிவாஸன், த்வந்நியோகாத்-உனது நியமனத்தினால், பீமே—பயங்கரமான, பவஜல நிதௌ—ஸம்ஸார ஸாகரத்தில், நித்யம் – எக்காலத்திலும்

மஜ்ஜதாம்—முழுகாநிற்கிற, மாநவானும் மனுஷ்யர்களுடைய ஆலம்பார்த்தம் – கைப்பிடிக்காக, ப்ரஜ்ஞாஸாரம்-ஜ்ஞானத்தையே ஸாராம்சமாக உடையதாய், ப்ரக்ருதி மஹதா-தனக்கு ப்ரக்ருதியான அகாரத்தாலே பெருமை பெற்றதான, மூலபாகேன-வேதத்திற்கு மூல பூதமான ப்ரணவத்தால், ஜுஷ்டம்- அடையப்பட்டதாய், ப்ரக்ருதி மஹதா-ஸ்வபாவத்தாலே பருமனுள்ளதான, மூலபாகேன-தோள் முதலிய அவயவபாகத்தால், சாகாபேதை: - வேத சாகா விசேஷங்களாலே, ஸுபகம்-மனோஹரமாய், சாகா பேதை: - பலவிதமான விரல்களாலே, ஸுபகம் - ஸுந்தரமாய், அநகம - நிர்தோஷமாய், சாச்வதம் - அழிவற்றதாய் இருக்கும், சாஸ்த்ரபாணிம்-சாஸ்த்ரமாகிற கையை, ப்ரயுங்க்தே-பிரயோகிக்கிறான். (அதாவது கொடுக்கிறான்)

"உன்னுடைய நியமநத்தால் வேங்கடபதியானவர் பயங்கரமான ஸம்ஸார ஸமுத்ரத்தில் எப்பொழுதும் முழுகிக்கொண்டே இருக்கும் மானிடர்களுக்குக் கரையேறக் கைப்பிடிப்புக்காக ஜ்ஞாநஸாரமாயும், தனக்கு வேரான ப்ரணவமெனனும் மூலத்தோடு கூடியதாயும், விரல்களென்னும் சாகைகளால் அழகாயும் நிர்தோஷமாயுமுள்ள சாச்வதமான சாஸ்த்ரமாகிற கையை அளிக்கிறான்".

(தாத்பர்யம்) முன் சுலோகங்களில் ஸாரமான குணங்கள் தயையால வாஷிக்கப்படுகிறதையும், பகவத்ஸ்வரூபமான ஆனந்த ஸமுத்ரத்தில் ச்ரத்தையுள்ளவர்கள் முழுகி ஆநந்திக்கலாமென்பதையும் கூறினார். பயங்கரமான ஸம்ஸார ஸமுத்ரத்தில் முழுகியிருப்பவர்கள் யாராவது காருணிகர்கள் கைகொடுத்து அதிலிருந்து கரையேற்றிவிட்டாலல்லவோ முற்கூறிய ஆநந்தக்கடலில் முழுகலாம். ஸம்ஸார ஸமுத்ரத்திலிருந்து நம்மை உத்தாரணம் செய்ய பகவான் காருண்யத்தால் சாஸ்த்ரமென்னும் கையை நீட்டுகிறான். சாஸ்த்ரத்தை ப்ரவர்த்திப்பது கருணையின் கார்யம். இங்கே சாஸ்த்ரத்தை திருக்கையாக ரூபணம் செய்கிறார். இங்கே

கூறும் விசேஷணங்கள் ச்லேஷையால் சாஸ்த்ரத்திற்கும் கைக்கும் பொருந்தும். வேத சாஸ்த்ரத்திற்கு மூலம் ப்ரணவம். ப்ரணவத்திற்கு ப்ரக்ருதி, அதாவது மூலம் அகாரமென்னும் முதலெழுத்து அது ஸமஸ்தமான சப்தராசிகளுக்கும் காரணமானது. ப்ரணவத்திற்கும் அகாரத்தால் ஏற்றம். கைக்கு மூலபாகம் திருத்தோள்கள் முதலிய அவயவமாகும். இது மஹா புருஷனாகிய பகவானுக்கு ஸாமுத்ரிகா லக்ஷண சாஸ்த்ரப்படிக்கு ஸ்வபாவமாய்ப் பருத்திருக்கும். வேத வ்ருக்ஷத்திற்குப் பல சாகைகள் இருப்பதுபோல் கையில் அழகான விரல்கள் உள்ளன. விரல்களுக்கும் சாகை என்று பெயர். பாஞ்சராத்ர சாஸ்த்ரத்திற்கு மூலம் மூலவேதம் என்கிற ஏகாயந ச்ருதி. இங்கே மூலபாகமென்பதால் அடுத்த சுலோகத்தால் சொல்லப்போகிற பாஞ்சராத்ர சாஸ்த்ரத்திற்கு ஆதாரமான மூலவேதத்தையும் ஸூசிக்கிறார். (46)

विद्वत्सेवाकतकनिकषैर्वीतपङ्काशयानां
पद्माकान्तः प्रणयति दये दर्पणं ते स्वशास्त्रम् ।
लीलादक्षां त्वदनवसरे लालयन्विप्रलिप्सां
मायाशास्त्राण्यपि दमयितुं त्वत्प्रपन्नप्रतीपान् ॥ ४७ ॥

**வித்வத்ஸேவாகதகநிகஷைர்வீதபங்காசயாநாம்**
**பத்மாகாந்த: ப்ரணயதி தயே தர்ப்பணம் தே ஸ்வசாஸ்த்ரம் ।**
**லீலாதக்ஷாம் த்வதநவஸரே லாலயந் விப்ரலிப்ஸாம்**
**மாயா சாஸ்த்ராண்யபி தமயிதும் த்வத்ப்ரபந்நப்ரதீபாந் ॥**

(பதவுரை) ஹே தயே-ஓ தயையே, பத்மாகாந்த:-ஸ்ரீநிவாஸன், வித்வத்ஸேவாகதகநிகஷை:- வித்வான்களுடைய பரிசரணங்களாகிற தேத்தாங் கொட்டையின் உரைத்தல்களாலே, வீதபங்காசயாநாம்-பாபமொழிந்த சித்தமுள்ளவர்களுக்காக (சேறு போயிருக்கும் ஜலாதார பாத்ரத்தையுடையவர்க்காக) தே-உனக்கு, தர்ப்பணம்-கண்ணாடியான, ஸ்வசாஸ்த்ரம்-தன்னுடைய சாஸ்த்ரத்தை,

ப்ரணயதி - பண்ணுகிருன். த்வதநவஸரே - நீ இல்லாத ஸமயத்தில், லீலாதக்ஷாப் - லீலையில் ஸமர்த்தையான, விப்ர லிப்ஸாம் - வஞ்சன இச்சையை, லாளயன்ஸன் - கொண்டாடா நின்றுகொண்டு, த்வத்ப்ரபந்நப்ரதீபான் - உன் ஆச்ரித விரோதிகளை, தமயிதும் - சிக்ஷிப்பதற்கு, மோஹசாஸ்த்ராணி அபி - மோஹன சாஸ்த்ரங்களையும், ப்ரணயதி - செய்கிருன்.

"மஹான்களான தத்வஞானிகளுடைய ஸேவை என்கிற தேத்தாங் கொட்டையின் ப்ரபாவத்தால் பாபம் என்னும் சேறு முழுவதும் நீங்கி சுத்தியடைந்த மனதுடைய வர்களின் ப்ரயோஜனத்திற்காக உனக்குக் கண்ணுடி போன்ற பகவத் சாஸ்த்ரத்தை ஶ்ரீநிவாஸன் ஏற்படுத்து கிருன். நீ அருகே இல்லாத ஸமயத்தில் லீலையில் ஸமர்த்தை யான ஏமாற்றும் இச்சையை லாலநம் செய்துகொண்டு உன்னைச் சரணமடைந்தவர்களுக்கு விரோதிகளான ஆஸுர ப்ரக்ருதிகளை நிக்ரஹிப்பதற்காக மோஹ சாஸ்த்ரங்களையும் செய்கிருன்".

_ _ - __, வேதசாஸ்த்ரம் என்னும் கையைக் கொடுத்து ஸம்ஸார ஸமுத்ரத்திலிருந்து நம்மை உத்தாரணம் செய்வதாகக் கூறினர். வேத சாஸ்த்ரங்களில் இந்த்ரன் முதலிய அநேக தேவதைகளும் அவர்கள் தயையும் ஸ்தோத்ரம் செய்யப்படுகிறது. ஶ்ரீநிவாஸனுடைய தயை தான் ஸத்யமென்றும், மற்றவர்களுடைய தயை கானல் ஜலம்போல் வெறும் தோற்றமென்றும் முன் தசகத்தின் இறுதியில் கூறினர். வேதசாஸ்த்ரத்தில் எல்லா தேவதை களையும் ஸ்தோத்ரம் செய்வதால் ஶ்ரீநிவாஸனுடைய தயையைத்தான் அவலம்பிப்பது என்பது எப்படி ஏற்படும்? சாஸ்த்ரம் என்பதில் சேர்ந்த சில புராணங்கள் ப்ரஹ்மாதி தேவதைகளையும் உத்தம தேவதைகளாகச் சொல்லுகின் றனவே! அந்தப் புராண சாஸ்த்ரங்கள் கருணையால் ஏற்பட்டதாகுமோ? இப்படி வரும் ஆக்ஷேபங்களை இந்த சுலோகத்தில் பரிஹரிக்கிருர். பாஞ்சராத்ராகமங்களை

பகவத் சாஸ்த்ரமென்று சொல்லுவர். இந்த சாஸ்த்ரத்தில் பகவானுடைய பெருமையை மட்டும் கண்ணாடியிற்போல தெளிவாகக் காட்டப்படுகிறது. வேறு தேவதைகளை அந்த சாஸ்த்ரத்தில் ப்ரசம்ஸிப்பதில்லை. அந்த சாஸ்த்ரம் தயா தேவிக்குக் கண்ணாடிபோலாகும். தயா தேவி அந்த சாஸ்த்ரக் கண்ணாடியில் நன்ருய் ப்ரதிபலிக்கிருள். பெரியோர்களை நீடித்த காலம் ஆச்ரயித்து அவர்கள் ஸேவை என்னும் தேத்தாங் கொட்டையால் மனதிலுள்ள சேற்றைப் போக்கி நன்ருய்த் தெளியச்செய்து நிர்மலமான மனது உடையவர்களுக்குப் பகவானுடைய பெருமையையும் தத்வத்தையும் உள்ளபடி தெளியக்காட்ட இந்த பாகவத சாஸ்த்ரம் தயாதேவியின் முகோல்லாஸத்திற்கு ஒரு முகக் கண்ணாடிபோல் ஸ்ரீநிவாஸனுல் ஏற்படுத்தப்பட்டது. மற்ற மாயா சாஸ்த்ரங்கள் ஆஸுரப்ரக்ருதிகளுக்கு மோஹத்தை அவர்கள் பாபங்களுக்குப் பலமாக வ்ருத்தி செய்வதற்காக லீலாதேவியின் லாலனமாக ஏற்படுத்தப்படுவது. ஸாத்விக ப்ருக்ருதியுள்ளவர் அந்த மாயா சாஸ்த்ரங்களினுல் ஏமாற மாட்டார்கள். (47)

दैवात्प्राप्ते वृषगिरितटं देहिनि त्वन्निदाना-
स्स्वामिन्पाहीत्यवशवचने विन्दति स्वापमन्त्यम् ।
देवः श्रीमान्दिशति करुणे दृष्टिमिच्छंस्त्वदीया-
मुद्घातेन श्रुतिपरिषदामुत्तरेणाभिमुख्यम् ॥ ४८ ॥

**தைவாத் ப்ராப்தே வ்ருஷகிரிதடம் தேஹிநி த்வந்நிதாநாத்**
**ஸ்வாமிந் பாஹீத்யவசவசனே விந்ததி ஸ்வாபமந்த்யம் ।**
**தேவ : ஸ்ரீமாந் திசதி கருணே த்ருஷ்டிமிச்சம்ஸ்த்வதீயாம்**
**உத்காதேந ச்ருதிபரிஷதாமுத்தரேணுபிமுக்யம் ॥**

(பதவுரை) ஹே கருணே–ஓ தயையே, த்வந்நிதாநாத்–உன்னைக் காரணமாக உடையதாய் (அதாவது ஒரு கால விசேஷத்தில் உன்னுலே ப்ரவர்த்திதமாயிருக்கும் யாத்ருச்சிகஸுக்ருதாதி ரூபமாயிருக்கும் பாக்யவிசேஷத்தாலென்னபடி) வ்ருஷகிரிதடம்–திருமலையின் தாழ்வரையை, ப்ராப்தே–

அடைந்திருக்கும், தேஹினி—ப்ராணியானவன், த்வந் நிதாநாத்—நீயாகிற காரணத்தால், ஹே ஸ்வாமின்—ஸ்வாமியே, பாஹி—ரக்ஷிக்கக் கடவாய், இதி—என்று, அவசவசநே—தனக்கு ஸ்வாதீனமில்லாத வார்த்தையை உடையவனாய்க் கொண்டு, அந்த்யம் ஸ்வாபம்—கடைசித் தூக்கத்தை (மரணத்தை) விந்ததி ஸதி—அடையா நிற்குமளவில், தேவ:—ஸர்வலோகநாதனான, ஸ்ரீமான்—ஸ்ரீநிவாஸன், த்வதீயாம்—உன்னுடையதான, த்ருஷ்டிம்—கடாக்ஷத்தை, இச்சன்—ஆசைப்படா நின்றுகொண்டு, ச்ருதிபரிஷதாம் – வேத ஸமூஹங்களுக்கு, உத்காதேன - ஆரம்பமாயிருக்கும், உத்தரேண – பதில் வார்த்தையினால், (அதாவது வேதங்களுக்கு நியமேன ப்ரதமத்தில் படிக்கப்படுகிற ஓங்காரத்தினால் என்றபடி) ஆபிமுக்யம்—முன்வந்து நிற்கும் தன்மையை, திசதி—கொடுக்கிறான்.

"கருணையே! ஸுக்ருதவிசேஷத்தால் உன்னுடைய அநுக்ரஹத்தால் திருமலையின் தாழ்வரையை அடைய பாக்யம்பெற்ற ப்ராணியானவன் உன்னுடைய ப்ரேரணையால் தன்னை அறியாமல் 'ஸ்வாமி என்னை ரக்ஷிக்கவேண்டு'மென்று சொல்லிக் கண் மூடுங்கால், ஸ்ரீநிவாசன் உன்னுடைய கடாக்ஷத்தைப் பெற ஆசைப்பட்டு, 'ஓம்' என்று ஒப்பித் தலைக்காட்டும் ஓங்காரம் என்னும் வேதங்களின் முதலெழுத்தால் ஆபிமுக்யத்தைக் கொடுக்கிறான்."

ரியம்) வேதசாஸ்த்ரங்களைக் கொடுத்து அதிலுள்ள ஸம்சயங்களையும் தீர்ப்பதற்காகப் பகவானுடைய தத்வத்தை ஐயந்திரிபறத் தெளியக் காட்டும் பாகவத சாஸ்த்ரத்தைக் கொடுத்தால்மட்டும் போதாதே! கடைசியில் தேஹத்தை விடும் காலத்தில் பகவான் விஷயமாக அந்திம ஸ்மரணம்வேண்டுமே, "எதை ஸ்மரித்துக்கொண்டு முடிவில் தேஹத்தை விடுகிறானோ, அதை அடைகிறான்" என்றல்லவோ கீதையில் பகவானுடைய வார்த்தை. திருமலையின் தாழ்வரையை அடைந்தவர்களுக்கு

ஸ்ரீநிவாஸன் விஷயமான அந்திம ஸ்மரணத்தையும் தயையே செய்விக்கிறாள் என்கிறார். வேங்கட மலைக்குச் செல்லும்படியான பாக்யமும் தயையின் புருஷகாரத்தால் பாக்யவசத்தால் கிடைக்கிறது. வேங்கட மலைக்கு அருகிலுள்ள நாட்டில் தேஹவியோகம் அடைகிறவர்கள் கரணகளேபரங்கள் ஸ்வாதீனமில்லாவிடினும், அவசமாக வாவது தயையின் கடாக்ஷத்தால் ஸ்வாமி காப்பாற்ற வேணுமென்று சொல்லுவார்கள். இதைக்கேட்ட ஸ்ரீநிவாஸன் தயையின் கடாக்ஷத்தைப் பெறுவதற்காக தயை சொல்லி வைத்துக் கேட்கும்படி செய்த ரக்ஷணப்ரார்த்தனைக்கு 'ஓம்' என்று அங்கீகாரத்திற்கு அடையாளமாய் பதில் வார்த்தை சொல்லிக்கொண்டு, அவன் முன்னிலையில் வந்து ஸேவை ஸாதிப்பார். வடமொழியில 'ஓம' என்கிற பதத்திற்கு 'ஆம' என்றும், 'ஒப்புகொள்ளுகிறேன்' எனறும் பொருளுண்டு. வேதங்களுக்கெல்லாம ப்ரதிபாத்யனான பரம புருஷன் வேதங்களில முதலெழுத்தாகிய ப்ரணவமென்னும் ஓங்காரத்தைச் சொல்லி அப்படியே ஆகட்டும் என்று பதில் சொல்லுகிறான். கடைசிக் காலததில பகவானுடைய திரு வாக்கிலிருநது ப்ரணவம் கர்ணமந்த்ரமாக இவன் காதில் விழுகிறது. இங்கே உத்தரத்தினால் என்கிற பதம் பதிலைச் சொல்வதுமன்னியில பகவானை அடைவதற்கு மார்க்க மென்று ச்ருதிபரிஷத்துக்களால் உத்கோஷிக்கப்படும் உத்தரமாாககமான ஆர்ச்சிராதி கதியையும் சொல்லும். உபநிஷத்துக்களில ப்ரஸித்தமான உத்தரமார்க்கத்தால் பகவானுடைய ஆபிமுக்யத்தை அடையும்படி செய்கிறுரென றும பொருள கிடைக்கிறது. உத்காதம என்பது முதலுக்குப் பெயர். வேதங்களின முதல் ப்ரணவமாகும். (48)

श्रेयःसूतिं सकृदपि दये संमतां यः सखीं ते
शीतोदारामलभत जनः श्रीनिवासस्य दृष्टिम् ।
देवादीनामयमनृणतां देहवत्त्वेऽपि विन्दन्
बन्धान्मुक्तो बलिभिरनघैः पूर्यते तत्प्रयुक्तैः ॥ ४९ ॥

**ச்ரேயஸ்ஸூதிம் ஸக்ருதபி தயே ஸம்மதாம் ய: ஸகீம் தே
சீதோதாராமலபத ஜந: ஸ்ரீநிவாஸஸ்ய த்ருஷ்டிம் ।
தேவாதீநாமயமந்ருணதாம் தேஹவத்வேऽபி விந்தந்
பந்தாந்முக்தோ பலிபிரநகை: பூர்யதே தத்ப்ரயுக்தை: ॥**

(பதவுரை) ஹே தயே-ஓ தயையே, ய: ஜந:-யாதொரு ப்ராணியானவன், ச்ரேயஸ்ஸூதிம்-நிருபாதிகச்ரேயோரூபமான மோக்ஷத்தை உண்டுபண்ணுகிறதாயும், சீதோதாரா-குளிர்ச்சி, ஔதார்யம் இவைகள் பொருந்தியதாயுமிருக்கும், தே-உன்னுடைய, ஸம்மதாம்-அபிமதமான, ஸகீம்-தோழியான, ஸ்ரீநிவாஸஸ்ய-ஸ்ரீநிவாஸனுடைய, த்ருஷ்டிம்-கடாக்ஷத்தை (அதாவது ஜாயமான கடாக்ஷத்தை) ஸக்ருதபி-ஒரு தரமாவது, (ஒரு ஜன்மத்திலாவது) அலபத-அடைந்தானோ, அயம்-இவன் (சரீரமுள்ளவனுயிருக்கச் செய்தேயும்) தேவாதீனாம்-தேவர்கள் முதலானவர்களிடத்தில், அந்ருணதாம்-கடனில்லாமையை, விந்தன்-அடையாநின்றுகொண்டு, பந்தாத்-இந்த தேஹ பந்தத்தினின்று, முக்த:-விடுபட்டவனுய், தத்ப்ரயுக்தை:-அந்த தேவர்களாலே ஸமர்ப்பிக்கப்பட்டிருக்கிற, அநகை: - நிர்தோஷங்களான, பலிபி: - உபஹாரங்களாலே, பூர்யதே - பூரிக்கப்படுகிறன்.

" தயையே ! எந்த மனுஷ்யன் ஸர்வோத்க்ருஷ்டமான ச்ரேயஸ்ஸாகிய மோக்ஷத்தை அளிக்கக்கூடியதும், குளிர்ச்சியும் ஔதார்யமுமுடையதும், உன்னுடைய ப்ரியஸகியுமான ஸ்ரீநிவாஸ த்ருஷடியை அதாவது கடாக்ஷத்தை, ஒரு தரமாவது பெறுகிருனே அவன் சரீரத்தோடு கூடியிருக்கையிலேயே தேவதைகளுக்குக் கொடுக்க வேண்டிய கடன்களிலிருந்து விடுபட்டவனுகி தேஹமென்னும் கட்டிலிருந்து விமோசனம் பெற்று அநத தேவர்களாலே ஸமர்ப்பிக்கப்படும் உபஹாரங்களால் பூர்த்தி செய்யப்படுகிருன் "

(தாத்பர்யம்) ஸ்ரீநிவாஸனுடைய த்ருஷ்டி தயாதேவிக்கு ப்ரியமான தோழி. தயையின் கடாக்ஷங்கள் யாரிடத்தில் விழுகின்றதோ அந்த இடத்தில் அவளுடைய தோழியாகிய

ஸ்ரீநிவாஸனுடைய த்ருஷ்டியும் கூடச்செல்லுகிருள். தயையை அனுஸரித்துப் பெருமாள் கடாக்ஷம் கூடவிழுகிறது. ஒருதரம் அந்தக் கடாக்ஷம் பிறக்குங் காலத்தில் விழப்பெற்ருல் ஸாத்விகனுகி மோக்ஷத்தில் கருத்துள்ளவனுவான் என்கிற சாஸ்த்ரவசனத்தை இங்கே நினைக்கிருர். பித்ருக்களுக்கும், தேவர்களுக்கும், ரிஷிகளுக்கும் கொடுக்க வேண்டிய கடன்களை முக்கடனென்பர். தயாதேவியைச் சரணமடைந்து ஸ்ரீநிவாஸ கடாக்ஷம் பெற்றவர்கள் இந்தக் கடன்களிலிருந்து விடுபடுவர். இவர்கள் மோக்ஷமடையுங்கால் இவர்களுக்குத் தேவர்கள் மிகுந்த வணக்கத்துடனும் ஆதரவுடனும் இவர்களுக்குப் பலிகள் கொண்டுவந்து ஸமர்ப்பிப்பார்கள் என்பது சாஸ்த்ரம். இதனுல் இவர்கள் தேவர்களுக்குக் கடன் கொடுக்க வேண்டியிருந்ததுபோய் இவர்களுக்குத் தேவர்கள் கடன் கொடுக்கவேண்டியவர்களாகிருர்கள் என்பது கருத்து. (49)

दिव्यापाङ्गं दिशसि करुणे येषु सद्देशिकात्मा
क्षिप्रं प्राप्ता वृषगिरिपतिं क्षत्रबन्ध्वादयस्ते ।
विश्वाचार्या विधिशिवमुखाः स्वाधिकारोपरुद्धा
मन्ये माता जड इव सुते वत्सला मादृशे त्वम् ॥ ५० ॥

திவ்யாபாங்கம் திசஸி கருணே யேஷு ஸத்தேசிகாத்மா
க்ஷிப்ரம் ப்ராப்தா வ்ருஷகிரிபதிம் க்ஷத்ரபந்த்வாதயஸ்தே ।
விச்வாசார்யா விதிசிவமுகா: ஸ்வாதிகாரோபருத்தா
மந்யே மாதா ஜட இவ ஸுதே வத்ஸலா மாத்ருசே த்வம் ॥

(பதவுரை) ஹேகருணே-ஓ தயையே, த்வம்-நீ, யேஷு எவர்களிடத்தில், ஸத்தேசிகாத்மா ஸதீ - ஸதாசார்ய ரூபிணியாய்க் கொண்டு, திவ்யாபாங்கம் - ச்லாக்யமான கடாக்ஷத்தை, திசஸி-கொடுக்கிருயோ, தே-அப்படிப்பட்ட, க்ஷத்ரபந்த்வாதய: - க்ஷத்ரபந்து முதலியவர்கள், வ்ருஷகிரி பதிம் - திருவேங்கடமுடையானை, க்ஷிப்ரம் - சீக்கிரத்தில், ப்ராப்தா: - அடைந்தவர்களாகிருர்கள். விச்வாசார்யா: -

ஸர்வலோகங்களுக்கும் ஆசார்யர்களான, விதிசிவமுகா: - பிரம்மா, சிவன் தொடக்கமானவர்கள், ஸ்வாதிகாரோபருத்தா: - தங்கள் அதிகாரங்களாலே தடைபட்டிருக்கிறார்கள். அத: - ஆகையால், மாதா—தாயானவள், ஜடே—மூடனை, ஸுதே இவ—பிள்ளையினிடத்தில்போல, த்வம்—நீ, மாத்ருசே—என் போலியான சேதனர் விஷயத்தில், வத்ஸலா வாத்ஸல்யமுடையவள் ஆகிறாய் என்று, மந்யே—நிச்சயிக்கிறேன்.

"கருணையே! யார் விஷயத்தில் ஸதாசார்யரூபத்தைக் கொண்டு நீ உன்னுடைய திவ்யமான கடைக்கண் பார்வையை வைக்கிறாயோ, அவர்கள் பாபிஷ்டனான க்ஷத்ரபந்துவைப் போன்றவராயிருந்தாலும் சீக்கிரத்தில் ஸ்ரீநிவாஸனை அடைவார்கள். ஜகதாசார்யர்களான ப்ரஹ்மேசாதிகள் தங்களுடைய அதிகாரங்களால் மோக்ஷத்தில் விளம்பத்தை அடைந்து அவர்களுக்கு மோக்ஷம் தாமஸிக்கிறது. இதனால் ஸாமர்த்தியமில்லாத அசட்டுப் பிள்ளைகளிடத்தில் தாய்க்கு அதிக வாத்ஸல்யம் இருப்பதுபோல் என்போன்றவர் விஷயத்தில் தாயான உனக்கு அதிக வாத்ஸல்யமிருப்பதாக நான் நினைக்கிறேன்."

(தாத்பர்யம்) தயைக்குத் தோழியான ஸ்ரீநிவாஸ த்ருஷ்டியை முன் ச்லோகத்தில் வர்ணித்தார். இங்கே தயையின் திவ்யமான த்ருஷ்டியை வர்ணிக்கிறார். ஆசார்யர்கள் தயையின் மூர்த்திகளாவார். அவர்கள் கடாக்ஷங்கள் தயையின் கடாக்ஷங்கள். இந்த தசகம் இங்கே முடிகிறது. அடுத்த தசகத்தில் சரணாகதியைச் செய்யப்போகிறார். பாபிஷ்டனான க்ஷத்ரபந்துவுக்கும் ஆசார்யனை ஆச்ரயித்ததால் மோக்ஷம் கிடைத்ததாகையால் ஆசார்யவானாக இருக்கவேண்டும் என்று சாஸ்த்ர வசனம். ஆசார்யனுடைய க்ருபையால் பாபிஷ்டர்களான க்ஷத்ரபந்து போன்றவர்களும் ஸ்ரீநிவாஸன் திருவடியை அடைந்து முக்தரானார்கள். ஜகத்துக்கெல்லாம் ஆசார்யர்களான ப்ரஹ்மேசாதிகள் முக்திக்கு யோக்யராய்

இருந்தாலும், தங்கள் தங்கள் அதிகாரங்களைச் செலுத்தி, அந்த அதிகாரம் முடிந்த பின்புதான் முக்தி அடைவர். அவர்களுக்கு மோக்ஷம் கிடைக்கத் தாமதிக்கிறது என் போன்ற பாபிகளுக்கு ஆசார்ய கடாக்ஷப்ரபாவத்தால் சீக்கிரத்தில் மோக்ஷம் கிடைத்துவிடுகிறது. இது எப்படி நியாயமாகும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு அழகாக ஒரு லோகத்ருஷ்டாந்தத்தைக் கொண்டு ஸமாதானம் கூறுகிறார். யோக்யதையும், ஸாமர்த்யமும், எந்தக் குழந்தைக்குக் குறைவாயிருக்குமோ அந்தக் குழந்தையினிடத்தில் யோக்யரும் ஸமர்த்தருமான மற்றக் குழந்தைகளைவிட தாயாருக்கு அதிக வாத்ஸல்யம் இருப்பது ஸஹஜம். அதைப்போல எல்லோருக்கும் தாயான தயா தேவி அசட்டுப் பிள்ளையாகிய என்னிடத்தில் அதிகமான வாத்ஸல்யத்தை வஹிக்கிறாள். (50)

अतिकृपणोऽपि जन्तुरधिगम्य दये भवती-
मशिथिलधर्मसेतुपदवीं रुचिरामचिरात् ।
अमितमहोर्मिजालमतिलङ्घ्य भवांबुनिधिं
भवति वृषाचलेशपदपत्तननित्यधनी ॥ ५१ ॥

அதிக்ருபணோऽபி ஜந்துரதிகம்ய தயே பவதீ
மசிதிலதர்மஸேது பதவீம் ருசிராமசிராத் ।
அமிதமஹோர்மிஜாலமதிலங்க்ய பவாம்புநிதிம்
பவதி வ்ருஷாசலேசபதபத்தந நித்யதநீ ॥

(பதவுரை) தயே—தயாதேவியே அதிக்ருபணோபி ஜந்து:- மிகவும் அகிஞ்சனனான ஜந்துவாயிருப்பவனும், ருசிராம்— அழகியதான (அநாயாஸமான), அசிதிலதர்மஸேது பதவீம்- உடையாத (கெட்டியான நழுவாத) சரணாகதி என்னும் (ஸம்ஸார ஸமுத்ரம் தாண்டும்) பாலமாகிய மார்க்கமான, பவதீம்-உம்மை, அதிகம்ய-அடைந்து (நிச்சயித்து) அசிராத்-தாமதமன்னியில், (உடனே) அமிதமஹோர்மிஜாலம்- அளவிடக்கூடாத பெரும் அலைகள் கூட்டமாய் அலைக்கும்,

பவாம்புநிதிம்-ஸம்ஸார ஸமுத்ரத்தை, அதிலங்க்ய-தாண்டி, வ்ருஷாசலேசபதபத்தன நித்யதநீ-வேங்கடமலை அரசன் திருவடியாகிய பத்தனமென்னும் நித்யமான செல்வத்தை உடையவனாக, பவதி-ஆகிறான்.

"தயையே! மிகவும் அகிஞ்சனனான ஜந்துகூட த்ருடமான தர்மஸேதுவான பகவானை அடைவதற்கு, அழகான மார்க்கமாகிய உன்னை அடைந்து அதிவேகமாய்ப் பசி தாகம் ஆசை முதலிய அபரிமிதமான அலைகளின் கூட்டங்களால் மிகவும் கோரமான ஸம்ஸார ஸமுத்ரத்தைக் கடந்து வ்ருஷாசலபதியின் திருவடி என்கிற பத்தனத்தில் நித்ய தனவானாகிறான். (பதபத்கநத்தைத் தனக்கு நித்ய தனமாக உடையவனாகிறான்)".

(தாத்பர்யம்) இந்த ஆறுவது தசகத்தில் திருவேங்கடமுடையானின் தயையினிடத்தில் சரணாகதி செய்கிறார். ஆழ்வாரும் திருவாய்மொழியில் ஆரம்பத்தில் 'அகலகில்லேனிறையும்' என்கிற பாசுரத்தில் 'உன்னடிக்கீழமர்ந்தேனே' என்று திருவேங்கடமுடையானின் திருவடிகளில் சரணம் புகுந்தார். இந்த தசகத்தில் முதல் ச்லோகத்தில் தயையைச் சரணம் பற்றும் மார்க்கத்தைக்காட்டிவிட்டு ஒன்பதாவது சுலோகத்தில் இந்த மார்க்கத்தைக்காட்டிய பரமாசாரியர்களாகிய யதிபதி, யாமுனர் முதலியவர்களை ஸ்துதித்து அதனடுத்த ச்லோகமாகிய பத்தாவது சுலோகத்தில் தயையினிடத்தில் சரணம் புகுகிறார். மத்தியிலுள்ள மற்ற ச்லோகங்களில் கங்கை முதலிய நதிகளைப்போல பாபத்தை போக்குவது முதலிய தயா ப்ரவாஹங்களைக் கூறுகிறார். இதற்கு முன் ச்லோகத்தில் பாபிஷ்டன் என்று வர்ணிக்கப் படும் க்ஷத்ரபந்து முதலியவர்களுக்கும் ஆசார்யனை ஆச்ரயித்த ப்ரபாவத்தால் மோக்ஷம் கிடைத்ததைக் காட்டினார். சரணாகதிக்கு வேறு கதி இல்லாமை என்கிற ஆகிஞ்சந்யம் இன்றியமையாதது. அதைக் கார்ப்பண்யம் என்றும் சொல்லுவர். அத்யந்தம் க்ருபணனாயிருப்பவன் கூட மோக்ஷத்

திற்கு மிகவும் ஸமீபமான மார்க்கமாகிய தயையை ஆச்ர யித்தால் அதிசீக்கிரத்தில் அவன் ஸம்ஸார ஸமுத்ரத்தைத் தாண்டி பகவானுடைய திருவடி என்கிற நித்யதனத்தை அடைந்து நீங்காச்செல்வம் பெறுவான். ச்லோகத்தின் ஆரம்பத்திலேயே 'அதிக்ருபணன்கூட' என்று கூறுவதால் சரணாகதிக்கு முக்யமாக வேண்டிய ஆகிஞ்சன்யத்தையும், அநந்யகதித்வத்தையும் சாட்டுகிறார். பேதையிலும் பேதை யாயிருப்பவன்கூட எல்லோருக்கும் மேல்பட்ட தனவா னுவான் என்கிறார். 'ஜந்து' என்று சொல்வதால் இந்த உபாயத்தில் எல்லோருக்கும் அதிகாரம் உண்டென்று காட்டுகிறார். 'ஸேது' என்பது பாலத்தைச்சொல்லும். ஸம்ஸாரமென்னும் பயங்கரமான ஸமுத்ரத்தைத் தாண்டு வதற்குத் தயை ஓர் அழகிய பாலமாவாள். தயை மோக்ஷத் திற்கு மிகவும் நெருங்கிய வழியுமாவாள். இந்த தசகம் பாகவதத்தில் ச்ருதி கீதை பாடப்பட்ட சந்தத்தில் ஏற் பட்டது. இந்த வ்ருத்தம் மிகவும் உருக்கத்தையுடையது. சரணாகதி செய்பவனுடைய பேதைமையைக்காட்ட இது மிகவும் அநுரூபமானது. (51)

अभिमुखभावसंपदभिसंभविनां भविनां
क्वचिदुपलक्षिता क्वचिदभङ्गुरगूढगतिः ।
विमलरसावहा वृषगिरीशदये भवती
सपदि सरस्वतीव शमयत्यघमप्रतिघम् ॥ ५२ ॥

அபிமுகபாவஸம்பதபிஸம்பவிநாம் பவிநாம்
க்வசிதுபலக்ஷிதா க்வசிதபங்குரகூடகதி: ।
விமலரஸாவஹா வ்ருஷகிரீசதயே பவதீ
ஸபதி ஸரஸ்வதீவ சமயத்யகமப்ரதிகம் ॥

(பதவுரை) வ்ருஷகிரீசதயே — வேங்கடமலையரசன் தயையே! பவதீ-நீர், க்வசிதுபலக்ஷிதா—சில இடங்களில் (சில சமயங்களில்) கண்ணுக்குத்தோன்றுகிறவளாயும், க்வசிதபங்குரகூடகதி:-சிலவிடங்களில் (சில சமயங்களில்)

மறைந்ததும் தடைபட்டதுமான ஓட்டத்தை உடை வளாயும், விமலரஸாவஹா - கலக்கமில்லாத, தெளிவான ரஸத்தை, (ஜலத்தை)ப் பெருக்கிக்கொண்டு வருகிறவளு மான, ஸாரஸ்வதீவ – ஸரஸ்வதியென்னும் . அந்தர்வாஹி நதியைப்போல, அபிமுகபாவஸம்பதபிஸம்பவினும் – உன் விஷயத்தில், ஆனுகூல்யத்தை வஹிக்கிறதென்கிற ஸம்பத் தென்னும் பாக்யத்தைக் கைப்பற்றும், பவிநாம் – ஸம்ஸாரி களுடைய, அப்ரதிகம் – தீர்ப்பதற்கரிய கோபலேசமும் மீருமல், (நிச்சேஷமாக) அகம் – பாபத்தை, ஸபதி- உடனே, சமயதி – போக்குகிறீர்.

" வ்ருஷகிரீச்வரனுடைய தயையே! ஸரஸ்வதீ நதியைப்போல சிலவிடங்களில் வெளிப்படையாய்த் தெரிந்தும், சிலவிடங்களில் மறைந்து சென்றும் நிர்மலமான ஜலத்தையும், ஸ்நேஹத்தையும் ப்ரவஹித்துக்கொண்டு கிட்டே நெருங்கும் பாக்யத்தைப் பெறுகிற ஸம்ஸாரிகளின் தீராத வினைகளையெல்லாம் அதிவேகமாய் தீர்த்து விடுகிறாய். "

(தாத்பரியம்) தாய்போன்ற தயைக்கு நாம் அபிமுகமாக நோக்கி நெருங்கினுல் அதினுலேயே தயைக்கு ஸந்தோஷம் பிறந்து நாம் ஆசைப்படும் மோக்ஷம் கைகூடும். ' அபிஸம் பவம்' என்பது மோக்ஷத்தைச் சொல்லும். நமக்குக் கஷ்டங்கள் ஏற்படுவது நம்மைத் திருத்தி நல்வழிக்குக் கொண்டுவருவதற்காக ஈச்வரன் கருணையால் செய்விப்பதே யொழிய வேறல்ல. நம்முடைய ஹிதத்துக்காகத்தான் கஷ்டங்கள் நமக்கு வருவது. இந்த ஹிதத்தை தயாதேவி மறைவாக நமக்குச் செய்கிருள். நமக்கு ப்ரியமான சுகங்களை மட்டும் அவள் பஹிரங்கமாக நமக்கே தெரியும்படி செய் கிருள். கஷ்டம் வரும்பொழுது நம்முடைய ஹிதத்துக்காக ஈச்வரன் தயவினுல் அதைச் செய்கிருரென்று நாம் தெரிந்து கொள்ளுகிறதில்லை. ஆயினும் வாஸ்தவத்தில் அந்தக் கஷ்டமும் தயவினுல்தான் செய்விக்கப்படுகிறது. கஷ்டம்,

சுகம் இரண்டும் தயா கார்யம். ஸரஸ்வதி நதி சில இடங்களில் பூமி மட்டத்தில் வெளிப்படையாக ஓடும். வேறு சில இடங்களில் பூமிக்குள்ளே மறைவாக அந்தர்வாஹினியாகப் போகும். அந்த இடங்களிலும் அந்த நதியின் ஓட்டத்திற்குக் குறைவில்லை. நமக்குக் கஷ்டங்கள் ஏற்படுவதிலும் தயையின் பிரவாஹத்தின் ஓட்டத்திற்குக் குறைவில்லை. ஆனால், அதுவும் தயையென்று நமக்கு வெளிப்படையாய் தெரியாமல் மறைவாக ஓடும். ஸரஸ்வதியின் நிர்மலமான ஜலங்கள் தீராத வினைகளையெல்லாம் தீர்ப்பதுபோல் தயையின் சுத்தமான ப்ரவாஹங்கள் வேறு ஒரு வழியாலும் தீர்க்க முடியாத பாபங்களை ஒரு நொடிப்பொழுதில் போக்கிவிடும்.

अपि करुणे जनस्य तरुणेन्दुविभूषणता-
मपि कमलासनत्वमपि धाम वृषाद्रिपतेः ।
तरतमतावशेन तनुते ननु ते विततिः
परहितवर्ष्मणा परिपचेलिमकेलिमती ॥ ५३ ॥

**அபி கருணே ஜனஸ்ய தருணேந்துவிபூஷணதா-**
**மபி கமலாஸநத்வமபி தாம வ்ருஷாத்ரிபதே: 1**
**தரதமதாவசேந தநுதே நநு தே விததி:**
**பரஹிதவர்ஷ்மணா பரிபசேளிமகேளிமதீ ll**

(பதவுரை) கருணே—தயையே, பரஹிதவர்ஷ்மணா — பிறர் ஹிதத்தை நினைக்கும் ரூபத்தாலேயே, பரிபசேளிமகேளிமதீ—பரிபாகமடைந்த விளையாட்டையுடைய, தே விததி:—உன் அலைமோதும் ப்ரவாஹம், ஜனஸ்ய—ஜனங்களுக்கு, தருணேந்துவிபூஷணதாம் அபி—இளம் சந்த்ரனை முடி சூடிய சிவன் பதத்தையும், கமலாஸனத்வம் அபி—ப்ரஹ்ம பதத்தையும், வருஷாத்ரிபதே:—வேங்கட மலை அரசனுடைய, தாம அபி-வாஸஸ்தலத்தையும், தரதமதாவசேன—தாரதம்ய வசத்தால், தநுதே நநு — அளிக்கவில்லையா (அளிக்கும் என்பது திண்ணம்).

“ஏ கருணையே? பிறருக்கு ஹிதத்தைச் செய்கி தென்கிற உருவத்தை எடுத்துக்கொண்டு விளையாடு உன்னுடைய பரப்பானது உன்னை ஆச்ரயித்தவர்களுடை தாரதம்யத்துக்குத் தக்கபடி இளம் சந்திரனை முடியிலணிந் ஈச்வரன் பதத்தையும் கமலாஸநனை ப்ரஹ்மாவின் பதத் தையும் வ்ருஷாசலபதியின் பதமாகிய பரமபதத்தையும் கொடுக்கிறதல்லவா?”

(தாத்பரியம்) பிறர்களுக்கு ஹிதத்தைச் செய்வ தென்பதே தயையின் ஸ்வரூபமாகும். அதுதான் தயா தேவிக்கு லீலையாகும். ‘ஜநம்’ என்கிற பதம் ஸாமாந்ய மான எல்லா ஜனங்களையும் சொல்லும். இந்தப் பதத்தாலும் ப்ரபத்தி என்பது ஸர்வாதிகாரமென்பதை ஸூசிக்கிறுர். (53)

धृतभुवना दये त्रिविधगत्यनुकूलतरा
वृषगिरिनाथपादपरिरंभवती भवती ।
अविदितवैभवापि सुरसिन्धुरिवातनुते
सकृदवगाहमानमपतापमपापमपि ॥ ५४ ॥

த்ருதபுவநா தயே த்ரிவிதகத்யநுகூலதரா
வ்ருஷகிரிநாத பாத பரிரம்பவதீ பவதீ ।
அவிதிதவைபவாபி ஸுரஸிந்துரிவாதநுதே
ஸக்ருதவகாஹமாந மபதாப மபாபமபி ॥

(பதவுரை) தயே-தயையே, பவதீ-நீர், ஸுரஸிந்துரிவ தேவநதியாகிய கங்கையைப்போல- த்ருதபுவநா-உலகத் தைத் தாங்குகிறவளாயும், த்ரிவிதகத்யநுகூலதரா-மூன்று விதமான மார்க்கங்களுக்கும் மிக்க அனுகூலமாயும், வ்ருஷ கிரிநாதபாதபரிரம்பவதீ - வேங்கடமலைநாதன் திருவடியின் அணைதலையுடையவளாயும், அவிதிதவைபவா அபி-அறியப் படாத மஹிமையையுடையவளாயிருந்தும், ஸக்ருதவகாஹ மானம் (அபி)-ஒருதரம் ஸ்நானம் செய்பவனைக்கூட (ஆச்ர யிக்கிறவனைக்கூட) அபதாபம்-தாபம் நீங்கினவனையும், அபாபம் அபி-பாபம் நீங்கினவனையும், ஆதநுதே-செய்கிறீர்.

"தயையே! உலகத்தையெல்லாம் போஷிப்பவளாயும், மூன்றுவிதமான கதிகளுக்கும் மிகவும் அநுகூலமாயும், திருவேங்கடமுடையானுடைய திருவடியை அணைந்தவளாயும் உள்ள நீ உன்னுடைய ப்ரபாவத்தைத் தெரிந்துகொள்ளாதவர்களுக்கும் ஒருகால் உன்னிடம் இறங்கி ஸ்நாநம் செய்தவரையும், தேவநதியாகிய கங்கையைப்போல் தாபம் நீங்கினவராயும் பாபம் நீங்கினவராயும் செய்கிறாய்"

(தாத்பர்யம்) இந்த ச்லோகத்தில் பல விசேஷணங்களால் தயைக்கும் கங்கைக்கும் ஒற்றுமையைக்காட்டுகிறார். கங்கை உலகத்தைப் போஷித்துத் தாங்குவதுபோல் தயையும் போஷணம் செய்து தாங்குகிறாள். கங்கைக்கு மூன்று கதிகள் உண்டு. கங்கைக்கு 'த்ரிபதகா' 'த்ரிமார்ககா' என்று பெயர். தயை ஐச்வர்யம், கைவல்யம், மோக்ஷம் என்கிற மூன்றுவிதமான புருஷார்த்தங்களுக்கும் காரணமாகிறாள். கங்கை பகவானுடைய திருவடியை அணைந்ததுபோல் தயையும் அவன் திருவடியை அணைந்தவள். கங்கையின் வைபவத்தைத் தெரிந்துகொள்ளாமலிருந்தாலும் ஒருதரம் கங்கையில் ஸ்நானம் செய்தால் அதனாலேயே தாபமும், பாபமும் தொலையும். தயையில் ஸ்நானம் செய்வதாவது தயையினிடத்தில் பரத்தை ஸமர்ப்பணம் செய்தல்.

निगमसमाश्रिता निखिललोकसमृद्धिकरी
भजदघकूलमुद्रुजगतिः परितप्तहिता ।
प्रकटितहंसमत्स्यकमठाद्यवतारशता
विबुधसरिच्छ्रियं वृषगिरीशदये वहसि ॥ ५५ ॥

நிகமஸமாச்ரிதா நிகிலலோக ஸம்ருத்திகரீ
பஜதககூலமுத்ருஜ கதி: பரிதப்தஹிதா ।
ப்ரகடித ஹம்ஸமத்ஸ்ய கமடாத்யவதாரசதா
விபுதஸரித் ச்ரியம் வ்ருஷகிரீசதயே வஹஸி ॥

(பதவுரை) வ்ருஷகிரீசதயே—வேங்கடமலை அரசனின் தயையே. நிகமஸமாச்ரிதா-வேதத்தை ஆச்ரயித்தவளா

யும், (வேத ப்ரதிபாத்யமாயும்) நிகில லோக ஸம்ருத்திகரீ. எல்லா லோகத்திற்கும் (ஜனத்திற்கும்) ஸம்ருத்தியைச் செய்பவளாயும், பஜதகஷ்டமுத்ருஜகதி:—பஜனம் செய்கிற வர்களுடைய பாபங்களை கரைபுரண்ட வெள்ளங்களால் போக்கடிக்கிறவளாயும், பரிதப்தஹிதா—மிகவும் தபிக்கப் பட்டவர்களுக்கு ஹிதமாயும், ப்ரகடிதஹம்ஸமத்ஸ்ய கமடாத்யவதாரசதா—ஹம்ஸம் மீன் முதலிய நூற்றுக்கணக் கான அவதாரங்கள் மிதப்பதாயும் (உள்ள நீ) விபுதஸரிச் ச்ரியம்—கங்கையின் சீரை, வஹஸி—வஹிக்கிறாய்.

"வ்ருஷாசலபதியின் தயையே! வேதங்களால் ஸமாச்ரயிக்கப்பட்டவளாயும், ஸர்வ லோகங்களுக்கும் ஸம்ருத்தியை உண்டுபண்ணுகிறவளாயும், ஆச்ரிதர்களுடைய பாபமென்னும் கரையைத் தன்னுடைய வெள்ளத்தால் உடைப்பவளாயும், மிகவும் தாபத்தால் வருந்துகின்றவர்களுக்கு ஹிதத்தைச் செய்கிறவளாயும், ஹம்ஸம், மத்ஸ்யம், கூர்மம் முதலிய அநேக அவதாரங்களை வெளியில் காட்டுபவளாயும் இருப்பதால் நீ தேவநதியின் சிறப்பை வஹிக்கிறாய்."

(தாத்பர்யம்) தயைக்குச்சொன்ன விசேஷணங்களெல்லாம் கங்காநதிக்கும் ஒட்டும். வேதங்கள் கங்கையைத் துதிப்பதுபோல தயையையும் துதிக்கின்றன. இரண்டும் வேதங்களால் ஆச்ரயிக்கப்பட்டன. இரண்டும சகல லோகத்திற்கும் ஸம்ருத்தியைச் செய்யும். ஆச்ரிதர்களுடைய பாபத்தைத் தன் கரைபுரண்ட ப்ரவாஹங்களால் போக்கடிக்கும்; தாபத்ரயங்களால் தஹிக்கப்படுபவர்களைக் காப்பாற்றும். கங்காநதியில் ஹம்ஸம், மத்ஸ்யம், யானை முதலியவை மிதப்பதுபோல் தயாவெள்ளத்தில் ஹம்ஸம், மதஸ்யம், கூர்மம் முதலிய அவதாரங்கள் மிதப்பர். கங்கைக்கும் தயைக்கும் உள்ள ஸாம்யத்தை இரண்டு ச்லோகங்களால் கூறுகிறார்.

जगति मितंपचा त्वदितरा तु दये तरला
फलनियमोज्झिता भवति संतपनाय पुनः ।

त्वमिह निरङ्कुशप्रशकनादिविभूतिमती
वितरसि देहिनां निरवधिं वृषशैलनिधिम् ॥ ५६ ॥

**ஜகதி மிதம்பசா த்வதிதரா து தயே தரளா**
**பலநியமோஜ்ஜிதா பவதி ஸந்தபநாய புந: ।**
**த்வமிஹ நிரங்குசப்ரசகநாதி விபூதிமதீ**
**விதரஸி தேஹிநாம் நிரவதிம் வ்ருஷசைலநிதிம் ॥**

(பதவுரை) தயே–ஸ்ரீநிவாஸனுடைய தயையே, ஜகதி உலகத்தில், த்வதிதரா து–உன்னைத்தவிர (மற்றவர் தயை) மிதம்பசா–அல்பமேயுடையதாய் (அல்பமே கொடுப்பதாய்) தரளா–சஞ்சலமாயும், பலநியமோஜ்ஜிதா–பலன் கொடுப்பது உறுதியில்லாமலும், புந: ஸந்தபநாய– மறுபடியும் ஸந்தாபத்தைக் கொடுக்கத்தக்கதாக பவதி – ஆகிறது. த்வம்–நீ, இஹ–இங்கே (இது விஷயத்தில்), நிரங்குசப்ரசகநாதிவிபூதிமதீ – தட்டுத் தடங்கலில்லாத சக்தி முதலிய பெருமையை யுடையவளாய், தேஹிநாம் – ப்ராணிகளுக்கு, நிரவதிம் – எல்லையற்றதான, வ்ருஷசைலநிதிம்–வேங்கட மலை நிதியை, விதரஸி–கொடுக்கிறாய்.

“ஸ்ரீநிவாஸனுடைய தயையே! உலகத்தில் உன்னைத் தவிர மற்றவர்களுடைய தயை அல்ப பலத்தைக் கொடுக்கக்கூடியதாயும், சஞ்சலமாயும், பலம் கொடுப்பது நிச்சயமில்லாததாயும், பின்னும் ஸந்தாபத்தைக் கொடுக்கக் கூடியதாயும் இருக்கும். நீ தடுக்கக்கூடாத சக்தி முதலிய ப்ரபாவத்தை உடையவளாய் இந்த லோகத்திலுள்ள தேஹவான்களுக்குத் திருமலையிலுள்ள எல்லையில்லாத நிதியை அளிக்கிறாய்”

(தாத்பர்யம்) சரணாகதிக்கு இன்றியமையாத கார்ப்பண்யத்திற்கு வேறு கதியில்லாமை என்கிற அநந்ய கதித்வம் வேண்டும். ஸ்ரீநிவாஸனுடைய தயையைத்தவிர வேறுகதி தான் பிழைக்கக்கிடையாதென்கிற நிச்சயபுத்தி வேண்டும். அந்த அம்சத்தை இந்த ச்லோகத்தால் விளக்கு

கிருர். மற்றவருடைய தயை அல்ப பலத்தைத்தான் கொடுக்கும் மோக்ஷத்தை அளிக்க வேருெருவருக்கும் ஸாமர்த்தியமில்லை. மற்றவர் தயை ஸ்திரமாயிராது. பலம் கொடுக்கும் நிச்சயமுமிராது. அவை கொடுக்கும் பலம் கழிந்ததும், அந்த அனுபவத்தாலேயே முன்னிருந்ததைவிட அதிக ஸந்தாபம் உண்டாகும் உன்னுடைய சக்தி முதலியதற்கு அளவில்லை. உன்னை ஆச்ரயிப்பவர்க்கு அவர்கள் தேஹத்தோடு இருக்கும்பொழுதே எல்லையில்லாத பேரின்பமாகிய திருமலையிலுள்ள நிதியாகிய ஸ்ரீநிவாஸனுடைய பூர்ணனுபவ சுகத்தை அளிக்கிருர். 'பகவானை நன்ருய் அறிந்து உபாஸிப்பவர் இங்கேயே அம்ருதராவர்; பகவானை அடைவதாகிய அயனத்திற்கு நாராயணனைத்தவிர வேறு மார்க்கம் கிடையாது' என்று சொல்லுகிற ச்ருதியின் அர்த்தத்தை இங்கே விளக்குகிருர்.

सकरुणलौकिकप्रभुपरिग्रहनिग्रहयो-
र्नियतिमुपाधिचक्रपरिवृत्तिपरंपरया ।
वृषभमहीधरेशकरुणे वितरङ्कयतां
श्रुतिमितसंपदि त्वयि कथं भविता विशयः ॥ ५७ ॥

ஸகருண லௌகிக ப்ரபு பரிக்ரஹ நிக்ரஹயோர்
நியதி முபாதிசக்ர பரிவ்ருத்தி பரம்பரயா ।
வ்ருஷபமஹீதரேச கருணே விதரங்கயதாம்
ச்ருதிமித ஸம்பதி த்வயி கதம் பவிதா விசய: ॥

(பதவுரை) வ்ருஷபமஹீதரேச கருணே - வேங்கடத்தரசன் தயையே, ஸகருண லௌகிக ப்ரபு பரிக்ரஹ நிக்ரஹயோ:- தயையையுடைய லௌகிக ப்ரபுக்களின் தயையும் (அன்பும்) கோபமும் ஆகிய இவ்விரண்டின், நியதிம்-பலன் கொடுக்கும் நிச்சயத்தை (உறுதியை), உபாதி சக்ர பரிவ்ருத்தி பரம்பரயா- ஆனுகூல்யம், ப்ராதிகூல்யம் முதலிய உபாதிகள் மாறி மாறிச் சுழன்று வந்து பலன்கள் கொடுக்கும் க்ரமத்திஞல், விதரங்கயதாம் - ஸம்சயமற

ஆராய்ந்து தெளிகிறவர்களுக்கு, ச்ருதிமிதஸம்பதி த்வயி—வேதங்களால் தெளியச் செய்துள்ள பெருமையுள்ள உன் விஷயத்தில், விசய:—ஸம்சயமானது, கதம் பவிதா—எப்படி உண்டாகும்.

"வ்ருஷப பர்வத நாதனுடைய கருணையே? தயையுள்ள லௌகிக ப்ரபுக்கள் அவர்களுக்கு அனுகூலமானவர்களை அனுக்ரஹித்தும் ப்ரதிகூலமானவர்களை நிக்ரஹித்தும், இப்படி அவர்களிடத்தில் ஆநுகூல்ய ப்ராதிகூல்யங்களால் அனுக்ரஹ நிக்ரஹங்கள் மேலும் மேலும், சக்ரம்போல் சுழன்று வருவதைக் கவனித்துப் பார்த்து வேதத்தினால் தெரிவிக்கப்படும் உன்னுடைய வைபவத்தில் ஏன் ஸம்சயம் நீங்கி அசஞ்சலமான மஹாவிச்வாஸம் பிறக்காது?"

(தாத்பர்யம்) யாரைச் சரணமடையவேண்டுமோ அவர்களுக்கு அநுகூலத்தையே செய்யவேண்டுமென்கிற தீர்மானமாகிய ஆநுகூல்ய ஸங்கல்பமும், அவர்களுக்கு ப்ரதிகூலத்தை எப்பொழுதும் விலக்கவேண்டும் என்கிற ப்ராதிகூல்யவர்ஜனமும் அவச்யம் வேண்டும். இது உலகத்திலுள்ள ப்ரபுக்களுடைய தயை விஷயத்தில் நாம் நன்றாய்க்காண்கிறோம். உலகந்யாயப்படிக்கு அத்ருஷ்டமான வேதம் காண்பிக்கும் விஷயத்திலும், நாம் ஊஹித்துக் கொண்டு கருணாநிதியான ஈச்வரனை ஆநுகூல்ய ஸங்கல்பத்தோடும் ப்ராதிகூல்யத்தைத் தவிர்ப்பதென்கிற நிச்சயத்தோடும், நாம் அவனே கதியென்று ஆர்த்தியுடன் சரணம் புகுந்தால் அவன் நிச்சயமாய்க் காப்பாற்றுவான் என்பதை நன்றாய்த் தெரிந்துகொள்வதற்குத் தயவோடு கூடிய லௌகிகப்ரபுக்கள் விஷயத்தில் இந்த விஷயத்தை ப்ரத்யக்ஷமாகக் காண்கிறபடியால், இந்த உலக ந்யாயத்தைக் கொண்டு ஸுலபமாய் நம்முடைய நம்பிக்கையை த்ருடமாகச் செய்துகொள்ளலாம் என்பதைக் காட்டுகிறார். மஹா விச்வாஸம் என்பது அவச்யம் வேண்டும். ஈச்வரன்

ரக்ஷிப்பான் என்பதில் என்றும் தளராத விச்வாஸம் வேண்டும். சரணாகதிக்கு வேண்டிய மூன்று அங்கங்களை இந்த ச்லோகத்தில் விளக்குகிறார். தயாவான்களான லௌகிக ப்ரபுக்களிடம் இந்த விஷயத்தைக் காணலாம் நிஷ்கருணர்களான ப்ரபுக்கள் விஷயத்தில் இந்த அம்சங்கள் இருக்கமாட்டாவாகையால் 'ஸகருண லௌகிகப்ரபு' என்று கூறுகிறார்.

वृषगिरिकृष्णमेघजनितां जनितापहरां
त्वदभिमतिं सुवृष्टिमुपजीव्य निवृत्ततृषः ।
बहुषु जलाशयेषु बहुमानमपोह्य दये
न जहति सत्पथं जगति चातकवत्कृतिनः ।। ५८ ।।

வ்ருஷகிரிக்ருஷ்ணமேகஜநிதாம் ஜநிதாபஹராம்
த்வதபிமதிம் ஸுவ்ருஷ்டிமுபஜீவ்ய நிவ்ருத்தத்ருஷ: ।
பஹுஷு ஜலாசயேஷு பஹுமாநமபோஹ்ய தயே
ந ஜஹதி ஸத்பதம் ஜகதி சாதகவத் க்ருதிந: ।।

(பதவுரை) தயே-தயையே, வ்ருஷகிரி க்ருஷ்ணமேக ஜநிதாம்–வேங்கடமலை (உச்சி)யிலுள்ள கருமேகத்தால் வர்ஷிக்கப்படுவதும், ஜநிதாபஹராம் – பிறவியென்னும் தாபத்தை அபஹரிப்பதுமான, த்வதபிமதிம்–உன்னுடைய அபிமானம் என்கிற ஸுவ்ருஷ்டிம் – குளிர்ந்த (கருணை) மழையை, உபஜீவ்ய-ஆச்ரயித்து, நிவ்ருத்தத்ருஷ: க்ருதிந:– தாகம் தீர்ந்த கொடுத்துவைத்த பாக்யவான்கள், சாதகவத்- சாதகபக்ஷி போல, ஜகதி – உலகத்தில், பஹுஷு ஜலாசயேஷு – அனேக தடாகங்களில், பஹுமானம் – கௌரவத்தை, அபோஹ்ய-நீக்கிவிட்டு, ஸத்பதம் - நன்மார்க்கமாகிய உன்னை (ஆகாசத்தை), ந ஜஹதி-விடமாட்டார்கள்.

"தயையே! பாக்யவான்கள் வ்ருஷகிரியிலிருக்கும் க்ருஷ்ண மேகமாகிய ஸ்ரீநிவாஸனால் உண்டு பண்ணப் படும் ஜந்மதாபஹரமான உன்னுடைய அபிமதி என்கிற சிறந்த மழையைச் சாதக பக்ஷியைப்போல உபஜீவித்துத்

தங்கள் தாஹத்தைத் தீர்த்துக்கொண்டு வேறுள்ள அநேக ஜலாசயங்களில் பற்றுதியை விட்டு நல்ல மார்க்கத்தை விடாமலிருக்கிறார்கள்."

(தாத்பர்யம்) அநந்யகதித்வம் என்னும் குணத்தை சாதகபக்ஷியின் த்ருஷ்டாந்தத்தைக்கொண்டு காட்டுகிறார். சாதகபக்ஷியை க்ருஷ்ணமேகைகாந்தி என்பர். நீருண்ட கார்மேகமாகிய க்ருஷ்ண மேகத்திலிருந்து நேரில் தன் வாயில் விழும் ஜலத்திவலைகளால் சாதகபக்ஷி தன் தாகத்தைத் தீர்த்துக்கொள்ளுமேயல்லாது கீழே விழுந்த மழை ஜலம் நிரம்பிய குளங்களிலாவது, ஆறுகளிலாவது தண்ணீரை அருந்தாது. ஆகாசத்தை விஷ்ணுபதம் என்பர். விஷ்ணுபதத்திலிருக்கின்ற கிருஷ்ண மேகத்தினிடமிருந்து வரும் வ்ருஷ்டி ஜலத்தையே எதிர்பார்த்து அதுவே கதியென்று இருப்பது சாதகபக்ஷியின் ஸ்வபாவம். இப்படியே காருண்யைகாந்திகளும் ஸ்ரீநிவாஸனென்னும் திருமலையிலுள்ள க்ருஷ்ணமேகத்தின் தயாவ்ருஷ்டியே கதியென்றும், ஸம்ஸாரத்திலுள்ள சகலவிதமான தாபங்களையும் அதைக்கொண்டே போக்கிக்கொள்ள வேண்டுமென்றும், த்ருடமான நிச்சயத்துடன் இருக்கவேணும். 'ஜலாசயம்' என்கிற பதம் வடமொழியில் 'ஜடாசயம்' என்றுமாகும். ஜடாசயரென்றால் ஜடமதிகளென்று பொருள். சரணாகதிசெய்பவர் சாதக பக்ஷியைப்போல் இருக்கவேண்டுமென்றும், சரணமடையப்படுகிறவர் கபோதபக்ஷியைப் போல் இருக்கவேண்டுமென்றும் ப்ரமாண வசநம். கபோத பக்ஷியின் த்ருஷ்டாந்தத்தை விபீஷணனுக்குச் சரண மளிக்கும் அவஸரத்தில் ஸுக்ரீவனுக்கு பகவான் எடுத்துக் காட்டினார். (௫௮)

त्वदुदयतूलिकाभिरमुना वृषशैलजुषा
स्थिरचरशिल्पिनैव परिकल्पितचित्रधियः ।
यतिपतियामुनप्रभृतयः प्रथयन्ति दये
जगति हितं न नस्त्वयि भरन्यसनादधिकम् ॥ ५९ ॥

**த்வதுதயதூலிகாபிரமுநா வ்ருஷசைலஜுஷா**
**ஸ்திரசரசில்பிநைவ பரிகல்பிதசித்ரதிய: ।**
**யதிபதியாமுநப்ரப்ருதய: ப்ரதயந்தி தயே**
**ஜகதி ஹிதம் ந நஸ்த்வயி பரந்யஸநாததிகம் ॥**

(பதவுரை) தயே—தயையே ! ஸ்திரசர சில்பிநா - அவ்யாக்ருதங்களான ஸ்திரப்பொருள்களையும், அழிவதான வ்யாக்ருதப் பொருள்களையும் படைக்கும் சில்பியான, அமுநா. இந்த, வ்ருஷசைலஜுஷா ஏவ- திருவேங்கடத்தானாலேயே, த்வதுதய தூலிகாபி:- உன்னுடைய உதயமென்ற ப்ராரப்யங்களென்னும் பூச்சுக் குச்சிகளால், பரிகல்பிதசித்ரதிய:- அமைக்கப்பட்ட ஆச்சர்யமான புத்தி சித்ரங்களையுடைய யதிபதியாமுநப்ரப்ருதய:-எம்பெருமானார், ஆளவந்தார் முதலிய ஸித்தாந்த ஸ்தாபனாசார்யர்கள், த்வயி—உன்னிடத்தில், பரந்யாஸாத்—ஆத்மாவின் பரத்தை ஒப்புவிப்பதைக் காட்டிலும், அதிகம்-பெரிதான, ஹிதம்—க்ஷேமம் ஜகதி-உலகத்தில், ந:—எங்களுக்கு, ந-இல்லை என்று, ப்ரதயந்தி-பிரகாசப்படுத்துகிறார்கள்.

" தயையே ! சராசரங்களையெல்லாம் ஸ்ருஷ்டித்த சில்பியாகிய வேங்கடகிரிவாஸியாகிய ஸ்ரீநிவாஸனாலேயே உன்னுடைய உதயங்களென்கிற சித்திரமெழுதும் சலாகைகளாலே நன்றாய்க் கற்பிக்கப்பட்ட புத்திசித்திரங்களை உடையவரான உடையவர், ஆளவந்தார் முதலியவர்கள் " உன்னிடத்தில் பரந்யாஸம் செய்வதைக்காட்டில் மேலான ஹிதமில்லை " என்னும் விஷயத்தை ப்ரசாரம் செய்கிறார்கள்."

(தாத்பர்யம்) அடுத்த ச்லோகத்தில் சரணாகதியை அனுஷ்டிக்கப்போகிறார். அதற்கு முன்பு இந்த சரணாகதி உபாயத்தை வெளிப்படுத்திய முக்யமான ஸம்யாசார்யர்களான ஸ்ரீ பாஷ்யகாரரையும், ஆளவந்தாரையும், இந்த ச்லோகத்தில் ஸ்மரிக்கிறார். அவர்கள் காட்டியிருக்கும் மோக்ஷோபாயம் மிகவும் லகுவானது. அது எல்லோராலும் அனுஷ்டிக்கத்தக்கது. இந்த உபாயத்தை வெளிப்படுத்திய

ஆசார்யர்களுடைய புத்திகள் திருவேங்கடமுடையானே தன் கையினால் தயோதயமயமான சலாகைகளால் எழுதப் பட்ட சித்திரங்கள் என்று வர்ணிக்கப்படுகிறது. எல்லை யில்லாத கருணையினால் அவ்வாசிரியர்கள் மிகவும் லகுவான இந்த உபாயத்தை உபதேசித்தார்கள். அவர்கள் புத்தி, உதயமாகும் தயையினாலேயே எழுதப்பட்ட சித்திரமாகும். உதிக்கும் தயவை என்பதால் தயவு முதலில் உண்டாகையில் நிரம்பவும் பலமாயிருக்குமாதலாலும், சிலகாலம் கழிந்து விட்டால் தயை குறையக்கூடுமாதலாலும் ஆசாரியர் களுடைய புத்தி உதய தசையில் உள்ள தயையைக் கொண்டே எழுதப்பட்டதென்கிறார். ஆசார்யர்களுடைய திருமேனியை ப்ரஹ்மதேவன ஸ்ருஷ்டித்தாலும், அவர் களுடைய பரமமங்களமும, கருணாமயமுமான புத்திகளை மட்டும் ஸ்ரீனிவாஸனே நேரில் தயாமயமான சலாகைகளைக் கொண்டு சித்ரம்போல் எழுதினானென்று வர்ணிக்கிறார். (59)

मृदुहृदये दये मृदितकामहिते महिते
धृतविबुधे बुधेषु विततात्मधुरे मधुरे ।
वृषगिरिसार्वभौमदयिते मयि ते महतीं
भवुकनिधे निधेहि भवमूलहरां लहरीम् ॥ ६० ॥

ம்ருது ஹ்ருதயே தயே ம்ருதித காமஹிதே மஹிதே
த்ருத விபுதே புதேஷு விததாத்மதுரே மதுரே ।
வ்ருஷகிரி ஸார்வபௌமதயிதே மயி தே மஹதீம்
பவுகநிதே நிதேஹி பவமூலஹராம் லஹரீம் ॥

(பதவுரை) ம்ருதுஹ்ருதயே - மிருதுவான நெஞ்சை யுடையவளும, ம்ருதித காமஹிதே-ஆசைகளை ஒடுக்கினவர் விஷயத்தில் விசேஷமான ஹிதபுத்தியை யுடையவளும, மஹிதே-(மற்ற மார்க்கங்களைக காட்டிலும் சிறந்த வழி யென்று) கொண்டாடப்பட்டவளும், த்ருதவிபுதே-(நீயே சரணமென்கிற) உத்தமஞானிகளைத் தாங்குகின்றவளும, புதேஷு விததாத்மதுரே-ஞானிகளான ஆசார்யர்களிடம

சேதனர்களை ரக்ஷிக்கும் உன் பாரத்தை விஸ்தாரமாய் ஒப்புவித்திருக்கிறவளும், மதுரே - இனிமையானவளும், வ்ருஷகிரிஸார்வபௌமதயிதே-வேங்கடமலை அரசனுடைய ப்ரிய காந்தையும், டவுகநிதே - மங்களங்களுக்கு நிதியுமான தயே - தயையே, பவமூலஹரா:-(விஷவிருக்ஷமென்றும், அச்வத்த விருக்ஷமென்றும் சொல்லப்படும்) ஸம்ஸார விருக்ஷத்தின் வேரை அறுத்துத்தள்ளும், தே-உன்னுடைய, மஹதீ-பெரிதான, லஹரீம்-வெள்ளத்தை, மயி-என்னிடத்தில், நிதேஹி-வைப்பாயாக (பெருக்குவாயாக).

"ம்ருதுவான ஹ்ருதயத்தையுடையவளும், ஆசையை அடக்கியவர்களுக்கு ஹிதமானவளும், பூஜிக்கப்பட்டவளும், ஜ்ஞானிகளைப் போஷித்துத் தாங்குபவளும், சேதனர்களை ரக்ஷிக்கும் பாரத்தை ஞானிகளிடத்தில் வைப்பவளும், வேங்கடமலையரசனுக்கு பிரியமான பத்நியும், மதுரமான ஸ்வபாவமுடையவளும், மங்களங்களுக்கு நிதியுமான தயையே! ஸம்ஸாரத்தின் மூலத்தை ஹரணம் செய்யும் உன்னுடைய ப்ரவாஹத்தை என் மீது போதச்செய்ய வேணும்."

(தாத்பர்யம்) இந்த ச்லோகத்தின் சொற்சுவை மிகவும் மதுரமும், உருக்கமுமானது. தயையின் ஹ்ருதயம் மிகவும் ம்ருதுவாயிருக்கும். ஞானிகளுடைய ஸகல பாரங்களையும் தயை தாங்குகிறாள். சேதநர்களை ரக்ஷிக்கிற பாரம் தயைக்குச் சொந்தமானது. தன்னுடைய அந்த பாரத்தை தயை வித்வான்களிடத்தில் வைக்கிறாள். ஞானிகளைக்கொண்டு சேதநர்களை ரக்ஷணம் செய்விக்கிறாள். 'அடியார்க்கு என்னையாட்படுத்த விமலன்' என்பதுபோல் நம்மை ரக்ஷிக்கும் பாரத்தை ஜ்ஞானிகளிடத்தில் வைப்பது மதுரமான தன்மையென்கிறார். தயையின் பெரிய ப்ரவாஹங்கள் ஸம்ஸாரத்தை வேரோடு பிடுங்கிவிடும். ஸம்ஸாரமென்பது ஒரு பெரிய அச்வத்த விருக்ஷமென்று கீதையில் வர்ணிக்கப்பட்டது. அந்த வ்ருக்ஷத்தை தயாப்ரவாஹங்கள் வேரோடு

தள்ளிவிடும். தயை மோக்ஷம் வரையில் ஸகல மங்களங்களுக்கும் நிதியாவாள். காருண்யகுண விசிஷ்டனை பகவானிடத்தில் சரணாகதி செய்யவேணும். சரண்யனுக்கு தயாகுணம்தான் ப்ரதானமாகும். தயாவிசிஷ்டனை பகவானிடத்தில் சரணமடைவதை பகவானுடைய தயையினிடத்தில் சரணமடைவதாகக் கூறுகிறார். (60)

अकूपारैरेकोदकसमयवैतण्डिकजवै-
रनिर्वाप्यां क्षिप्रं क्षपयितुमविद्याख्यबडबाम् ।
कृपे त्वं तत्तादृक्प्रथिमवृषपृथ्वीधरपति-
स्वरूपद्वैगुण्यद्विगुणनिजबिन्दुः प्रवहसि ॥ ६१ ॥

**அகூபாரை ரேகோதக ஸமய வைதண்டிகஜவை-**
**ரநிர்வாப்யாம் க்ஷிப்ரம் க்ஷபயிது மவித்யாக்ய படபாம் ।**
**க்ருபே த்வம் தத்தாத்ருக் ப்ரதிம வ்ருஷ ப்ருத்வீதரபதி**
**ஸ்வரூபத்வைகுண்ய த்விகுண நிஜபிந்து: ப்ரவஹஸி ॥**

(பதவுரை) க்ருபே-தயையே, ஏகோதக ஸமயவைதண்டிக ஜவை:-ஒரே ஜலமயமாக விருக்கும் பிரளய காலத்தில் விதண்டாவாதம் பேசும் வாதியின் கடகடப்பேச்சினும் வேகத்தை உடைய, அகூபாரை:-ஸமுத்ரங்களாலும் அநிர்வாப்யாம்-அணைக்கக்கூடாத, அவித்யாக்ய படபாம்-அக்ஞான மென்கிற படபாமுகமான (குதிரை முகமான) ப்ரளய காலாக்கினியைப் போன்ற நெருப்பை, க்ஷிப்ரம்-வேகமாக, க்ஷபயிதும்-அணைப்பதற்கு, த்வம்-நீ, தத்தாத்ருக் ப்ரதிம வ்ருஷப்ருத்வீதரபதி ஸ்வரூபத்வைகுண்ய த்விகுண நிஜபிந்து:-குறிப்பிட்டு வர்ணிப்பதற்கு முடியாமல் அப்படி அப்படி யென்று பொதுவாகவே சொல்லவேண்டியபடி மிகப்பெரிதான வேங்கடமலை யரசன் (ப்ரஹ்ம) ஸ்வரூபத்திலும் இருதரம் இரட்டித்தும் (நான்கு பங்கு ப்ரமாணமுள்ள) உன்னுடைய ஒரு சொட்டை உடையவளாய், ப்ரவஹஸி-வெள்ளமிட்டோடுகிறாய்.

"க்ருபையே! அந்தனை பெரிதான ஸ்ரீநிவாஸனுடைய ஸ்வரூபத்தைக் காட்டிலும் ஈரிரண்டு (நான்கு) பங்கு பெரிதான ஒவ்வொரு திவலையையுடைய நீ எங்கும் ஏகோதகமாயிருக்கும் ப்ரளயகாலத்தில் விதண்டாவாதம் செய்யும் வாதிகளின் பேச்சின் வேகத்திற்கு ஒப்பான வேகத்தையுடைய ஸமுத்திரங்களாலும் அணைக்கக்கூடாத அவித்யையென்னும் வடவாமுகாக்நியை சீக்ரமாக அணைக்க ஸாமர்த்ய முடையவளாகிருய்"

(தாத்பர்யம்) முன் தசகத்தில் கடைசி ச்லோகத்தில் திருவேங்கடமுடையானுடைய தயையினிடத்தில் சரணாகதியை அனுஷ்டித்தார். சரணாகதியை அனுஷ்டிப்பதால் முக்தர்களைப்போல் மாசற்றவராகவேணும். அவித்யையென்னும் அஜ்ஞானம் நிவ்ருத்திப்பது சரணாகதியின் பலமாகிய மோக்ஷமாகும். அவித்யை என்பது கர்மத்திற்கும் பெயர். கர்மம் ப்ரளயகாலத்தில்கூட தொலைகிறதில்லை. ப்ரளயகாலத்தில் ஸமுத்ரத்திலிருந்து கிளம்பும் வடவாமுகாக்நி உலகத்தை தஹிக்கும் என்பர். அந்த அக்நியை அதிக வேகத்தோடு பொங்கும் ஸமுத்ரங்கள் அணைத்து உலகத்தை ஒரே ஜலமாகச் செய்யும் என்பர். வடவாக்நியை அணைக்க வல்லமையுடைய ப்ரளய ஸமுத்ரங்கள்கூட கர்மம் என்னும் அக்நியை அணைக்க சக்தியுடையதல்ல. கர்மம் என்பதுதான் அக்நியைவிட உக்ரமாய் ப்ராணிகளைக் கொளுத்துவது. ப்ரளய காலத்தில் ஸமுத்ரங்களுடைய வேகம விதண்டாவாதிகளுடைய விதண்டப் பேச்சின் வேகத்தை ஒக்கும் என்று வேடிக்கையாகக் கூறுகிருர். விதண்டாவாதிகள் எதிற் கக்ஷியை த்வபஸம் செய்வதில் நோக்குடையவர்களே யொழிய தங்கள் பக்ஷத்தை நிலை நிறுத்துவதில் கருத்துடையவரல்லர். ப்ரளய ஸமுத்ரங்கள் அழிக்கும் ஸ்வபாவமே உடையவை. அவைகள் ஒன்றையும் மிச்சம் வைக்கிறதில்லை. காட்டாறுகள் கல்லையும் மண்ணையும் உருட்டி அடித்துக்கொண்டு அதிவேகமாய் வருவது போல் விதண்டாவாதிகள் அதிவேகமாய் தடபுடலாய்

இரைச்சல் போட்டு வாதம் செய்வர். அவித்யை யென்னும் நெருப்பை தயையின் அடங்கலில்லாத ப்ரவாஹம் தான் அணைக்க வலிமையுடையது. அதின் ஒவ்வொரு திவலை யும் மிகப்பெரிய ப்ரஹ்ம ஸ்வருபத்துக்கும் நான்கு பங்கு பெரியதாகும் என்கிறார். தயையின் திவலையே அவ்வளவு பெரிதானால் தயையின் ப்ரவாஹத்தின் ப்ரபாவம் எப்படி இருக்கும்? (61)

विवित्सावेतालीविगमपरिशुद्धेऽपि हृदये
पटुप्रत्याहारप्रभृतिपुटपाकप्रचकिताः ।
नमन्तस्त्वां नारायणशिखरिकूटस्थकरुणे
निरुद्धत्वद्द्रोहा नृपतिसुतनीतिं न जहति ॥ ६२ ॥

**விவித்ஸாவேதாளீ விகமபரிசுத்தேபி ஹ்ருதயே**
**படுப்ரத்யாஹாரப்ரப்ருதி புடபாக ப்ரசகிதா: ।**
**நமந்தஸ்த்வாம் நாராயணசிகரி கூடஸ்த கருணே**
**நிருத்த த்வத்த்ரோஹா ந்ருபதிஸுதநீதிம் ந ஜஹதி ॥**

(பதவுரை) நாராயண சிகரி கூடஸ்த கருணே-வேங்கட மலையுச்சி ப்ரபுவின் தயையே, ஹ்ருதயே-மனதானது, விவித்ஸா வேதாளீ விகம பரிசுத்தேபி-பொன்னுசையென் னும் பெண் வேதாளத்தைத் துரத்திவிட்டதால் பரிசுத்த மாக்கப் பட்டிருந்தும், படு ப்ரத்யாஹார ப்ரப்ருதி புடபாக ப்ரசகிதா:- (பக்தியென்னும் உபாயத்திற்கு வேண்டிய அஷ்டாங்க யோகத்தில் சேர்ந்த) கடுமையான ப்ரத்யா ஹாரம் (இந்திரியங்களை விஷயங்களிற் போகாமல் இழுத்துப் பிடித்தல்) முதலிய புடபாகம் போன்ற உள்தாபமான உக்ரதபஸிலிருந்து நடுங்கினவர்களாய் த்வாம்-உன்னை, நமந்த:- சரணமடைந்து, நிருத்த த்வத் த்ரோஹா:- உன் ஆக்ஞையை மீறுகிறது என்கிற த்ரோஹத்தைத் தகைந்த வராய், ந்ருபதிஸுதநீதிம்-ராஜ புத்ரர்கள் எப்பொழுதாவது அபராதிகளானலும் அவர்களுக்கு தண்டனை லகுவாயிருப்பது போல ப்ரபந்நர் அபராதங்களுக்கும் தண்டம் வருமென்கிற நியாயத்தை, ந ஜஹதி-விடுகிறதில்லை.

"தனதான்யம் முதலிய ஸம்ருத்திகளை அடையவேண்டு மென்கிற ஆசாபிசாசத்தைத் தொலைத்து ஹ்ருதயத்தை சுத்தம் செய்தாலும் ப்ரத்யாஹாரம் முதலிய யோகாங்கங்களால் ஹ்ருதயத்தைப் புடமிடுவதாகிற கடினமான வ்யாபாரத்தினின்று நடுங்கினவர்களாய் நாராயணகிரியென்னும் மலையினுச்சியில் இருக்கும் ஸ்ரீநிவாஸனுடைய தயையே, உன்னை வணங்கி உன்னுடைய த்ரோஹத்தினின்றும் நீங்கி, ராஜகுமாரந்யாயத்தை விடாமல் கைப்பற்றுகிறார்கள்."

(தாத்பர்யம்) மேலும் மேலும் வேண்டுமென்று வளர்ந்தோங்கும் ஆசையை வேதாளியென்கிற பெண் பேய்க்கு உவமையாகக் கூறுகிறார். பேய்க்குக் கேட்டதையெல்லாம் கொடுத்துக்கொண்டே இருக்கவேணும். முன்பு எத்தனை கொடுத்திருந்தாலும் புதிதாய்க் கேட்பதொன்றை உடனே சம்பாதித்துக்கொடாவிட்டால் வேதாளம் ஆளை முழுங்கி விடும். அப்படியே ஆசை புதிதுபுதிதாய்க் கேட்பதை யெல்லாம் உடனுக்குடன் சம்பாதித்துக்கொடுத்துக்கொண்டே இராவிட்டால் அதனாலுண்டாகும் ஆசாபங்கம் நெஞ்சை உடையச்செய்து உயிரைக்கூட மாய்த்துவிடும். இந்த ஆசாபிசாசத்தைத் தொலைத்து வைராக்யத்தை ஸம்பாதித்தாலும் பக்தியோகத்திற்கு அஷ்டாங்கயோகம் இன்றியமையாதது. ப்ரத்யாஹாரம் என்பது இந்திரியங்களை வெளி விஷயங்களில் செல்லாமல் உள்ளே இழுத்து அடக்குவதாகும். ப்ரத்யாஹாரம், ப்ராணாயாமம், தாரணை த்யானம் முதலிய அம்சங்களால் ஹ்ருதயத்தை புடத்தில் வைக்கவேணும். அந்தக் கஷ்டமான வ்யாபாரத்தைக் கண்டு பயந்து பக்தியோகத்தில் இறங்காமல் ஸ்ரீநிவாஸனுடைய தயையின் காலில் விழுந்து அங்கே அடைக்கலம் புகுந்து அபராதங்களைச் செய்வதினின்றும் நடுங்கி அவைகளை விலக்கி ராஜபுத்ர ந்யாயத்தை அனுஸரிக்கிறார்கள். ராஜபுத்திரர்கள் தாங்கள் ராஜாவின் குமாரர்களாயிருந்தாலும், சக்ரவர்த்தியின் ஆஜ்ஞையை மீறப் பயந்து நடப்பார்கள். ஒருகால் அவர்கள் கொஞ்சம் தவறி

கூலும் அவர்களுக்கு ராஜா லகுவான சிக்ஷையை விதிப்பார். இதை ராஜபுத்ர ந்யாயமென்று சொல்வர். ப்ரபந்நர்கள் ராஜபுத்ரர் போலாவார். (62)

अनन्याधीनः सन्भवति परतन्त्रः प्रणमतां
कृपे सर्वद्रष्टा न गणयति तेषामपकृतिम् ।
पतिस्त्वत्पारार्थ्यं प्रथयति वृषक्ष्माधरपति-
र्व्यवस्थां वैयात्यादिति विघटयन्ती विहरसि ॥ ६३ ॥

அநந்யாதீநஸ்ஸந் பவதி பரதந்த்ர: ப்ரணமதாம்
க்ருபே ஸர்வத்ரஷ்டா ந கணயதி தேஷாமபக்ருதிம் ।
பதிஸ்த்வத்பாரார்த்யம் ப்ரதயதி வ்ருஷக்ஷ்மாதர பதிர்
வ்யவஸ்தாம் வையாத்யாதிதி விகடயந்தீ விஹரஸி ॥

(பதவுரை) தயே–தயையே, வ்ருஷக்ஷ்மாதரபதி:–வேங்கடத்தரசன, அநந்யாதீந: ஸந்–பிறெருருவருக்கும வசப்பட்டவனல்லவனுயினும், ப்ரணமதாம்–(தன்னை) வணங்குபவர்களுக்கு, பரதந்த்ர:–இட்டது சட்டமாக, பவதி–ஆகிருன். ஸர்வத்ரஷ்டா (ஸந)–எலலாவற்றையும் பார்க்கிறவனுயிருந்தும், தேஷாம்–(வணங்குகிற) அவர்களுடைய அபக்ருதிம்–குறறததை, ந கணயதி–கணக்கிடுவதில்லை. பதி:–(உன்) கணவன், தவத்பாரார்த்யம்–உன் சொன்னபடி கேட்பதை, ப்ரதயதி–ப்ரகாசப்படுத்துகிருர். வையாத்யாத்–உன்னுடைய உத்தண்டமான மனப்போக்கிறல் (சலுகை மததததால), வ்யவஸ்தாம்–(தர்ம) வரம்பை, இதி–இபபடி, விகடயந்தீ-மீறிக்கொண்டு, (இல்லாமற்செய்து கொண்டு), விஹரஸி-விளையாடுகிருய்.

"தயையே! ஒருவருக்கும் அதீனமல்லாத ஸ்வதந்த்ரனை உன்னுடைய பர்த்தா வ்ருஷகிரிநாதன், வணங்குகிறவாகளுக்கு பாதந்த்ரனுகிருன். உலகத்தில் எல்லாவற்றையும் கண்ணுககு நேராயிருப்பதுபோல ப்ரதயக்ஷீகரிக்கும் அவன் அவாகளுடைய அபகாரத்தை எண்ணுகிறதில்லை,

அவன் ஸர்வசேஷியான பதியாயிருந்தாலும் உனக்கு சேஷமாயிருப்பதையே ப்ரகாசப்படுத்துகிறான். அதனால் நீ இவ்விதமாக ஈச்வரனுடைய சட்ட நியமங்களை உன் இஷ்டப்போல உலங்கனம்செய்து விளையாடுகிறாய்."

(தாத்பர்யம்) ஈச்வரன் ஒருவனுக்கும் சேஷனல்ல என்றும், அவன் ஸ்வதந்த்ரன் என்றும், அவனுக்கு லக்ஷணம். ஸர்வசேஷித்வமும், ஸ்வாதந்த்ரியமும் அவனுக்கு லக்ஷணமாகும். அவனை நன்றாய் வணங்கி அவன் காலைப் பிடித்துக்கொண்டவர்களுக்குப் பரதந்த்ரனாக நீ அவனைச் செய்துவிடுகிறாய். இதனால் ஈச்வரத்வம் என்கிற வரம்பே குலைந்துபோகிறது. எல்லாவற்றையும் ஒருமிக்கத் தானாகவே ப்ரத்யக்ஷமாக ஸர்வகாலத்திலும் அறிகிறவன் ஈச்வரன் என்று யோகி ஸார்வபௌமரான நாதமுநிகள் அருளிச் செய்த லக்ஷணம். ஆச்ரிதர்களுடைய குற்றங்களைப் பார்த்தாலும் கண்ணை மூடிக்கொண்டு பார்க்காததுபோலிருக்கிறான். அவர்கள் குற்றங்களை அவன் கணக்கில் வைக்கிறதில்லை. 'ஸஹஸ்ராம்சு' என்று அவனை ஸஹஸ்ரநாமத்தில் சொல்லுமிடத்திலேயே அவனுக்கு 'அவிஜ்ஞாதா' என்ற பெயரை நீ வாங்கிக் கொடுக்கிறாய். 'அவிஜ்ஞாதா' என்பதற்கு அறியாதவனென்று பொருள். ஸர்வஜ்ஞனை அஜ்ஞன் போலாக்குகிறாய். இதெல்லாம் நிந்தைபோல மேலுக்குத் தோன்றினாலும், வாஸ்தவத்தில் குணகீர்த்தனமாகவும் ஸ்துதியாகவும் இருக்கிறது. ஆச்ரிதர்களின் இஷ்டத்தை அனுவர்த்திப்பதும், அவர்களுக்கு விதேயனாவதும், அவர்கள் அறியாக் குற்றங்களைக் கவனியாமையும் பிரபுவுக்குக் குணமேயாகும். (63)

अपां पत्युः शत्रूनसहनमुनेर्धर्मनिगलं
कृपे काकस्यैकं हितमिति हिनस्ति स्म नयनम् ।
विलीनस्त्रातन्त्र्यो वृषगिरिपतिस्त्वद्विहृतिभि-
र्दिशत्येवं देवो जनितसुगतिं दण्डनविधिम् ॥ ६४ ॥

அபாம் பத்யு: சத்ருநஸஹநமுநேர் தர்மநிகளம்
க்ருபே காகஸ்யைகம் ஹிதமிதி ஹிநஸ்தி ஸ்ம நயநம் ।
விலீநஸ்வாதந்த்ர்யோ வ்ருஷகிரிபதிஸ்த்வத்விஹ்ருதிபிர்
திசத்யேவம் தேவோ ஜநிதஸுகதிம் தண்டநவிதிம் ॥

(பதவுரை) க்ருபே-தயையே, அபாம்பத்யு:-ஜலங்களுக்கரசனான ஸமுத்ர ராஜனுடைய, சத்ரூன்-சத்ருக்களையும், அஸஹநமுநே:-பெருமையை ஸஹிக்கமாட்டாமல் பொறாமைக் காய்ச்சல் கொண்ட பரசுராமருடைய, தர்மநிகளம்-புண்யமென்னும் விலங்கையையும், காகஸ்ய-காக்கையினுடைய (காகாஸுரனுடைய), ஏகம் நயநம்-ஒரு கண்ணையும, ஹிதமிதி-(அவர்களுக்கு) நல்லதென்று நினைத்து, வ்ருஷகிரிபதி:-வேங்கடத்தரசன், ஹிநஸ்திஸ்ம-போக்கினான். த்வத்விஹ்ருதிபி:-உன்னுடைய விளையாட்டுக்களால், தேவ:-அந்தத் தேவன், விலீநஸ்வாதந்த்ர்ய:-தன் ஸ்வாதந்த்ரியத்தை இழந்தவராய், ஏவம்-இப்படி, தண்டனவிதிம்-தண்டிக்கிற கட்டளையை, ஜநிதஸுகதிம்-நல்ல கதியை விளைவிப்பதாக, திசதி-(பலன்) கொடுக்கிறார்.

"க்ருபையே! உன்னுடைய விளையாட்டுக்களாலே ஸ்வாதந்தரியத்தை முற்றுமிழந்த ஸ்ரீநிவாஸன் ஸமுத்ர ராஜனுக்கு ஹிதமென்று நினைத்து அவன் சத்ருக்களைத் தொலைத்தான். ராமன் பெருமையை ஸஹிக்கமாட்டாமல் கோடாலியையேந்திவந்த பரசுராமருடைய புண்யமென்னும் விலங்கைத் தொலைத்தான். காகாஸுரனுடைய ஒரு கண்ணை மட்டும் தொலைப்பது அவனுக்கு ஹிதமென்று அவனுடைய ஒரு கண்ணை நீக்கினான். இப்படித் தண்டனை மார்க்கத்தைக்கூட அபராதிகளான சத்ருக்களுக்கு நல்ல கதியை உண்டுபண்ணுவதாக உன்னுடைய வசமாய் இருப்பதால் அவன் செய்கிறான்."

(தாத்பர்யம்) முன் ச்லோகத்தில் குற்றம் செய்தவர்களுடைய குற்றங்களைத் தயையின் ப்ரபாவத்தால் ஸ்ரீநிவாஸன் பாராட்டுவதில்லை என்றார். இங்கே குற்றங்

களுக்காக ஹிதத்தையே விளைவிக்கிறானென்றும், குற்றங்களுக்கு விதிக்கும் தண்டனையின் க்ரமம கூட குற்றம் செய்தவருக்கு அநுகூலமாக முடிகிறதென்றும், தயையின் ப்ரபாவத்தைக் காட்டுகிறார். முதலில் பெருமாள் வந்த போது அவரைத் திரஸ்கரித்து மேலும் மேலும் பொங்கி அலைமோதிய ஸமுத்ர ராஜனுடைய திருஷ்டாந்தத்தைக் காட்டுகிறார். ஸமுத்திரத்தைப் புண்ய தீர்த்தங்களுக்கெல்லாம் கணவனென்று பொருள்படும் 'அபாம்பதி:' என்கிற பெயரினால் குறிப்பிடுவது மிகவும் அழகு. "ஸமுத்ரத்தையே வற்றச்செய்து தரையாக்குகிறேன். ஜலத்தையே என்னுடைய பாணத்தின் அக்நியினால் எண்ணெயைப் போல எரியச்செய்து சோஷணம் செய்கிறேன். வானரர்கள் காலாலே நடந்து லங்கைக்குப் போகட்டும்" என்று ப்ரபு அதிகோபத்தோடு சீறியபோது, ஸமுத்ர ராஜன் நடுங்கி கங்கை யமுனை முதலிய தன்னுடைய பத்நிகளான ஸகல புண்ய நதிகளையும் தன்னைச் சூழ்ந்துவரும்படி செய்து அத்தனை ஸ்திரீகளின் நடுவிலே தானிருந்துகொண்டு ப்ரபுவின் ஸமீபத்திற்கு வந்ததாக ராமாயணத்தில் கூறப்பட்டிருக்கிறது. ப்ரபுவின் கோபத்தை மாற்றுவதற்காக அவன் அப்படிச் செய்தான். அவனை ஹிம்ஸித்தால் உலகத்துக்கெல்லாம் பாபத்தைப் போக்கும் எல்லா புண்ய நதிகளுக்கும் வைதவ்யம வருமே என்று ஸ்வாமி அஞ்சமாட்டாரா என்பது கருத்து. இந்த அபிப்ராயத்தை இங்கே கவி வியஞ்ஜனம் செய்கிறார். ஸமுத்ரராஜன்மேல் வந்த அத்யுக்ரமான கோபத்தைத் தயவினால் ஒரு க்ஷணத்தில் மாற்றி அவனுடைய சத்ருக்களின்மேல் அந்தக் கோபத்தைத் திருப்பி அவர்களைத் தொலைத்ததனால் ஸமுத்ரராஜனுக்கு அநுகூலமே ஏற்பட்டது. அப்படியே, அப்பொழுதுதான் தனுர்பங்கம் செய்து ஸீதையைப் பாணிக்ரஹணம் செய்து கொண்டு மிக்க வ்ருத்தரான தகப்பனாரோடு மிதிலையிலிருந்து அயோத்தைக்குச் செல்லுகையில், ராமனுடைய யசஸ்ஸைக் கேட்கப்பொறுமல் கையில் கோடாலியுடன் எதிர்கொண்டு

எதிர்த்துவந்த ஸர்வ க்ஷத்ரிய ஹந்தாவான பரசுராமர் என்னும் ப்ராஹ்மணரை ஜயித்து அவர்மீது தொடுத்த தன் பாணத்தினால் அவரை விட்டுவிட்டு அவருடைய புண்யங்கள் எல்லாவற்றையும் அழித்தார். மோக்ஷத்தை அடையவேண்டியவனுக்கு புண்யங்களும் விலங்கென்பர். காராக்ருஹமாகிய ஸம்ஸாரத்தில் சிறைப்பட்டவருக்கு ஸம்ஸார ஸுகங்களைக் கொடுக்கும் புண்யமும் பொன்விலங்காகும். பொன் விலங்காயினும் விலங்குதானே. புண்யத்தை நாசம் செய்தது அவருக்கு அநுகூலமாயிற்று. லோகமாதாவான ஸ்ரீ நாபிராட்டியின் ஸ்தனங்களை நோக்கின காகாஸுரனுடைய கண்களில் ஒன்றை மட்டும் வாங்குவது அவனுக்கு ஹிதமென்று அதைமட்டும் வாங்கினார். ஒற்றைக் கண்ணினால், பார்க்கக்கூடாத விஷயங்களை நன்றாய்ப் பார்ப்பது கஷ்டமானபடியால் பார்வையினால் தோஷத்தை ஸம்பாதிப்பதற்கு இடங்குறையுமாதலால் ஒரு கண் போனதும் அவனுக்கு ஹிதமாயிற்று. உலக ரீதியை இப்படி மாற்றுவது தயாதேவியின் விளையாட்டு தண்டனகதியை துர்கதியென்பர். அதையும் தயாதேவி ஸுகதியாகச் செய்கிறாளென்பது ஆச்சர்யம். (64)

निषादानां नेता कपिकुलपतिः कापि शबरी
कुचेलः कुब्जा सा व्रजयुवतयो माल्यकृदिति ।
अमीषां निम्नत्वं वृषगिरिपतेरुन्नतिमपि
प्रभूतैः स्रोतोभिः प्रसभमनुकम्पे समयसि ॥ ६५ ॥

நிஷாதாநாம் நேதா கபிகுலபதி: காபி சபரீ
குசேல: குப்ஜா ஸா வ்ரஜயுவதயோ மால்யக்ருதிதி ।
அமீஷாம் நிம்நத்வம் வ்ருஷகிரிபதேருந்நதிமபி
ப்ரபூதை: ஸ்ரோதோபி: ப்ரஸபமநுகம்பே ஸமயஸி ॥

(பதவுரை) அநுகம்பே-தயையே, நிஷாதாநாம் நேதா-வேடர்களுக்குத் தலைவன் (குஹன்), கபிகுலபதி:-குரங்கு ஜாதிக்கரசன் (ஸுக்ரீவன்), காபி சபரீ-யாரோ ஒரு காட்டு

மனுஷியான சபரி, குசேல:- கந்தைத் துணிக் குசேலர், குப்ஜா ஸா-(கம்ஸனின் சேடியான) அந்தக்கூனி, வ்ரஜயுவதய:-கோபஸ்த்ரீகள், மால்யக்ருத்-மாலாகாரர். இதி-ஆகிய இப்படிக்கொத்த, அமீஷாம்-இவர்களுடைய, நிம்நத்வம்-தாழ்மையையும், வ்ருஷகிரிபதே:- வேங்கடமலை அரசனுடைய, உந்நதிமபி-உயர்வையும், ப்ரபூதை:- (கரைபுரண்டு வரும்) ப்ரவாஹிக்கும், ஸ்ரோதோபி:-ஜலங்களால், ப்ரஸபம்-பலாத்காரமாக, ஸமயஸி-ஸமானமாகச் செய்கிறாய் (ஒரு ஸமனாக்குகிறாய்).

"தயையே! வேடர்களுக்கு நாயகனான குஹன், வானர குலத்துக்கு அதிபனான ஸுக்ரீவன், யாரோ ஒரு வேடப் பெண், குசேலர், அந்தக்கூனி, இடைப்பெண்கள், மாலாகாரர் என்கிற இவர்களுடைய தாழ்மையும், வேங்கடமலையரசனுடைய மேன்மையையும் உன்னுடைய அபரிமிதமான ப்ரவாஹங்களாலே நிரப்பிபலாத்காரமாய் ஸமனாக்குகிறாய்."

(தாத்பர்யம்) முன் ச்லோகத்தில் அபராதம் செய்தவர்களுக்கு விதிக்கும் தண்டனையும் அனுகூலமாக முடிகிறதென்று காட்டினார். இங்கே அதிநீசமான குஹன் முதலியவர்களோடும் அத்யுச்சரான மலைப் பெருமாள் தயாதேவியின் ப்ரபாவத்தால் ஸமமாகக் கலந்து பரிமாறுவதைக் காட்டுகிறார். உயரத்திலிருப்பவரையும், தாழ்ந்த இடத்திலிருப்பவரையும் ஸமப்படுத்துவதற்காக தயாதேவி தன்னுடைய ப்ரவாஹங்களை வெள்ளமிடச்செய்து இருவரையும் ஸமமாகச் சேர்த்துவிடுகிறாள். வெள்ளம் மேலிருப்பவனையும் கீழே கொண்டுவரும். கீழிருப்பவனையும் மேலே கொண்டுவரும். இப்படி இரண்டு விதத்தாலும் இருவரையும் ஸமநிலையாக்கலாம். இங்கே கூனியென்பது கம்ஸனுக்கு சந்தனச் சாந்து அரைத்துக்கொண்டுபோகும் மூன்று கோணலையுடைய த்ரிவக்ரையான குப்ஜையைச் சொல்லுகிறது. அவள் விஷயத்தில் அவள் உடம்பின் கோணல்களையெல்லாம் ஸமப்படுத்தினதையும் கொள்ளவேணும். (65)

त्वया दृष्टस्तुष्टिं भजति परमेष्ठी निजपदे
वहन्मूर्तीरष्टौ विहरति मृडानीपरिबृढः ।
बिभर्ति स्वाराज्यं वृषशिखरिशृङ्गारिकरुणे
शुनासीरो देवासुरसमरनासीरसुभटः ॥ ६६ ॥

த்வயா த்ருஷ்டஸ்துஷ்டிம் பஜதி பரமேஷ்டீ நிஜபதே
வஹந்மூர்த்தீரஷ்டௌ விஹரதி ம்ருடாநீபரிப்ருட: ।
பிபர்த்தி ஸ்வாராஜ்யம் வ்ருஷசிகரிச்ருங்காரிகருணே
சுநாஸீரோ தேவாஸுரஸமரநாஸீரஸுபட: ॥

(பதவுரை) வ்ருஷசிகரிச்ருங்காரி கருணே-வேங்கடமலையின் அழகான பெருமாளின் தயையே, பரமேஷ்டீ-உயர்ந்த பதத்திலுள்ள ப்ரஹ்மாவானவர், த்வயா-உன்னாலே, த்ருஷ்ட:-கடாக்ஷிக்கப்பட்டு, நிஜபதே-தன் ஸ்தானத்தில் துஷ்டிம்-ஆனந்தத்தை, பஜதி-எப்பொழுதும் அடைந்து கொண்டிருக்கிறார். ம்ருடாநீபரிப்ருட:- பார்வதீபதியானவர், அஷ்டௌ-எட்டு, மூர்த்தீ:- சரீரங்களை (ஐந்து பூதங்கள், ஸூர்யன், சந்திரன், யாகம் செய்யும் யஜமானன் ஆக எட்டு) வஹந்-தாங்கிக்கொண்டு, விஹரதி-விளையாடுகிறார். சுநாஸீர:-இந்திரன், தேவாஸுரஸமரநாஸீரஸுபட: தேவாஸுரர்களுடைய யுத்தத்தில் சேனை முனையில் சிறந்த போர் வீரனாக இருந்துகொண்டு, ஸ்வாராஜ்யம்-ஸ்வர்க்கத்தரசை, பிபர்த்தி-பரிபாலிக்கிறான்.

"வ்ருஷகிரிக்கு அலங்காரமான ஸ்ரீநிவாஸனுடைய கருணையே! உன்னால் கடாக்ஷிக்கப்பட்டு ப்ரஹ்மாவானவர் தன்னுடைய ஸ்தானத்தில் ஸந்தோஷத்தை அடைகிறார்; (உன்னாலே கடாக்ஷிக்கப்பட்டு) பார்வதீபதியானவர் எட்டு மூர்த்திகளை தரித்துக்கொண்டு ஸுகமாக விளையாடுகிறார். இந்த்ரனும் தேவாசுராகள் ஒருவரையொருவர் எதிர்க்கும் யுத்தமுகத்தில் உன் கடாக்ஷத்தால் உத்தம வீரனாகி தன் ராஜ்யத்தைத் தரிக்கிறான்".

(தாத்பர்யம்) முன் ச்லோகத்தில் மந்தர்களோடு மஹான்கள் சிறிதேனும் வேற்றுமையின்றி கலக்கும் ஸௌசீல்ய குணத்தின் ஆவிஷ்காரணம் தயையினுடைய ப்ரபாவமென்றார். இங்கே ஜகதீச்வரர்களான ப்ரஹ்மருத்ரேந்திரர்கள் தங்கள் அரும் பெரும் ஐச்வர்யங்களைப் பெற்று ஸுகப்படுகிறார்கள் என்பதைக் காட்டுகிறார். (66)

दये दुग्धोदन्वद्व्यतियुतसुधासिन्धुनयत-
स्त्वदाश्लेषान्नित्यं जनितमृतसंजीवनदशाः ।
स्वदन्ते दान्तेभ्यः श्रुतिवदनकर्पूरगुलिका
विषुण्वन्तश्चित्तं वृषशिखरिविश्वम्भरगुणाः ॥ ६७ ॥

**தயே துக்தோதந்வத் வ்யதியுத ஸுதாஸிந்துநயத:**
**த்வதாச்லேஷாந் நித்யம் ஜநிதம்ருதஸஞ்ஜீவநதசா: ।**
**ஸ்வதந்தே தாந்தேப்ய: ச்ருதிவதநகர்பூரகுளிகா**
**விஷுண்வந்தச்சித்தம் வ்ருஷசிகரி விச்வம்பரகுணா: ॥**

(பதவுரை) தயே-தயையே, வ்ருஷசிகரிவிச்வம்பரகுணா: வேங்கடமலையினுச்சியில் உலகத்தைத் தாங்கிக்கொண்டு நிற்கும் பெருமானுடைய குணங்கள், துக்தோதந்வத்வ்யதியுத ஸுதாஸிந்துநயத:- பாற்கடலும் அமிருதக்கடலும் கலக்குமதுபோல், த்வதாச்லேஷாத்-உன்னோடு கலப்பதினாலே, ஜநிதம்ருதஸஞ்ஜீவநதசா: - ம்ருதப்ராயரையும் உயிர்ப்பித்து உஜ்ஜீவிக்கும் தசையை அடைந்தவைகளாயும், ச்ருதிவதந கர்ப்பூரகுளிகா:- ச்ருதிதேவிகளின் நாக்குகளில் பச்சைக்கர்ப்பூர குளிகைகளாயும், சித்தம் விஷுண்வந்த:-மனதை (ஆனந்தத்தால்) பிழிவதாயும், (மற்றொன்றை நினையாமல் ஒரே நிலையில் நிறுத்துவதாயும்) தாந்தேப்ய:- இந்த்ரியங்களை வசப்படுத்தினவர்களுக்கு, நித்யம்-ஸர்வகாலமும், ஸ்வதந்தே-ருசியாயிருக்கின்றன.

"தயையே! பாற்கடலோடு நன்றாய்க் கலந்த அமிர்தக் கடல்போல் உன்னுடைய நெருக்கமான ஸம்பந்தத்தால் இறந்தவர்களைப் பிழைப்பிக்கும் சக்தியுடையவைகளாயும்,

வேதங்களுடைய வாய்களில் கற்பூர குளிகைகளாயும் மனதைப் பிழியச்செய்வதாயும் உள்ள வ்ருஷாசலேச்வர குணங்கள் இந்திரியத்தை ஜயித்தவர்களுக்கு எக்காலத்திலும் ரஸிக்கின்றன".

(தாத்பர்யம்) அமிருதம் மரணத்தைத் தடுத்து அதினின்று காப்பாற்றி ப்ராணிகளை உயிர்ப்பிக்கும். அதுபோல தயை என்னும் அமிருத குணம் ஸ்ரீநிவாஸனுடைய மற்ற குணங்களோடு கலந்து பாபச்சுமையால் ம்ருதப்ராயராயிருக்கும் ஆத்மாக்களை ஸஞ்ஜீவனம் செய்து அமிருதர்களாக்கும் கற்பூர குளிகைகளை நாக்கில் வைத்தால் ரஸம் ஊறுவதுபோல் தயையோடு கலந்த பகவத் குணங்களை ச்ருதி தன் நாக்கில் வைத்து உச்சரிக்கும்பொழுது ச்ருதியின் நாக்கில் ரஸம் ஊறும் அந்த அம்ருத குணங்களைக்கேட்ட மனஸு தேனடையிலிருந்து தேனைப் பிழிவதுபோல் ரஸத்தைப்பிழியும். (67)

जगज्जन्मस्थेमप्रलयरचनाकेलिरसिको
विमुक्त्येकद्वारं विघटितकवाटं प्रणयिनाम् ।
इति त्वय्यायत्तं द्वितयमुपधीकृत्य करुणे
विशुद्धानां वाचां वृषशिखरिनाथः स्तुतिपदम् ॥ ६८ ॥

ஜகஜ்ஜந்மஸ்தேமப்ரளயரசநாகேளிரஸிகோ
விமுக்த்யேகத்வாரம் விகடிதகவாடம் ப்ரணயிநாம் ।
இதி த்வய்யாயத்தம் த்விதயமுபதீக்ருத்ய கருணே
விசுத்தாநாம் வாசாம் வ்ருஷசிகரிநாத: ஸ்துதிபதம் ॥

(பதவுரை) கருணே - தயையே, வ்ருஷசிகரிநாத:- வேங்கடமலையரசன், ஜகஜ்ஜந்மஸ்தேமப்ரளயரசநாகேளிரஸிக:- ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதிப்ரளயங்களை உண்டு பண்ணுவதென்கிற விளையாட்டில ரஸிகனுயும, ப்ரணயிநாம்-தன்னிடத்தில் ப்ரணயமென்னும் ப்ரீதியையுடையவர் விகடிதகவாடம்-திறக்கப்பட்ட கதவையுடைய

விமுக்த்யேகத்வாரம்-பரமபதமென்னும் மோக்ஷத்திற்கு ஒரு வாசலாயும், த்வய்யாயத்தம்—உன்னுலாகவேண்டியதான, இதி த்விதயம்—இந்த இரண்டு பெருமைகளேயும், உபத்க்ருத்ய-காரணமாகக்கொண்டு விசுத்தாநாம் வாசாம்-(புருஷகர்த்ருகமல்லாததால்) தோஷமற்றதும் பரிசுத்தமுமான வேதவாக்குகளுக்கு, ஸ்துதிபதர்-துதிக்கப்பாத்ரமாக (ஆகிருன்)

" கருணையே! வ்ருஷகிரிக்கு அதிபதியானவன் ஜகத்தின் உத்பத்தி ஸ்திதி நாசங்களேச் செய்விக்கும் விளையாட்டில் ரஸிகனுகையும், ப்ரீதியையும், நம்பிக்கையையும் உடையவருக்கு மோக்ஷத்திற்குக் கதவு திறந்து வைத்திருக்கும் ஒரே த்வாரம் ஆகையும், ஆக இவ்விரண்டு ஆகாரத்தையும் உன்வசமாயிருப்பதால் அடைவதைக் காரணமாகக்கொண்டு மாசற்ற வேதவாக்குகளுடைய ஸ்தோத்ரத்திற்கு அவன் விஷயமாகிருன் ".

(தாத்பர்யம்) முன்பு இரண்டாவது தசகத்திலேயே உலகத்தைப் படைப்பதும், காப்பதும் அழிப்பதும், கருணையின் கார்யமென்று நிரூபித்திருக்கிருர். ஸ்ருஷ்டி முதலியது ஸம்ஸாரத்தினுடைய வ்ருத்தியாகும். மோக்ஷமென்பது ஸம்ஸாரத்தை அடியோடு தொலேப்பதாகும். ஸம்ஸாரத்தை விருத்திசெய்யும் ஸ்ருஷ்டி முதலிய வ்யாபாரங்களேத் தனக்கு விளேயாட்டாக உடைய ஈச்வரன் உன்வசமாயிருப்பதால் தன்னிடத்தில ப்ரணயத்தைக் காட்டுகிறவர்களுககு மோக்ஷ த்வாரத்தின் கதவைத திறந்துகொண்டு வாருங்களென்று அழைக்கிருன். இதையிட்டுத்தான் ப்ராணிகளிடத்தில் ஆயிரம் தாய் தந்தையரைக்காட்டிலும் அதிகமான வாத்ஸல்யத்தையுடைய வேதம் ஸ்ரீநிவாஸனை ஸ்தோத்ரம் செய்கிறது. ப்ராணிகளுக்கு ஸுலபமாய் மோக்ஷம் கொடுபபதெனகிற தயாகுணமிருப்பதாலேதான் சுத்தமான வேதவாக்குகள் ஈச்வரனை ஸ்துதிககினறன. (68)

कलिक्षोभोन्मीलत्क्षितिकलुषकूलंकषजवै-
रनुच्छेदै रैतैरवटतटवैषम्यरहितैः ।
प्रवाहैस्ते पद्मासहचरपरिष्कारिणि कृपे
विकल्पन्तेऽनल्पा वृषशिखरिणो निर्झरगुणाः ॥ ६९ ॥

கலிக்ஷோபோந்மீலத்க்ஷிதிகலுஷகூலங்கஷஜவை-
ரநுச்சேதைரேதைரவடதடவைஷம்யரஹிதை; ।
ப்ரவாஹைஸ்தே பத்மாஸஹசரபரிஷ்காரிணி க்ருபே
விகல்பந்தேऽநல்பா வ்ருஷசிகரிணோ நிர்ஜரகுணா: ॥

(பதவுரை) பதமாஸஹசரபரிஷ்காரிணி–லக்ஷ்மியுடன் ஸஞ்சரிக்கும் ஸ்ரீநிவாஸனுக்கு அலங்காரத்தைச் செய்யும், க்ருபே – தயையே, கலிக்ஷோபோந்மீலத்க்ஷிதி கலுஷ கூலங்கஷஜவை: – கலியின் கலக்கத்தால் வளரும் உலக பாபங்களைப் போக்கக்கூடிய வேகத்தை உடையதும், அநுச்சேதை: – ஓய்வென்பதில்லாததும், அவட தடவைஷம்ய ரஹிதை: – பள்ளம் மேடு என்கிற வித்யாஸம் பாராததுமான தே ப்ரவாஹை: – உன்னுடைய ப்ரவாஹங்களோடு, அநல்பா: – சிறுமையேயில்லாமல் மிகப் பெரிதான, வ்ருஷ சிகரிண: – வடமாமலைப் பெருமாளுடைய, நிர்ஜரகுணா: – அருவிகளின் குணங்கள், விகல்பந்தே – ஒக்கின்றன.

"தாமரையாளோடு ஸஹசரனான ஸ்ரீநிவாஸனை அலங்காரம் செய்யும் க்ருபையே! கலியின் கலக்கத்தினால் உண்டாகும் மனக்கசடுகளை கரையை உடைத்து வெள்ள மிட்டு ஓடுவதாயும், விச்சேதமற்றதாயும், மேடு பள்ளம் என்னும் தாரதம்யத்தை நீக்குவதாயும் உள்ள உன்னுடைய அநேக ப்ரவாஹங்கள் அந்த குணங்களையுடைய திருமலை யின் அருவி ப்ரவாஹங்களுக்கு உவமையாகக் கூறப் படுகின்றன."

(தாத்பர்யம்) திருமலையின் அருவிகளின் ப்ரவாஹங்கள் பூமியிலுள்ள அசுத்திகளை அடியோடு போக்கிவிடும். கரை புரண்டு ஓடும் அந்த ப்ரவாஹங்களுக்குத் தட்டுத்தடங்கல்

இராது. மேடு பள்ளம் என்கிற பேதத்தைப் பாராமல் எல்லாவற்றின் மேலும் ஓடும். இப்படியே தயையின் கரை புரண்ட ப்ரவாஹங்களும், உலகத்தின் கலி கலுஷங்களைப் போக்கும். உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்கிற பேதத்தைப் பாராமல் யாவர்பேரிலும் மோதி ஓடும். இந்த தசகத்தின் ஆரம்பத்தில் ப்ரளயகால ஸமுத்ரங்களும் வேகமான வெள்ளங்களும் அவிக்கமாட்டாத அவித்யை என்னும் நெருப்பை ப்ரஹ்மஸ்வரூபத்தைவிட பெரிதான ஓரோர் திவலையையுடைய தயையின் ப்ரவாஹம் அவிக்க வலிமை உடையது என்று கூறினர். சரணாகதியை அநுஷ்டித்த உத்தரக்ஷணத்திலேயே ஸ்ரீநிவாஸனுடைய தயை முன்பு அணைபோட்டிருந்தது வெள்ளமிட்டு அணையை உடைத்துக் கரைபுரண்டு ஓடி கச்மலங்களையெல்லாம் துலைத்து மண்டி எரியும் காமமென்னும் அக்நியை அவித்து ப்ரஹ்மமென்னும் அபருதானந்த ஸமுத்ரத்தில் கொண்டுபோய்ச் சேர்த்து விடுகிறதென்பதை அங்கே அனுபவிக்க ஆரம்பித்தார். அந்த அனுபவம் இவர் மனதில் வெள்ளமிட்டோடிக் கொண்டிருக்கிறது. இந்த தசகம் முடியுமுன் அதே அனுபவத்தை வேறொரு ப்ரகாரமாக இந்த ச்லோகத்திலும் காட்டுகிறார். (69)

खिलं चेतोवृत्तेः किमिदमिति विस्मेरभुवनं
क्रुपे सिंहक्ष्माभृत्कृतमुखचमत्कारकरणम् ।
भरन्यासच्छन्नप्रबलवृजिनप्राभृतभृतां
प्रतिप्रस्थानं ते श्रुतिनगरशृङ्गाटकजुषः ॥ ७० ॥

**கிலம் சேதோவ்ருத்தே: கிமிதமிதி விஸ்மேரபுவனம்**
**க்ருபே ஸிம்ஹக்ஷ்மாப்ருத் க்ருதமுகசமத்காரகரணம் ।**
**பரந்யாஸச்சந்நப்ரபலவ்ருஜிநப்ராப்ருதப்ருதாம்**
**ப்ரதிப்ரஸ்தாநம் தே ச்ருதிநகரச்ருங்காடகஜுஷ: ॥**

(பதவுரை) க்ருபே — தயையே, பரந்யாஸச்சந்நப்ரபல வ்ருஜிநப்ராப்ருதப்ருதாம் — சரணாகதி (பரத்தை ஒப்புவிக்

கிறது) என்கிற ஓர் ஆவரணத்தால் மேலே மூடப்பட்ட ப்ரபல மான பாபங்கள் என்னும் உபஹாரத்தைக் கொண்டுவருகிறவர் களை உத்தேசித்து, ச்ருதிநகரச்ருங்காடகஜுஷ: — வேத மென்னும் பட்டணத்தில் நாச்சந்தியில் நிற்கும், தே — உன்னுடைய, ப்ரதிப்ரஸ்தானம் — எதிர்கொண்டு வரவேற்பது, சேதோ வ்ருத்தே: — புத்தி வ்ருத்தியினுடைய, கிமிதம் கிலம் — இது என்ன ஓட்டை (மறதி), இதி — என்று, விஸ்மேயபுவநம் — ஆச்சர்யப்படும் உலகத்தை உடையதாயும், ஸிம்ஹக்ஷ்மா ப்ருத் க்ருதமுகசமத்காரகரணம் — வேங்கட மலை வித்வா னாகிய ஸ்ரீநிவாஸனுக்கு ஆச்சர்யத்தை உண்டாக்குவதாயும் (இருக்கிறது.)

"சரணாகதி (சுமையை அங்கீகரிக்கப் பிரார்த்திப்பது) என்ற ஆவரணத்தால் (மூடியால்) கொடுமையான ஏராள மான பாபம் என்ற உபஹாரத்தை மூடிவந்து நிற்பவரை உத்தேசித்து அதைப் பெற்றுக்கொள்ள நீ அவர்களை நோக்கிச் செல்வதானது "இது என்ன மனோவ்யாபாரத் திற்குச் சூன்யதை! இது என்ன மறதி!" என்று உலகத்திற்கும் ஸ்ரீநிவாஸனுக்கும் ஆச்சர்யத்தை உண்டு பண்ணுகிறது."

(தாத்பர்யம்) சரணாகதியின் பலம் நாம் செய்த கோடிக் கணக்கான பெருங் குற்றங்களை ஸர்வஜ்ஞனும் ஒருகாலும் மறதி என்பதே இல்லாதவனுமான ஈசுவரன அடியோடு அனுதரிக்கவேண்டும். நம்முடைய கோடிக்கணக்கான பாபங்களின் நினைப்பினால் நிறைந்திருக்கும் அவன் மனது அதையெல்லாம் அடியோடு மன்னித்து சூன்யமாகவேணும். தயையினிடத்தில் சரணாகதி செய்தவுடன் ஈச்வரனுடைய மனது சரணாகதனுடைய அபரிமிதமான பாபங்கள் விஷயத் தில் கிலமாகிறது. நன்றாய் நினைத்துக்கொண்டிருந்த எத்தனையோ கணக்கற்ற பாபங்கள் ஒரு க்ஷணத்தில் நம்மை அறியாமல் கழிந்துபோய் மறைந்து ஓடிவிட்டன என்று ஈச்வரனுக்கு ஆச்சர்யம் உண்டாகிறது. இது என்ன!

கிலமாயிற்றே மனது என்று அவனும் ஆச்சர்யப்படுகிறான். எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருக்கும் நித்யஸூரிகளும், முக்தர்களும் இப்படி ஈச்வரன் மனதுக்கு சூன்யதை ஏற்படுவதைக் கண்டு, இதென்ன ஆச்சர்யமென்று விஸ்மிதராகிறார்கள். வேதம் என்னும் பட்டணத்தில் நான்கு மார்க்கங்கள் உண்டு. அவரவர்கள் ருசிக்குத் தகுந்தபடி தர்மார்த்த காம மோக்ஷங்கள் என்கிற சதுர்வித புருஷார்த்தங்களையும் ஸம்பாதிக்கும் வழியை வேதம் காட்டுகிறது. இந்த நான்கு புருஷார்த்தங்களையும் வேதம் காட்டின உபாயத்தை அனுஷ்டிப்பதால் ஈச்வரனுடைய தயையினால் பெறவேண்டும். அவரவர்களுக்கு வேண்டிய புருஷார்த்தங்களை அளிப்பதற்காக தயாதேவி நான்கு புருஷார்த்த மார்க்கங்களும் சேரும் நாற்சந்தியில் எந்தப் புருஷார்த்தத்தைக் கோரி யார் வரப்போகிறார்களென்று ஸந்நத்தமாயிருக்கிறாள். மோக்ஷத்தை அபேக்ஷிக்கிறவன் சரணாகதி என்னும் வ்யாஜத்தை வைத்துக்கொண்டு அநந்தம் தன் பாபங்களையெல்லாம் மறைத்து சரணாகதி என்னும் தர்மத்தை மேலே வைத்து அதை உபஹாரமாகக்கொண்டு தயாதேவியின் ஸந்நிதிக்கு வந்து அதை ஸமர்ப்பிக்க ஆரம்பிக்கிறான். அந்த உபஹாரத்தைப் பெற்றுக்கொள்ள தயாதேவி அவனை நோக்கி முன்செல்கிறாள். இதென்ன ஆச்சர்யம்! கணக்கற்ற பாபங்களைச் சரணாகதி என்னும் ஒரு தர்மலேசத்தால் மூடிக்கொண்டு வந்தால் மூடப்பட்டிருக்கிற அபரிமித அதர்மங்கள் தெரியாமல்போய்விடுமா? முழுப்பூஷணிக்காயைச் சோத்தில் மறைக்கக்கூடுமா? தயாதேவி, சரணமடைகிறேன் என்னும் வார்த்தையைக் கேட்டு மகிழ்ந்து, பர்வதக் கணக்கான பாபங்களை அடியோடு பார்க்காமல் மறந்துவிடுகிறாளே! ஸர்வஜ்ஞனை ஈச்வரனும் உடனே ஒரு க்ஷணத்தில் அத்தனையும் கழித்துவிடுகிறானே! இப்படி ஆச்சர்யங்களைக் காட்டி இந்த தசகத்தை முடிக்கிறார். (70)

त्रिविधचिदचित्सत्तास्थेमप्रवृत्तिनियामिका
वृषगिरिविभोरिच्छा सा त्वं परैरपराहता ।
कृपणपरभृत्किङ्कुर्वाणप्रभूतगुणान्तरा
वहसि करुणे वैचक्षण्यं मदीक्षणसाहसे ॥ ७१ ॥

த்ரிவிதசிதசித்ஸத்தாஸ்தேம ப்ரவ்ருத்திநியாமிகா
வ்ருஷகிரிவிபோரிச்சா ஸா த்வம் பரைரபராஹதா ।
க்ருபணபரப்ருத் கிம்குர்வாண ப்ரபூதகுணாந்தரா
வஹஸி கருணே வைசக்ஷண்யம் மதீக்ஷணஸாஹஸே ॥

(பதவுரை) கருணே – தயையே, த்ரிவிதசிதசித் ஸத்தாஸ்தேம ப்ரவ்ருத்திநியாமிகா – நித்யர், முக்தர், ஸம்ஸாரிகள் என்ற மூவகை சேதனரின் ஸத்தை, ஸ்திதி ப்ரவ்ருத்திகளை நியமிப்பவளும், பரைரபராஹதா – பிறரால் தடுக்கமுடியாதவளும் க்ருபணபரப்ருத் கிங்குர்வாணப்ரபூத குணாந்தரா – பேதையான ப்ரபந்நனுடைய பாரத்தைச்சுமக்கும் உனக்கு ஊழியம்செய்யும் அரும்பெரும் மற்ற பகவத் குணங் களோடு கூடியவளும் வ்ருஷகிரி விபோ: வேங்கடேச னுடைய, இச்சா – இச்சையே ஸ்வரூபமான, ஸா – அந்த, த்வம் – நீ, மதீக்ஷண ஸாஹஸே – என்னைப்பார்க்கிறது என்கிற ஸாஹஸக்ருத்யத்தில் வைசக்ஷண்யம் – ஸாமர்த்யத்தை, வஹஸி – வஹிக்கிறாய்.

"கருணையே! மூன்றுவிதமான சேதனசேதனங் களுடைய ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திகளை நியமனம் செய்ப வளாயும், வேங்கடாசலபதியினுடைய திருவுள்ள ஸ்வரூப மாயும், பிறரால் தடுக்கக்கூடாதவளாயும், ஸர்வலோக ப்ரஸித்தமாயும், அநாதஜனங்களுடைய யோக க்ஷேம பாரத்தை பரிக்கிறவளாயும், பகவானுடைய மிகச்சிறந்த மற்ற குணங்கள் உனக்கு ஊழியம் செய்யப்பெற்றவளாயும், இருக்கும் நீ (மிகக்கொடிய) என்னையும் பார்க்கிறதென்கிற ஸாஹஸ வ்யாபாரத்தில் திறமையை வஹிக்கிறாய்."

(தாத்பர்யம்) இந்த எட்டாவது தசகத்தில் தயையின் ஸ்வரூபத்தையும் தன்மையையும் உபகார பரம்பரைகளையும் கூறுகிறார். தயையென்பது ஸ்ரீநிவாஸனுடைய இச்சையென்கிற ஒரு ஞானமாகும். அந்த இச்சையாவது பிறர் துக்கத்தைத் தீர்க்கவேண்டுமென்கிற ஆசை. இதுதான் தயையின் ஸ்வரூபம். ஸகல சேதநா சேதனங்களுடைய ஸ்வரூபம் ஸ்திதி ப்ருவ்ருத்தி இம்மூன்றும் பகவானுடைய இச்சாரூபமான தயையினால் நியமனம் செய்யப்படுகின்றன. ஸ்ரீநிவாஸனுடைய தயையெனும் இச்சையைப் பிறரொருவரும் தடுக்கவொண்ணாது. அகிஞ்சனர்களுடைய ஸகல பாரங்களையும் தயை சுமந்து நிர்வஹிக்கிறாள். அநந்யர்களாய் என்னை ஸர்வவிதத்தாலும் உபாஸனம் செய்பவர்களுடைய யோக க்ஷேமங்களை நான் சுமக்கிறேனென்று கீதையில் கண்ணன் வார்த்தை. தயை நம்முடைய பாரங்களைச் சுமப்பதற்கு கார்ப்பண்யம் இருந்தால் போதும். ஸ்ரீநிவாஸனுடைய ஞானசக்தி பல ஐச்வர்யாதி குணங்கள் தயையென்னும் குணத்திற்கு ஊழியக்காரராகி ஆச்ரிதரை ரக்ஷிக்கும் விஷயத்தில் தயையின் கட்டளைகளை நிறைவேற்றுகின்றன. இதெல்லாம் பெரிதல்ல கொடியனிலும் கொடியனான என்னை நோக்கி என் மீது உன் கடாக்ஷங்களை செலுத்துவதென்கிற ஸாஹஸமான வ்யாபாரத்தை நீ செய்கிறாயே என்று ஆச்சர்யப்படுகிறார். (71)

वृषगिरिपतेर्हृद्या विश्वावतारसहायिनी
क्षपितनिखिलावद्या देवि क्षमादिनिषेविता ।
भुवनजननी पुंसां भोगापवर्गविधायिनी
वितमसि पदे व्यक्तिं नित्यां बिभर्षि दये स्वयम् ॥ ७२ ॥

வ்ருஷகிரிபதேர் ஹ்ருத்யா விச்வாவதாரஸஹாயிநீ
க்ஷபிதநிகிலாவத்யா தேவி க்ஷமாதிநிஷேவிதா ।
புவநஜநநீ பும்ஸாம் போகாபவர்கவிதாயிநீ
விதமஸி பதே வ்யக்திம் நித்யாம் பிபர்ஷி தயே ஸ்வயம் ॥

(பதவுரை) தயே-தயையே, தேவி-தேவியே, வ்ருஷகிரிபதே: ஹ்ருத்யா-வேங்கடமலையரசன் மார்பில் வஸிப்பவளாயும் (ஹ்ருதயத்திலுள்ளவளாயும்) விச்வாவதார ஸஹாயிநீ – எல்லா அவதாரங்களிலும் துணையாயிருப்பவளாயும் (ஸஹாயம் செய்பவளாயும்) க்ஷபிதநிகிலாவத்யா– ஸமஸ்த பாபங்களையும் போக்குபவளாயும், க்ஷமாதி நிஷேவிதா-பூமிப்பிராட்டி முதலியவர்களால் ஸேவிக்கப்பட்டவளாயும் (பொறுமை முதலிய குணங்களோடு கூடியவளாயும்) புவநஜநநீ-உலகத்திற்குத்தாயாராயும் (உலகத்தை ஸ்ருஷ்டிப்பவளாயும்) பும்ஸாம்-ஜீவர்களுக்கு, போகாபவர்க-விதாயிநீ - போகத்தையும் மோக்ஷத்தையும் கொடுப்பவளாயும், விதமஸி பதே–ரஜோகுணம் தமோகுணமில்லாத பரமபதத்தில், ஸ்வயம் – தானாகவே, நித்யம் – நித்யமான, வ்யக்திம் – ஆவிர்பாவத்தை, பிபர்ஷி – வைத்துக்கொண்டிருக்கிறாய். (இங்கே தயையை லக்ஷ்மீ ஸ்வரூபம்போல் அனுஸந்தானம்.)

"விளையாடும் சீலத்தையுடைய தயாதேவியே! வேங்கடபதியினுடைய மனோஹரமான ப்ரியையாயும் (அவன் திருமார்பில் வசிப்பவளாயும்) அவனுடைய எல்லா அவதாரங்களுக்கும் காரணமாயும், (அவனவதரிக்கும் போதெல்லாம அவனோடு ஸஹசரிப்பவளாயும்) ஸகல தோஷங்களையும் போக்குபவளாயும் க்ஷமை முதலிய குணங்களாலே ஸேவிக்கப்பட்டவளாயும், (க்ஷமையென்னும் பூமி முதலிய பிராட்டிகளாலே உபசரிக்கப்பட்டவளாயும்) உலகத்துக்கெல்லாம் தாயாயும், ஜனங்களுக்கு போகமோக்ஷங்களைக் கொடுப்பவளாயும் தமோகுணலேசமில்லாத பரமபதத்தில் நித்யமான விக்ரஹத்தை உன்னுடைய ஸ்வேச்சையினால் தரிப்பவளாயும் இருக்கிறாய்"

(தாத்பர்யம்) இந்த சுலோகத்தில் தயாதேவிக்கும் லக்ஷ்மீ பிராட்டிக்கும் பொருந்தும்படியான விசேஷணங்களை அமைத்துத் தயையை வர்ணிப்பதால் லக்ஷ்மீ பிராட்டிதான்

தயையின் ஸ்வரூபம் என்பதைக் காட்டுகிறார். தயை என்னும் குணத்தை ஸ்தோத்ரம் செய்வதும், ஒவ்வொரு ச்லோகத்திலும் தயையை ஸம்போதனம் செய்து ஸம்பாஷணம் செய்வதும் தகுமோ? சேதனர்களை அல்லவோ கூப்பிட்டுப் பேசுவது உசிதமாகும். தயையை இப்படி ஸ்தோத்ரம் செய்வது விவேகக்ருத்யமாகாது என்று இப்படி ஆக்ஷேபங்கள் வரக்கூடியதை தயை எனபது லக்ஷ்மீ பிராட்டியே யொழிய வேறன்று என்றும், லக்ஷ்மீ பிராட்டி தயையின் மூர்த்தி என்றும் கூறுவதினால் பரிஹரிக்கிறார். தயாஸ்தோத்ரம் என்பது தயையே வடிவெடுத்ததுபோன்ற லக்ஷ்மீ தேவியின் ஸ்தோத்ரமானதால் தயையை இப்படி ஸ்தோத்ரம் செய்து அவளைக் கூப்பிட்டுப் பேசுவது அநுசிதமன்று. பகவானுடைய எல்லா அவதாரங்களிலும் பிராட்டியும் அந்தந்த அவதாரத்திற்குத் தக்கபடி வடிவுகளைப் பரிக்ரஹித்துக் கூட ஆவதரிக்கிறாள். எல்லா அவதாரங்களிலும விஷ்ணுவோடு ஸ்ரீயானவள் நழுவாமல் அநபாயினியாயிருக்கிறாள் என்கிற ஸ்ரீ விஷ்ணுபுராண வசனத்தை இங்கே நினைக்கிறார். பரமபதத்தில இவளுடைய ஆத்ய விக்ரஹம் நித்யமானது. (72)

**स्वयमुदयिनः सिद्धाद्याविष्कृताश्च शुभालया**
**विविधविभवव्यूहावासाः परं च पदं विभोः ।**
**वृषगिरिमुखेष्वेतेष्विच्छावधिप्रतिलब्धये**
**दृढविनिहिता निश्रेणिस्त्वं दये निजपर्वभिः ॥ ७३ ॥**

**ஸ்வயமுதயிநः ஸித்தாத்யாவிஷ்க்ருதாச்ச சுபாலயா**
**விவிதவிபவவ்யூஹாவாஸா: பரம் ச பதம் விபோ: ।**
**வ்ருஷகிரிமுகேஷ்வேதேஷ்விச்சாவதிப்ரதிலப்தயே**
**த்ருடவிநிஹிதா நிச்ரேணிஸ்த்வம் தயே நிஜபர்வபி: ॥**

(பதவுரை) தயே - தயையே, ஸ்வயமுதயிந: — ஸ்வயம் வ்யக்தரும, ஸித்தாத்யாவிஷ்க்ருதாச்ச - ஸித்தரானவர்க்கு ஸேவை ஸாதித்து ப்ரகாசமானவைகளுமான, சுபாலயா:-

திவ்ய தேசார்ச்சைகளும், வி.வித விபவவ்யூஹாவாஸா: — பலவிதமான அவதார விக்ரஹங்கள், வ்யூஹவிக்ரஹங்கள், ஹ்ருதயத்தில் வஸிக்கும் அந்தர்யாமி விக்ரஹங்களும், பரம் ச பதம் விபோ: — ப்ரபுவின் பரமப்ராப்யமான விக்ரஹமும், வ்ருஷகிரிமுகேஷு ஏதேஷு — வேங்கடமலை முதலிய இந்த திவ்ய தேசங்களில், இச்சாவதி ப்ரதிலப்தயே — மனோரத காஷ்டையை அடைவதற்கு, த்வம் — நீ, நிஜபர்வபி: — உன் சொந்த கணுக்களால், த்ருடவிநிஹிதா — கெட்டியாய் அமைக்கப்பட்ட, நிச்ரேணி: — ஏணி (ஆகிறாய்.)

"தயையே! ஸ்வயம் வ்யக்தரான விக்ரஹங்களுடன் கூடியதும், ஸித்தர் முதலியவர்களால் ப்ரகாசிக்கப்பட்டதாயும் உள்ள திவ்ய க்ஷேத்திரங்களிலும், அநேகவிதமான விபவாவதாரங்களுடையவும், வ்யூஹாவதாரங்களுடையவும் வாஸஸ்தானங்களிலும், உலகத்துக்கெல்லாம் ப்ரபுவாகிய பரவாஸுதேவனுடைய பரமபதத்திலும், திருமலை முதலிய இடங்களிலும் அபிமதமான புருஷார்த்தங்களை எல்லாம் அடைவதற்காக உன்னுடைய பர்வாக்களாலே கெட்டியாய்க் கட்டப்பட்ட ஏணியாகிறாய்."

(தாத்பர்யம்) ஸ்வயம் வ்யக்த க்ஷேத்ரங்களிலும் ஸித்தர்கள் உவப்பை ஆதரித்துப் பகவான் அர்ச்சாரூபியாய் ஸேவை ஸாதிக்கும் க்ஷேத்ரங்களிலும், பகவான் ஸௌலப்யகாஷ்டையை அவலம்பித்து நம்மையநுக்ரஹித்தருளுவது தயையின் ப்ரபாவம். இப்படியே விபவாவதாரங்களும் வ்யூஹாவதாரங்களும் தயையின் பெருமை. பரமபதத்தில் பகவான் ஸேவை ஸாதிப்பதும் தயையின் பெருமை. வேங்கடமலையில் ஸ்ரீநிவாஸன் ஸேவை ஸாதிப்பதும் தயையின் மஹிமை. பரமபதத்திற்குப் பிறகு வேங்கடமலையைக் கூறுவதால் திருமலை பரமபதத்திற்கும் மேற்பட்டதென்கிற அபிப்பிராயத்தை ஸூசனம் செய்கிறார். ஆச்ரிதர்கள் அவரவர்கள் ஆசைப்படும் புருஷார்த்தங்களை எல்லாம் அடைவிப்பதற்குத் தயையே தயாமயமான

கெட்டியான படிகளால் அமைக்கப்பட்ட த்ருடமான ஆகிருள். (73)

हितमिति जगद्दृष्ट्या क्लृप्तैरक्लृप्तफलान्तरै-
रमतिविहितैरन्यैर्धर्मायितैश्च यदृच्छया ।
परिणतबहुच्छद्मा पद्मासहायदये स्वयं
प्रदिशसि निजाभिप्रेतं नः प्रशाम्यदपत्रपा ॥ ७४ ॥

ஹிதமிதி ஜகத்த்ருஷ்ட்யா க்லுப்தைரக்லுப்தபலாந்தரை
ரமதிவிஹிதைரந்யைர்தர்மாயிதைச்ச யத்ருச்சயா ।
பரிணதபஹுச்சத்மா பத்மாஸஹாய தயே ஸ்வயம்
ப்ரதிசஸி நிஜாபிப்ரேதம் ந: ப்ரசாம்யதபத்ரபா ॥

(பதவுரை) பத்மாஸஹாயதயே - லக்ஷ்மீ ஸஹாயனுன ஸ்ரீநிவாஸனின் தயையே, ஹிதமிதி ஹிதமென்று ஜகத் த்ருஷ்ட்யா—உலக த்ருஷ்டிக்கு, க்லுப்தை: — கல்பித்துக் கொள்ளப்பட்ட ப்ராஸங்கிக ஸுக்ருதங்களைக் கொண்டும், அக்லுப்த பலாந்தரை: ஆநுஷங்கிக ஸுக்ருதங்களைக் கொண்டும், அமதி விஹிதை: — புத்தி பூர்வமல்லாத அஜ்ஞாத ஸுக்ருதங்களைக்கொண்டும், யத்ருச்சயா தர்மாயிதை:-யாத்ருச்சிக ஸுக்ருதங்களைக்கொண்டும், அந்யை:-ஸாமான்ய புத்தி மூலமான மற்ற ஸுக்ருதங்களைக் கொண்டும், பரிணத பஹுச்சத்மா—அநேக சாக்குகளை வைத்துக்கொண்டு, ஸ்வயம்—நீயாகவே, நிஜாபிப்ரேதம்-உன்னுலேயே எண்ணப்பட்டதை, ந:—எங்களுக்கு, திசஸி-கொடுக்கிருய்.

"பத்மாஸஹாய தயையே! உலகத்தார் நினைப்பது போல் ப்ரயோஜநத்தைக் கொடுக்குமென்று உத்தேசித்துச் செய்யப்பட்டதும், அந்தந்த புண்யகர்மததுக்கு ஏற்பட்டிருக்கும் ப்ரயோஜனத்தைத்தவிர ப்ரயோஜனத்தைத் துறப்பதினுலேயே மோக்ஷமார்க்கத்திற்கு உபயோகப்படக் கூடிய நிவ்ருத்தி கர்மம் என்னும் ஆகாரத்தை எண்ணுமல் செய்யப்பட்டதும், புத்திபூர்வகமல்லாமல் ஒரு புண்யம்

செய்யவேண்டுமென்கிற உத்தேசமில்லாமல் செய்யப் பட்டதும், செய்கிறவன் எண்ணுடலே யத்ருச்சையாய் தர்ம மாகப் பர்யவஸிப்பதுமான தர்மங்களை வ்யாஜங்களாக நீ கல்பித்துக்கொண்டு ரக்ஷணத்திற்கு யோக்யமேயல்லாத என்போன்றவர்களை ரக்ஷிப்பதில் உண்டாகக்கூடிய வெட்கத்தைத் தவிர்த்து நீயாகவே உன் மனதில் எங்களுக்கு ஹிதமென்று படும் புருஷார்த்தத்தைக் கொடுக்கிறாய்.''

(தாத்பர்யம்) மோக்ஷோபாயங்களில் இறங்குவதற்கு நாம் புத்திபூர்வகமாயும் ப்ரயோஜனங்களை உத்தேசியாமலும் ஸுக்ருதங்களைச் செய்யாமலிருந்தாலும் அக்ஞாதமாகவும், ப்ராஸங்கிகமாயும் செய்யும் ஸுக்ருதங்களை வ்யாஜங்களாகக் கல்பித்துக்கொண்டு தயாதேவி நமக்கு மோக்ஷமார்க்கத்தில் ருசியை உண்டாக்கி மோக்ஷோபாயங்களில் நம்மை மூட்டு கிருள். கொஞ்சமேனும் நம்மிடம் யாதொரு மோக்ஷயோக்ய தையும் இல்லாமல் நம்மைக் காப்பாற்ற முயற்சி செய்வது வெட்கத்தைக் கொடுக்கக்கூடியது. அந்த வெட்கத்திற்குப் பரிஹாரமாக நாம் அறியாமற்செய்த ஸுக்ருதங்களையும் ஒரு பொருட்டாக எண்ணி அதை நம்மைக் காப்பாற்றுவதற்கு வியாஜமாக ஏற்படுத்திக்கொள்ளுகிருள். (74)

अतिविधिशिवैरैश्वर्यात्मानुभूतिरसैर्जना-
नहृदयमिहोपच्छन्द्यैषामसङ्गदशार्थिनी ।
तृषितजनतातीर्थस्नानक्रमक्षपितैनसां
वितरसि दये वीतातङ्का वृषाद्रिपतेः पदम् ॥ ७५ ॥

**அதிவிதிசிவைரைச்வர்யாத்மாநுபூதிரஸைர்ஜநாந்**
**அஹ்ருதயமிஹோபச்சந்த்யைஷாமஸங்கதசார்த்திநீ ।**
**த்ருஷிதஜநதாதீர்த்தஸ்நாநக்ரமக்ஷபிதைநஸாம்**
**விதரஸி தயே வீதாதங்கா வ்ருஷாத்ரிபதே: பதம் ॥**

(பதவுரை) தயே-தயையே, அதிவிதிசிவை:- (விதி) ப்ரஹ்மா, சிவன் இவர்களுக்கு மேற்பட்ட, ஐச்வர்யாத்மாநு பூதி ரஸை:-ஐச்வர்ய கைவல்ய ரஸாநுபவங்களால், ஏஷாம்

இவர்களுடைய, அஸங்க தசார்த்தி-பற்றில்லாத அவஸ்தை வரவேண்டுமென்று கோரி, ஜநாந்-ஜனங்களை, அற்றாநயம் தெரியாமல், இஹ-இங்கே, (பெருமாளிடம்) உபச்சந்த்ய ஆசைகாட்டி இழுத்துவந்து, க்ஷமிக ஜநதா தீர்த்த ஸ்நாந க்ரம க்ஷபிதைநஸாம் — விடாய்ப்பட்டவர் (புண்ய தீர்த்தத்தில்) விடாய் தீர ஸ்நானம் செய்வதால் (அறியாமலேயே) பாபம் கழிவதுபோல் அவர்களின் பாபம் நீங்கச்செய்து, வீதாதங்கா-நீ வெட்கப்படாமல் (கொடுப்பதற்கு) இடத்தைச் செய்துகொண்டு ஸங்கோச மில்லாமல், வ்ருஷாத்ரிபதே:- திருமலை அரசனுடைய, பதம்-திருவடியை (ஸ்தானத்தை) விதரஸி- அளிக்கிறாய்.

"தயையே! ப்ரும்ம ருத்ராதிகளுக்கும் மேல்பட்ட தான ஐச்வர்ய கைவல்ய அனுபவங்களை ப்ராணிகளுடைய ஸந்தோஷத்திற்காகக் கொடுப்பதுபோல் காட்டி அவர்களை ஆவர்ஜனம் செய்து தாபத்தைத் தீர்த்துக்கொள்வதற்காக புண்யநதியில் ஸ்நானம் செய்வதால் பாபம் கழிவதுபோல் அவர்கள் எண்ணமலிருந்தும் அவர்களுக்கு ஐச்வர்ய கைவல்யாதி போகங்களிலும் வைராக்யத்தை ஏற்படுத்திவிட்டு நிர்பயமாய் ஸ்ரீநிவாஸனுடைய திருவடியென்னும் உத்தம பதத்தை அளிக்கிறாய்"

(தாத்பர்யம்) ஸ்ரீநிவாஸனுடைய திருவடிலாபம் ஸர்வோத்தமமான புருஷார்த்தம். ப்ரயோஜநாந்தரங்களைத் துச்சமென்று அடியோடு தள்ளி ஸம்பூர்ணமான வைராக்யம் நிஷ்பந்நமானாலொழிய அவன் திருவடியை அடைய அதிகாரமில்லை. யோக்யதை இல்லாதவர்களுக்கு அவன் திருவடியை அடைவிக்கக் கூசுவது ந்யாயம். இந்த சங்கையை தீர்த்துக்கொள்வதற்காக மெள்ள மெள்ள நம்மைத் தயாதேவி வைராக்ய மார்க்கத்தில் திருப்புகிறாள். கங்கை முதலிய புண்யநதிகளில நம்முடைய தாபம் தீர்வதற்கென்று மட்டும் நாம் அவகாஹனம் செய்தாலும் புண்ய தீர்த்தத்திற்குள்ள மஹிமையின் பலத்தால் நாம எண்ணாமலே நம்முடைய பாபம் கழிகிறது. அப்படியே நமக்கு

உயர்ந்த பலன்களைக் கொடுத்து நம்மை ஆவர்ஜனம்செய்து மெள்ள மெள்ள அந்தப் பலன்களிலும் பற்று அறும்படி தயாதேவி செய்விக்கிருள். (75)

वृषगिरिसुधासिन्धौ जन्तुर्दये निहितस्त्वया
भवभयपरीतापच्छित्त्यै भजन्नघमर्षणम् ।
मुषितकलुषो मुक्तेरग्रेसरैरभिपूर्यते
स्वयमुपनतैः स्वात्मानन्दप्रभृत्यनुबन्धिभिः ॥ ७६ ॥

வ்ருஷகிரிஸுதாஸிந்தௌ ஜந்துர்தயே நிஹிதஸ்த்வயா
பவபயபரீதாபச்சித்த்யை பஜந்நகமர்ஷணம் ।
முஷிதகலுஷோ முக்தேரக்ரேஸரைரபிபூர்யதே
ஸ்வயமுபநதை: ஸ்வாத்மாநந்தப்ரப்ருத்யநுபந்திபி: ॥

(பதவுரை) தயே–தயையே, வ்ருஷகிரி ஸுதாஸிந்தௌ–வேங்கடமலையிலுள்ள அம்ருத ஸமுத்ரத்தில், த்வயா–உன்ஞலே, நிஹித:– சேர்க்கப்பட்ட ஜந்து: – பிராணியானவன், பவபய பரீதாபச்சித்த்யை – ஸம்ஸாரபயம் தாபம் இவை நீங்கும்படி, அகமர்ஷணம்–பாபம் தொலையும் ஸ்நானத்தை அடைந்து, முஷிதகலுஷ:– பாபம் நீங்கினவனுய், ஸ்வயமுபநதை:– தானே வரும், முக்தே :– மோக்ஷத்திற்கு, அக்ரேஸரை :- முன்புள்ளதான, ஸ்வாத்மாநந்த ப்ரப்ருத்யநுபந்திபி:– ஸ்வஸ்வரூபாநந்தம் முதலிய (போகங்களால்) அபிபூர்யதே–பூரிக்கப்படுகிருன்.

"தயையே! ஸம்ஸாரபயமென்னும் தாபத்ரயங்களைத் தீர்ப்பதற்காகத் திருமலையிலிருக்கும் ஸ்ரீநிவாஸனென்னும் அம்ருத ஸமுத்திரத்தில் சேர்க்கப்பட்டு ஸர்வ பாபங்களையும் போக்கக்கூடிய சரணுகதியென்னும் அகமர்ஷண ஸ்நானத்தை அடையப்பெற்றுக் கலுஷங்களெல்லாம் நீங்கி மோக்ஷத்திற்கு முன்னடியாக வலியவரும் ஆத்மாநுபவம் முதலிய பரிகரங்களாலே பூரிக்கப்படுகிருன்".

(தாத்பர்யம்) தயாதேவி நம்மை முக்தியோக்யர்களாகச் செய்விக்கத்தானே வலிய நமக்குச் செய்யும் உபகார பரம்

பரைகளை வர்ணித்துக்கொண்டு வருகிருர். சரணுகதி யென்பது நம்முடைய அநந்தகோடி பாபங்களுக்கும் ப்ராயச்சித்தமாகும். மோக்ஷத்தையும் அளிக்கும். திருமலையிலெழுந்தருளி இருக்கும் ஸ்ரீநிவாஸன் ஓர் அம்ருத ஸமுத்ரமாவார். வெயிற்காலத்தில் ப்ரசண்ட ஸூர்ய தாபத்தினால் நிதாந்த தப்தரானவர் குளிர்ந்த மடுவிலே இறங்கி ஆழ்ந்து தாபம் தீர்ந்து குளிர்ச்சி அடைவதுபோல் ப்ரஹ்மமென்னும் குளிர்ந்த ஜலாசயத்தில் ப்ரவேசித்து ஆழ்ந்து மகிழ்கிறேன் என்கிற ப்ரமாண வசனத்தை அனுஸரித்து இங்கே வர்ணிக்கிருர். ப்ரஹ்மத்தில் ஒடுங்கவதென்னும் சரணுகதி உபாயத்திலும் முன் ச்லோகங்களில் வர்ணித்த க்ரமமாக தயை தானுகவே சிற்சில வ்யாஜங்களைக் கல்பித்துக்கொண்டு மோக்ஷமார்க்கத்தில் நம்மைத் திருப்பி மோக்ஷத்திற்கு உபாயமான சரணுகதியில் நாம் இழியும்படி செய்விக்கிருள். மோக்ஷத்தில் ருசியுண்டாகி அந்த வழியில் இறங்கி மோக்ஷோபாயமான சரணுகதியின் அனுஷ்டானத்திற்குப் பிறகு இந்த லீலா விபூதியில் உள்ளகாலத்தில் தன்னுடைய ஸ்வரூபத்தின் ஸ்வாபாவிகமான ஆனந்தம் பகவதநுபவ பரிவாஹமான பகவத் கைங்கர்யங்களின் ஆனந்தம் முதலிய ஸுகங்கள் மோக்ஷானந்தம் வருவதற்குமுன்பு இவனுடைய அநுபவத்திற்குக்கிடைக்கின்றன. (76)

अनितरजुषामन्तर्मूलेऽप्यपायपरिप्लवे
कृतविदनघा विच्छिद्यैषां कृपे यमवश्यताम् ।
प्रपदनफलप्रत्यादेशप्रसङ्गविवर्जितं
प्रतिविधिमुपाधत्से सार्धं वृषाद्रिहितैषिणा ॥ ७७ ॥

**அநிதரஜுஷாமந்தர்மூலேzப்யபாயபரிப்லவே**
**க்ருதவிதநகா விச்சித்யைஷாம் க்ருபே யமவச்யதாம் ।**
**ப்ரபதநபலப்ரத்யாதேச ப்ரஸங்கவிவர்ஜிதம்**
**ப்ரதிவிதிமுபாதத்ஸே ஸார்த்தம் வ்ருஷாத்ரி ஹிதைஷிணு ॥**

(பதவுரை) க்ருபே—தயையே, அநிதரஜுஷாம் — இதர ப்ரயோஜனத்தையும் இதர ஸத்வத்தையும் பற்ருத

ப்ரபந்நருக்கு, அந்தர்மூலே-புத்திமூலமான (தெரிந்துசெய்யும்) அபாயபரிப்லவே அபி-குற்றமென்னும் கெடுதி நேரிடும் பொழுதும், க்ருதவித்—செய்த ப்ரபத்தியை ஓர் பேருதவி யென்று நினைத்து க்ருதஜ்ஞையாய், அநகா – குற்றத்திற்கு சிக்ஷிப்பதென்பதைக் கைப்பற்ருமல், ஏஷாம்-இவர்களுக்கு யமவச்யதாம் விச்சித்ய - (நிர்யாண காலத்தில்) யமனுக்கு வச்யமாகும் ஆபத்தைத்தொலைத்து, வ்ருஷாத்ரிஹிதை ஷிணா-வேங்கடமலையிலுள்ள ஹிதைஷியான (ஹிதத்தை விரும்பும்) பெருமாளோடு ஸார்தம்-கூட(ச்சேர்ந்து) ப்ரபதந பலப்ரத்யாதேசப்ரஸங்க விவர்ஜிதம்-ப்ரபத்திக்கு பலமாக ஸங்கல்பிக்கப்பட்ட மோக்ஷத்திற்குத் தடைக்கு இடமே இல்லாதபடி, ப்ரதிவிதிம்—ப்ராயச்சித்தத்தை (மறுபடியும் சரணமடைவது முதலியதை), உபாதத்ஸே ஏற்படுத்துகிருய்.

" இதர தெய்வங்களையும் ப்ரயோஜநாந்தரங்களையும் பற்ருமல் உன்னையே சரணம் பற்றியவருக்கு ப்ராரப்த கர்ம வசத்தால் புத்தி பூர்வகமான பாபங்கள் நேர்ந்தாலும் இவர்கள் பண்ணின சரணாகதியை நீ மறவாமல் கோபலேச மில்லாமல் அவர்கள் அபராதத்திற்காக வரக்கூடிய யமவச்யதையைத்தடுத்து அவர்கள் சரணாகதிக்குப்பலமான மோக்ஷத்திற்கு யாதொரு விக்நமும் வராமல் இருக்கும்படி திருமலையில் எழுந்தருளியிருக்கும் ஹிதைஷியான ஸ்ரீநிவாஸ னுடன் கலந்துகொண்டு அந்த பாபங்கள் கழிவதற்கு வேண்டிய மறுபடியும் ப்ரபதநம் செய்தல் முதலிய ப்ராயச் சித்தத்தைச் செய்விக்கிருய் "

(தாத்பர்யம்) பகவானுக்கு ப்ராதிகூல்யத்தை ஒருகாலும் ஆசரிப்பதில்லை என்று உறுதியாக ஸங்கல்பித்துக்கொண்டு சரணாகதி அனுஷ்டானம் செய்தவர்கள், பிறகு பகவ தாஜ்ஞைக்கு விரோதமாகத் தெரிந்து பாபம் செய்ய ந்யாயமே இல்லை. தெரியாமற்செய்யும் பாபங்கள் ஒட்ட மாட்டா. தெரிந்து ஒருகால் பாபங்கள் செய்ய நேரிட்டால் அந்த பாபத்திற்குப் பலமாக யமதர்மராஜருடைய நாட்டில்

சிறைப்படுவதற்கு ஹேதுவாகக் கூடுமாதலால், அந்த பாபங்களை ப்ராயச்சித்தம் முதலியதால் தொலைத்துவிடுவதற்கு வேண்டிய உபாயத்தை ஸ்ரீநிவாஸனும் தயாதேவியும் கலந்து ஏற்பாடு செய்கிறார்கள், புத்தி பூர்வமாகச்செய்த பாபங்களுக்கு மறுபடியும் ப்ரபதநம் செய்வது ப்ராயச்சித்தமாகும். லகுவான தண்டனையினாலும் அந்த பாபங்கள் கழியும். சரணாகதனுடைய ரக்ஷணத்தின் பாரத்தை ஸ்ரீநிவாஸனும் தயாதேவியும் ஏற்றுக்கொண்டுவிட்டபடியால் ப்ரபந்நர் கோரினபடி இந்த தேஹத்தின் முடிவிலேயே மோக்ஷத்தை அளிப்பது அவர்கள் பொறுப்பாய் விடுகிறது அதனால் அதற்கு விக்நமாகக் கூடிய பாபங்களெல்லாம் கழியும்படியான வழியை அவர்களே தேடுகிறார்கள். (77

क्षणविलयिनां शास्त्रार्थानां फलाय निवेशिते
सुरपितृगणे निर्वेशात्प्रागपि प्रलयं गते ।
अधिगतवृषक्ष्माभृन्नाथामकालवशंवदां
प्रतिभुवमिह व्याचख्युस्त्वां कृपे निरुपप्लवाम् ॥ ७८ ॥

**க்ஷணவிலயிநாம் சாஸ்த்ரார்த்தாநாம் பலாய நிவேசிதே**
**ஸுரபித்ருகணே நிர்வேசாத் ப்ராகபி ப்ரளயம் கதே ।**
**அதிகதவ்ருஷக்ஷ்மாப்ருந்நாதாமகாலவசம்வதாம்**
**ப்ரதிபுவமிஹ வ்யாசக்யுஸ்த்வாம் க்ருபே நிருபப்லவாம் ॥**

க்ருபே - தயையே! க்ஷணவிலயிநாம்- ஸ்வல்ப க்ஷணத்திற்குள் நின்றுபோகிற, சாஸ்த்ரார்த்தாநாம் புண்யகர்மங்களுடைய பலாய-பலன்களைக் (கொடுப்பதற்காக), நிவேசிதே - ஏற்படுத்தப்பட்டிருக்கிற, ஸுரபித்ருகணே-தேவதைகள் பித்ருக்களின் கணங்கள், நிர்வேசாத் ப்ராகபி - புண்யகர்மாக்களின் அநுபவத்திற்கு முன்பே, ப்ரளயம் கதே-ப்ரளயத்தில் அழிந்துபோன பிறகும், அகால வசம்வதாம் - காலத்திற்கு உட்படாதவளும் (காலத்தால் அழிவடையாதவளும்). நிருபப்லவாம்-யாதொரு உபத்ரவமடையாதவளும், அதிகதவ்ருஷக்ஷ்மாப்ருந்நாதாம் — வேங்

கடமலை அரசனை ஆச்ரயித்துக்கொண்டிருக்கும், த்வாம்-உன்னை, இஹ-இந்த விஷயத்தில் (தேவபித்ருகணத்திற்குப் பதிலாக முன்செய்த புண்யங்களுக்குப் பலன் கொடுக்கும் விஷயத்தில்). ப்ரதிபுவம்-பதிலதிகாரியாக, வ்யாசக்யு:-(பூர்வர்கள்) பணித்தார்கள்.

"க்ருபையே! க்ஷணகாலத்தில் நாசமடையக்கூடிய யாகம் முதலான ஸுக்ருத கர்மங்களின் பலத்தைக்கொடுப்பதற்காக ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் பித்ருக்கள் தேவர்கள் முதலியவர்களின் கூட்டம் அந்தக் கர்மங்களினுடைய பலத்தின் அனுபவத்திற்கு முன்னமே ப்ரளயமடைந்தபோதிலும், காலத்திற்கு வசப்படாதவளாயும் ஸ்ரீநிவாஸனை ஆச்ரயித்தவளாயும் ஒருகாலும் அழிவில்லாதவளாயும் மாறுதலில்லாதவளாயும் உள்ள உன்னை அவர்களுடைய ஸ்தானத்தில் பதிலாய் இருப்பவளாக சாஸ்திர மறிந்தவர்கள் கூறுகிறார்கள்."

(தாத்பர்யம்) யாகம், தானம், ஹோமம், அர்ச்சனை முதலிய புண்ய கர்மங்களுக்கு ஸ்வர்க்காதி பலன்கள் உண்டு. அந்தப் பலன்கள் சிலகாலம் கழித்துக் கிடைக்கக்கூடியன. பலம் கிடைக்கிறவரையில் நாம் செய்யும புண்யகர்மங்கள் நிற்கமாட்டா. அந்தக் கர்மங்களை அனுஷ்டித்த உடனேயே அவைகள் ஒழிந்துபோம். அவைகள் க்ஷண காலத்தில் ஓடிப்போவதால் யார் ஸ்திரமாக இருந்து அந்தந்த புண்ய கர்மங்களின் பலங்களைக் கொடுப்பர்? புண்ய பலம் கைகூடுவதற்கு முன் இந்த தேவபித்ருகணங்களும் ப்ரளயமடைந்து இல்லாமற்போனால் அவர்கள் ஸ்தானத்தில் தயாதேவி இருந்துகொண்டு அந்தந்தப் பலங்களைச் சேர்ப்பிப்பாள். (78)

त्वदुपसदनादद्य श्वो वा महाप्रलयेऽपि वा
वितरति निजं पादाम्भोजं वृषाचलशेखरः ।
तदिह करुणे तत्तत्क्रीडातरङ्गपरम्परा-
तरतमतया जुष्टायास्ते दुरत्ययतां विदुः ॥ ७९ ॥

**த்வதுபஸதநாதத்ய ச்வோ வா மஹாப்ரளயேऽபி வா**
**விதரதி நிஜம் பாதாம்போஜம் வ்ருஷாசலசேகர:।**
**ததிஹ கருணே தத்தத்க்ரீடாதரங்கபரம்பரா**
**தரதமதயா ஜுஷ்டாயாஸ்தே துரத்யயதாம் விது:॥79॥**

(பதவுரை) கருணே-தயையே! த்வதுபஸதநாத்-உன்னைச் சரணமாகப் பணிந்தால், அத்ய வா-இன்றேயாவது ச்வோ வா-நாளையாவது- மஹாப்ரளயேऽபி வா-மஹாப்ரளய மாறுலும், வ்ருஷாசலசேகர:- வேங்கடமலைக்கு சிரோபூஷணமான (பெருமாள்) நிஜம்-தன்னுடைய, பாதாம்போஜம்-திருவடிக்கமலத்தை, விதரதி-அளிக்கிருர். தத்-ஆகையால், இஹ-இந்த விஷயத்தில், தத்தத்க்ரீடாதரங்க பரம்பராதரதமதயா-அந்தந்த பற்பல விளையாட்டுகளின் தாரதம்யங்களோடு, ஜுஷ்டாயா:- கூடிய, தே - உன்னுடைய (உன்னை), துரத்யயதாம்-தாண்டக்கூடாமையை, விது:-அறிந்தார்கள் (பெரியோர்கள்).

"கருணையே! உன்னை நாங்கள் ஆச்ரயிப்பதாலே ஸ்ரீனிவாஸன் இன்றைக்கோ நாளைக்கோ மஹாப்ரளயத்திலோ தன் திருவடித்தாமரையை அளிக்கவே அளிப்பான். ஆகையால் பெரியோர்கள் இந்த ரக்ஷண விஷயத்தில் அலைகளுடைய வரிசைகள்போன்ற முன் பின் விளையாட்டுகளை உடைய உன்னை ஒருவரும் தடுக்க முடியாதென்று நிச்சயம் செய்கிருர்கள்."

(தாத்பர்யம்) தயையினிடத்தில் சரணுகதி செய்தவர்களுக்கு பகவானுடைய சரணகமலங்கள் கிடைப்பதென்கிற பலம் ஒருகாலும் தவிராதென்கிற நிச்சயமான விச்வாஸத்தை வெளிப்படுத்துகிருர். இன்றோ அல்லது நூறு வருஷம் கழித்தோ ப்ராணிகளுக்கு ம்ருத்யு வருவது நிச்சயம் என்ருர் வஸுதேவர் கம்ஸனிடத்தில். பிறந்தவனுக்கு ம்ருத்யு நிச்சயம் என்ருர் கீதையில் கண்ணன். இங்கே ஸ்ரீநிவாஸனுடைய தயையை ஆச்ரயித்தவர்களுக்கு ம்ருத்யுவெனனும் ஸம்ஸாரம் நாசமடைவது நிச்சய

மென்று வேடிக்கையாகக் காட்டுகிருர். தன்னுடைய மாயை துரத்யயையானது என்று கீதையில் கண்ணன் கூறிஞர். அந்த மாயையையும் தயா தேவி அடியோடு துலைப்பதால் தயையை துரத்யயை என்று இங்கே வேடிக்கையாய் வர்ணிக்கிருர். மாயையைத் தாண்டுவது நமக்குக் கஷ்டம். பகவானை சரணமடைந்தாலல்லது மாயையைத் தாண்டவொண்ணுது. பகவானுடைய தயையைப் பகவான்கூட, உல்லங்கனம் செய்யமுடியாது. (79)

प्रणिहितधियां त्वत्संपृक्ते वृषाद्रिशिखामणौ
प्रसृमरसुधाधाराकारा प्रसीदति भावना ।
दृढमिति दये दत्तास्वादं विमुक्तिवलाहकं
निभृतगरुतो निध्यायन्ति स्थिराशयचातकाः ॥ ८० ॥

ப்ரணிஹிததியாம் த்வத்ஸம்ப்ருக்தே வ்ருஷாத்ரி சிகாமணௌ
ப்ரஸ்ருமரஸுதாதாராகாரா ப்ரஸீததி பாவநா ।
த்ருடமிதி தயே தத்தாஸ்வாதம் விமுக்திவலாஹகம்
நிப்ருதகருதோ நித்யாயந்தி ஸ்திராசயசாதகா: ॥ (80)

(பதவுரை) தயே—தயையே, த்வத்ஸம்ப்ருக்தே-உன்னோடு த்ருடமாக ஸம்ச்லிஷ்டரான, வ்ருஷாத்ரிசிகாமணௌ திருவேங்கடவனென்னும் சூடாமணியினிடத்தில், ப்ரணிஹிததியாம்-சித்தத்தை த்யானத்தில் நிலைநிறுத்துபவர்களுக்கு, ப்ரஸ்ருமர ஸுதாதாராகாரா-பெருகும் அம்ருத தாரைக்கு ஒப்பாக, பாவநா—த்யானமானது, ப்ரஸீததி—தெளிவாயிருக்கும். இதி-இப்படி, தத்தாஸ்வாதம்-இன்ப ரஸச் சுவையைத் தரும். விமுக்தி வலாஹகம்—மோக்ஷத்தை வர்ஷிக்கும் மேகத்தை (பெருமாளை). நிப்ருதகருத:—பறந்து ஓடாமல் (இறகுகளை அசங்காமல் ஒடுக்கிக்கொண்டு) ஸ்திராசயசாதகா :- ஐகாந்த்யத்தை உடைய சாதகப்பக்ஷிகள், த்ருடம்—த்ருடமாக, நித்யாயந்தி—தர்சநஸமாநாகாரத்யானத்தில் பார்க்கிருர்கள்,

"தயையே! உன்னோடு ஸம்ச்லிஷ்டரான ஸ்ரீநிவாஸனிடம் மனதை நிறுத்தி இடைவிடாமல் த்யானம் செய்பவர்க்கு பெருகும் அமிர்த தாரைபோன்ற த்யானதாரை தெளிவாக ப்ரவஹிக்குமென்பது திண்ணம். இப்படி த்யானம் செய்கிறவருக்கு மேலும் மேலும் த்யானச் சுவையைப் பொழியும் மோக்ஷவர்ஷுகமான பகவானென்னும் திருமலை மேகத்தை ஸ்திரமான சித்தமுடைய சாதக பக்ஷிகள்போன்ற பரமைகாந்திகள் தங்கள் பக்ஷங்களை சலிக்காமல் வைத்துக்கொண்டு த்யானம் பண்ணுகிறார்கள்."

(தாத்பர்யம்) தயை செய்யும் உபகாரங்களை தேன் மழை பொழிவதோடு முடிக்கிறார். 'தேனும் பாலும் கன்னலும் அமுது மொத்தே' என்று இனிப்பேயாயிருக்கும் பகவதனுபவம். அதில் ஆழ்வார்களுக்கு உள்ள நாளாவும் மதுர மதுரமான பகவதனுபவமும் அதனினிப்பை ஆஸ்வாதனம் செய்வதுமே பாகவதர்களுக்கு ஆத்ம யாத்திரையாயிருக்கும். அவ்வனுபவத்தின் இனிமையை அம்ருத தாராரூபமென்றும் சுவையைத் தருவதென்றும் இங்கே தம்மனுபவத்தால் பேசுகிறார். முதலில லக்ஷ்மீப் பிராட்டியையே தயை என்று கூறியதை இங்கே நினைக்கவேணும். தயையோடு கூடிய திருவேங்கடமுடையானை தயானம் செய்வதென்றால் தயா மூர்த்தியான லக்ஷ்மியோடு கூடிய ஸ்ரீநிவாஸனுடைய த்யானமேயாகும். ரகுவம்சத்தில் முதல் ச்லோகத்தில் பார்வதீ பரமேச்வரர்களுடைய சேர்த்தியை 'ஸம்ப்ருக்தௌ' என்கிற பதப்ரயோகத்தால் மஹாகவி நிருபணம் செய்ததை அனுசரித்து இங்கேயும் தயையோடு ஸம்ப்ருக்தனை வேங்கடபதி என்று வர்ணிக்கிறார். பரமைகாந்திகளைச் சாதக பக்ஷிகளுக்கு ஒப்பிடுவது வழக்கம். சாதகத்திற்கு இரண்டு பக்ஷங்கள் இருப்பதுபோல பரமைகாந்திகளுக்கும் ஞானம் கர்மம் என்கிற இரண்டு பக்ஷங்கள் உண்டு. தன்னுடைய இரண்டு பக்ஷங்களையும் நிச்சலமாய் வைத்துக்கொண்டு விஷ்ணுபதம் என்னும் ஆகாசத்தில் மேகத்தை அண்ணாந்து பார்த்திருப்பதுபோல் பரமை

காந்திகளும் சலிக்காத ஜ்ஞானகர்மங்களென்கிற இரண்டு இரக்கைகளுடன் ஸ்ரீநிவாஸனென்னும் திருமலைமேலுள்ள காளமேகத்தையே அண்ணாந்து பார்த்திருப்பார். (80)

कृपे विगतवेलया कृतसमग्रपोषैस्त्वया
कलिज्वलनदुर्गते जगति कालमेघायितम् ।
वृषक्षितिधरादिषु स्थितिपदेषु सानुप्लवै-
र्वृषाद्रिपतिविग्रहैर्व्यपगताखिलावग्रहैः ॥ ८१ ॥

**க்ருபே விகதவேலயா க்ருதஸமக்ரபோஷைஸ்த்வயா**
**கலிஜ்வலநதுர்கதே ஜகதி காளமேகாயிதம் ।**
**வ்ருஷக்ஷிதிதராதிஷு ஸ்திதிபதேஷு ஸாநுப்லவை:**
**வ்ருஷாத்ரிபதிவிக்ரஹைர்வ்யபகதாகிலாவக்ரஹை: ॥**

(பதவுரை) க்ருபே—தயையே, கலிஜ்வலநதுர்கதே—கலியென்னும் நெருப்பால் ஸங்கடப்படும், ஜகதி—உலகத்தில் விகதவேலயா-கரைபுரண்ட. த்வயா—உன்னால், க்ருதஸமக்ரபோஷை:—பரிபூர்ணமாக போஷிக்கப்பட்டதும், வ்யபகதாகிலாவக்ரஹை:-அநாவ்ருஷ்டி (மழையில்லாமை என்னும்) துர்பிக்ஷத்தை யெல்லாம் போக்குவதும், வ்ருஷக்ஷிதிதராதிஷு—வேங்கடமலை முதலிய, ஸ்திதிபதேஷு-ஸ்தான விசேஷங்களில், ஸாநுப்லவை: தொடர்ச்சிகளோடுகூடிய வ்ருஷாத்ரிபதிவிக்ரஹை:—வேங்கடமலையரசனின் திவ்யதிரு மேனிகளால், தவயா காளமேகாயிதம்-உன்னுடைய காளமேகம் போன்ற இருப்பு.

"க்ருபையே! உலகத்தைத் தாங்கும் உன்னால் மழையில்லாமை என்கிற அநாவ்ருஷ்டியைப் போக்குவதும், திருமலை முதலிய இருப்பிடங்களில் இருப்பதும், மேகத்திற்குத் துணையான காற்று மின்னல் முதலிய ஸஹகாரிகள் போல் அனந்த கருடர்கள் முதலிய அர்ச்சா விக்ரஹங்களோடு கூடியதும், ஸமஸ்த லோகத்தையும் போஷிப்பதுமான ஸ்ரீநிவாஸனுடைய அர்ச்சா விக்ரஹங்களாகிய கார்

மேகங்களாலே கலி என்னும் நெருப்பினுல் எரிக்கப்படு இவ்வுலகத்தில் காளமேகங்களாலே போல ரக்ஷணு ஏற்படுகிறது."

(தாத்பர்யம்) இந்த தசகத்தில் பகவானுடைய தசா தாரங்களும் வர்ணிக்கப்படுகின்றன. அவதாரங்கள் உலக தைக்கார்க்க தயையினுல் செய்யப்படுகின்றன. பூமியி அவதாரம் செய்வதற்கு முன்பு மத்தியில் திருமலைக்கு எழுந்தருளி அங்கிருந்து பூமியில் இறங்கி அவதாரங்க செய்வதாக இங்கே அனுபவம். இந்த பத்து ச்லோகா களும் 'ப்ருத்வீ' என்கிற வ்ருத்தத்தில் அமைக்கப்பட்ட 'ப்ருத்வீ' என்னும் பூமியில் தான் அவதாரங்கள் செய்ய படுவதால் அந்த வ்ருத்தத்தினுல் அவதார விஷயமான ச்லோகங்களை அமைப்பது உசிதம் மேகங்கள் நீர்ச்சுமை தாங்கமாட்டாமல் பூமியில் இறங்குவதுபோல் கருணை யென்னும் நீரின் பாரம் அதிகமாகி பகவானென்னும் காள மேகம் பூமியில் இறங்குவதுதான் அவதாரங்கள் என்று ஸ்ரீசங்கராசார்யர் கூறியிருப்பதை இங்கே நினைக்க வேணும். இந்தக் கலி காலத்தில் பாபமென்னும் அக்னி மண்டி எரிகிறது. திருவேங்கடமுடையானுடைய திரு மேனி போன்ற அர்ச்சா விக்ரஹங்களான காளமேகங்கள் கலி யென்னும் நெருப்பு நம்மைச் சுடாமல் குளிர்ச்சி செய்யும். (81)

प्रसूय विविधं जगत्तदभिवृद्धये त्वं दये
समीक्षणविचिन्तनप्रभृतिभिः स्वयं तादृशैः ।
विचित्रगुणचित्रि ! विविधदोषवैदेशिकीं
वृषाचलपतेस्तनुं विशसि मत्स्यकूर्मादिकाम् ॥ ८२ ॥

ப்ரஸூய விவிதம் ஜகத் ததபிவ்ருத்தயே த்வம் தயே
ஸமீக்ஷண விசிந்தநப்ரப்ருதிபி: ஸ்வயம் தாத்ருசை: ।
விசித்ரகுண சித்ரிதாம் விவிததோஷவைதேசிகீம்
வ்ருஷாசலபதேஸ்தநும் விசஸி மத்ஸ்யகூர்மாதிகாம் ॥

(பதவுரை) தயே-தயையே! த்வம்—நீ, விவிதம் ஜகத்—வைசித்ரியங்களோடு கூடிய ஜகத்தை, ப்ரஸூய-பெற்று (உண்டுபண்ணி) ததபிவ்ருத்தயே—அதன் முன்னேற்றத்திற்காக, ஸ்வயம்-நீயாகவே, தாத்ருசை:- அப்படிச்சிறந்த, ஸமீக்ஷண விசிந்தநப்ரப்ருதிபி:- கண்ணால் பார்ப்பது, த்யாநம் செய்வது முதலான வ்யாபாரங்களால், விவிததோஷவைதேசிகீம் — ஒருவிதமான பழுதுமில்லாததும், (தோஷமிருக்கிற ஊரிலே இல்லாததாயும்) விசித்ரகுணசித்ரிதாம்—அனேக குணங்களால் ஆச்சர்யப்படத்தக்கதாயுமுள்ள, வ்ருஷாசலபதே:— வேங்கடமலை அதிபருடைய, மத்ஸ்ய கூர்மாதிகாம்-மீன் ஆமை முதலிய, தநும்-வடிவிற்குள், விசஸி—புகுகிறாய்.

"தயையே! அநேக ப்ரகாரமாயிருக்கும் ஜகத்தை ஸ்ருஷ்டித்து விசித்ரமான வீக்ஷணங்கள் த்யானங்கள் முதலியவைகளால் அதன் அபிவ்ருத்தியைச் செய்வதற்காக ஒருவிததோஷமும் அணுகக்கூடாததும், ஆச்சரியமான குணங்களால் நிறைந்ததுமான மத்ஸ்யம் கூர்மம் முதலிய ஸ்ரீநிவாஸனுடைய திருமேனியில் நீ ஸ்வயமாக ப்ரவேசிக்கிறாய்."

(தாத்பர்யம்) இந்த ச்லோகத்தில் மத்ஸ்யம், கூர்மம் என்னும், இரண்டு அவதாரங்கள் வர்ணிக்கப்படுகின்றன. ஜகத்தும், ஜகத்திலுள்ள ப்ராணிகளும் ஈச்வரனுக்கு ப்ரஜைகள் மீன்கள் பெற்ற குழந்தைகளைக் கண்களால் குளிரப்பார்த்து அந்த த்ருஷ்டிகளால் அவைகளை வளர்க்கும் என்றும், கூர்மங்கள் தங்கள்ப்ரஜைகளை த்யானத்தால் வளர்க்குமென்றும், ஹம்ஸம் முதலிய பக்ஷிகள் ப்ரஜைகளை ஸம்ஸ்பர்சத்தால் (அடைகாத்தலால்) வளர்க்குமென்றும் சொல்லுவர். மத்ஸ்யாவதாரத்தில் தன் தாமரைக் கண்களின கடாக்ஷங்களால் ஸமுத்ரஜலத்தில் தாமரைக்காடுகளை ஸ்ருஷ்டிப்பது போல், வேதங்களைத் தேடுவதற்காகக் கடாக்ஷங்களை இங்குமங்கும் சொரிந்துகொண்டு டோலோத்

ஸவம் கண்டருளுவதுபோல் ஊஞ்சலாடியதாக தசாவதார ஸ்தோத்ரத்தில் வர்ணித்திருக்கிறார். மத்ஸ்யாவதாரத்தில் தயை திருக்கண்களில் புகுந்துகொண்டு கடாக்ஷங்களில் விளங்குகிறாள். கூர்மமானது தன்னுடைய பரவியிருக்கும் அங்கங்களை உள்ளே யிழுத்துக்கொண்டு கண்ணை மூடிக் கொண்டு த்யானம் செய்வது போலிருப்பதுபோல பாஹ்ய விஷயங்களைத் தேடி வெளியே பரவும் இந்திரியங்களை உள்ளே அடக்குவது யோகியின் லக்ஷணம என்று கீதா வசனம். ஸமுத்திரத்தின் அலைகள் கோஷம் பேரிரைச்சலாகும் முப்பத்து முக்கோடி தேவர்கள் ஒரு புறமும், கணக்கில்லாத அசுரர்கள் இன்னொருபுறமுமாக கூர்ம ரூபியான பகவா னுடைய முதுகின்பேரில் மந்தர பர்வதத்தை மத்தாக வைத்து வாசுகியென்னும் கயிற்றைக் கட்டி கறகறவென்று ஓயாககூக்குரலுடன் சுற்றிச்சுழற்றி இழுக்கும்பொழுது கூர்மரூபியான பகவான் குறட்டை விட்டுக்கொண்டுயோக நித்ரை செய்வதாக ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் வர்ணித் ததை இங்கே நினைக்க வேணும். முதலியது என்பதால் ஹம்ஸாவதாரத்தை நினைப்பது. (82)

युगान्तसमयोचितं भजति योगनिद्रारसं
वृषक्षितिभृदीश्वरे विहरणक्रमाज्ज्ञाप्रति ।
उदीर्णचतुरर्णवीकदनवेदिनीं मेदिनीं
समुद्धृतवती दये त्वदभिजुष्टया दंष्ट्रया ॥ ८३ ॥

யுகாந்த ஸமயோசிதம் பஜதி யோகநித்ராரஸம்
வ்ருஷக்ஷிதிப்ருதீச்வரே விஹரணக்ரமாஜ்ஜாக்ரதி ।
உதீர்ணசதுரர்ணவீகதநவேதிநீம் மேதிநீம்
ஸமுத்ருதவதீ தயே த்வதபிஜுஷ்டயா தம்ஷ்ட்ரயா ।

(பதவுரை) தயே-தயையே! வ்ருஷக்ஷிதிப்ருதீச்வரே- வேங்கடமலையரசன், யுகாந்த ஸமயோசிதம் - யுகத்தின் முடிவு காலத்திற்குத் தக்கதான, நித்ராரஸம்- நித்ராரஸத்தை, பஜதி-அடைந்தவராய், விஹரணக்ரமாத்-லீலா க்ரமத்தால்,

ஜாக்ரதி-விழிக்கும்போது, உதீர்ண சதுரர்ணவீ கதநவேதிநீம்-நான்கு ஸமுத்ரங்களும் சேர்ந்து பெருகிப் பொங்கி ப்ரளயம செய்கையால் ஹிம்ஸையை அடைந்த, மேதிநீம்-பூமியை, த்வதபிஜுஷ்டயா-உன்னோடு கலந்த, தம்ஷ்ட்ரயா-பல்லினால் (வராஹப் பெருமாளின கடைவாய்ப் பல்லால்) ஸமுத்த்ருதவதீ-உத்தரணம் செய்தாய் (மேலே தூக்கினாய்).

"தயையே! ப்ரளயகாலத்திற்குத் தக்கபடி நேத்ரங்களை மூடிக்கொண்டு யோக நித்ரா ரஸத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும் ஸ்ரீநிவாஸன் லீலையின் அவசரத்தில் கண் வளரும் பொழுது வெள்ளமிட்டுப் பொங்கி ஓங்கும் ஸமுத்ரங்களால் பீடையை அடைந்தும், இருக்குமிடம் தெரியாமல முழுகிப்போன பூமியை உன்னோடுகூடிய (வராஹமூர்த்தியின) கோரைப் பல்லினால் மேலே தூக்கிக் காப்பாற்றினாய்".

(தாத்பர்யம்) வராஹாவதாரத்தில் தயை கோரைப் பல்லின் இடுக்கில் புகுந்தது. வராஹாவதாரத்தில் பகவானுடைய திருமேனியின உருவம் எவ்வளவு பெரிதென்றால் நான்கு ஸமுத்ரங்களும் அவருக்கு குளம்படியாய் இருந்தது என்பதைக்கொண்டு தெரிந்துகொள்ளலாம். வராஹங்கள் முழங்காலுக்குக் கீழுள்ள ஜலத்தில விளையாடி கோரைக் கிழங்கைப்பல்லிடுக்கில் அடக்கிக்கொள்வதுபோல வராஹப் பெருமாள் நான்கு ஸமுத்ரங்களிலும் விளையாடி, தன் பற்களினால் பூமியைத் தூக்கி பற்களினிடுக்கில் கோரைக் கிழங்கைப் போல்அடக்கிக்கொண்டார். (௮௩)

सटापटलभीषणे सरभसाट्टहासोद्भटे
स्फुरत्क्रुधि परिस्फुटद्भ्रुकुटिकेऽपि वक्त्रे कृते ।
दये वृषगिरीशितुर्दनुजडिम्भदत्तस्तना
सरोजसदृशा दृशा समुदिताकृतिर्दृश्यसे ॥ ८४ ॥

ஸடாபடலபீஷணே ஸரபஸாட்டஹாஸோத்படே
ஸ்புரத்க்ருதி பரிஸ்புடத்ப்ருகுடிகேஃபி வக்த்ரே க்ருதே ।

தயே வ்ருஷகிரீசிதுர் தநுஜடிம்பதத்தஸ்தநா
ஸரோஜஸத்ருசா த்ருசா ஸ

(பதவுரை) வ்ருஷகிரீசிது: தயே-வேங்கட மலையரசனு
தயையே, ஸடாபடலபீஷணே-பிடரிமயிர்களின் கற்றை
களால் பயங்கரமாகவும், ஸரபஸாட்டஹாஸோத்படே-அத்
ஸம்ப்ரமத்தோடு கூடிய அட்டஹாஸத்தால் பயங்கரமாயும்,
ஸ்புரத்க்ருதி-துடிக்கும் கோபத்தையுடையதாயும், பரிஸ்
புடதப்ருகுடிகே – நொடிக்கும் புருவங்களையுடையதாயும்,
வக்த்ரே – திருமுகமானது, க்ருதேபி – செய்யப்பட்ட
போதிலும், தநுஜடிம்பதத்தஸ்தநா–அஸுரசிசு ப்ரஹ்லாத
னுக்குப் பால் கொடுக்கிறவளாக (போல) ஸரோஜஸத்ருசா-
தாமரையையொத்த, த்ருசா – திருக் கண்களோடே,
ஸமுதிதாக்ருதி:– சேர்ந்த ஆகாரத்தை உடையவளாய்
த்ருச்யஸே-காணப்படுகிறாய்.

"திருமலையரசனுடைய தயையே! அடர்ந்த பிடரி
மயிர்களால் பயங்கரமாயும் ஸம்ப்ரமத்தோடு கூடிய அட்ட
ஹாஸத்தாலே நடுக்கத்தைத் தருவதாயும், நெரித்த புருவங்
களோடு முகம் கோபத்தால ஜ்வலிப்பதுபோல் செய்யப்
பட்டிருந்தும, அதே முகத்தில் தாமரைப் புஷ்பம்போன்ற
கண்ணாலே அசுரக்குழந்தையான ப்ரஹ்லாதனுக்கு முலைப்
பால் சொரிந்துகொண்டு நீ வாத்ஸல்யத்தோடு சேர்ந்து
ப்ரகாசித்து விளங்குகிறாய்."

(தாத்பர்யம்) இங்கே நரஸிம்மாவதாரம் வர்ணிக்கப்
படுகிறது. திருமலைக்கு ஸிம்மாசலம் என்று பெயர். ஸிம்மா
சலத்திலிருந்து ஸிம்மம் அவதரிப்பது உசிதம். சேரக்
கூடாத விரோதங்களையெல்லாம் சேர்த்து அகடிதங்களை
யெல்லாம் கடனம் செய்வதற்கு இந்த அவதாரம் பேர்
போனது என்பது ப்ரஸித்தம. பகலில்லாமலும் இரவில்
லாமலும, இரண்டிற்கும் நடுவில் ஆகப்பட்ட சந்தியா
காலம அவதார காலமாயிற்று. உயிருள்ளது என்றும்

உயிரில்லாதது என்றும் சொல்லுவதற்கு அரிதான நகங்கள் ஆயுதங்கள் ஆயின. இப்படி அநேகம் சேராச் சேர்க்கைகளைச் சேர்த்தது பெரிதன்று. ஒரே திருமுக மண்டலத்தில் ப்ரபலமான சத்ருவோடு யுத்தம் செய்யும் அவசரத்தில் சிவந்த பிடரிமயிர்கள் திருக்கண்களின் பேரிலும், சுற்றியும், ரக்தவர்ணமாய் பயங்கரமாய் ஆடிக்கொண்டும், கண்களுக்கு அடுத்து மேலிருக்கும் புருவங்கள் துடித்துக்கொண்டும் கண்ணுக்குக் கீழிருக்கும் வாய் மூவுலகும் நடுங்க திக்கஜங்கள் ஹோ என்று அலற பயங்கரமாய் அட்டகாசம் செய்துகொண்டிருந்தும், இப்படி திருமுகத்தில் பயங்கர சின்னங்களே வ்யாபித்திருந்தும், அதே காலத்தில் அந்த முகத்திலேயே நடுவிலுள்ள திருக்கண்களால் அசுர சிசுவான ப்ரஹ்லாதனுக்கு முலைப்பால் கொடுப்பதுபோல் ஸ்நேகத்தை சொரிந்துகொண்டேயிருந்ததைக் காட்டிலும் ஆச்சர்யமான விரோதச் சேர்க்கை உண்டோ என்கிறார். சத்ருவோடு போர் புரியும் பொழுது 'கண்ணினாலே எரிப்பதுபோல்' என்று வர்ணித்திருக்கிறபடி முகம் முழுவதும் கோபத்தால் ஜ்வலிக்கும். இந்த அவதாரம் ஸ்வல்ப க்ஷணங்கள்தான் பூமியில் ஸேவை ஸாதித்தது. 'பரித்ராணாய ஸாதூநாம்' என்கிறபடி பக்தர்களிடத்தில் ப்ரேமையைக் காட்டிக் குளிரக்கடாக்ஷித்து அனுக்ரஹத்தைச்சொரிவதல்லவோ அவதாரத்தின் முக்கிய கார்யம். ப்ரஹ்லாதனைக் குளிர்ந்த கடாக்ஷங்களால் அனுக்ரஹிப்பதல்லவா முக்யகார்யம். அனுக்ரஹிப்பதற்கு ப்ரேமவசம்வதமான திருக்கண்கள் வேண்டும் எந்த முகத்தில் முன் சொன்ன பயங்கரமான ஹேதுக்கள் உண்டோ அந்த முகத்தில் பயங்கர அடையாளங்களால் சூழப்பட்டு நடுவேயுள்ள கண்களில் இருந்து சிசுவுக்குப் பால் கொடுப்பதைப் போல் ப்ரஹ்லாதனுக்கு ப்ரீதியைச் சொரிந்து கொண்டு அவனுக்குக் கிஞ்சித்தேனும் நெஞ்சில் பயமுண்டாகாமல் ப்ரீதிரஸமே மேலிடும்படி செய்ததிலும் வியப்புண்டோ ?

प्रसक्तमधुना विधिप्रणिहितैः सपर्योदकैः
समस्तदुरितच्छिदा निगमगन्धिना त्वं दये ।
अशेषमविशेषतस्त्रिजगदञ्जनाद्रीशितु-
श्चराचरमचीकरश्चरणपङ्कजेनाङ्कितम् ॥ ८५ ॥

**ப்ரஸக்தமதுநா விதிப்ரணிஹிதை: ஸபர்யோதகை:**
**ஸமஸ்தது்ரிதச்சிதா நிகமகந்திநா த்வம் தயே ।**
**அசேஷமவிசேஷதஸ் த்ரிஜகதஞ்ஜநாத்ரீசிது**
**சராசரமசீகரச்சரணபங்கஜேநாங்கிதம் ॥**

(பதவுரை) தயே-தயையே, த்வம்-நீ, விதிப்ரணிஹிதை: -ப்ரஹ்மாவினுல் ஸமர்ப்பிக்கப்பட்ட, ஸபர்யோதகை:- பூஜைபாத்ய தீர்த்தங்களோடு (கூடி) ப்ரஸக்தமதுநா-பெருகும் தேனையுடையதும், ஸமஸ்ததுரிதச்சிதா—எல்லாப் பாபங்களையும் போக்குவதாயும், நிகமகந்திநா - வேத வாஸனையுடையதும், அஞ்ஜநாத்ரீசிது:— அஞ்ஜந மலையரசனுடைய, சரணபங்கஜேந-திருவடித் தாமரையாலே, அவிசேஷத:— தாரதம்யமே இல்லாமல், அசேஷ:—நிச்சேஷமாக (பாக்கி ஒன்றுகூட விடாமல்) த்ரிஜகத்-மூவுலகத்தையும், அங்கிதம்—முத்ரை போட்டதாக, அசீகர:- செய்வித்தாய்.

"தயையே! ப்ரஹ்மாவினுல் ஸமர்ப்பிக்கப்பட்ட பாத்யங்களினுல் நனைக்கப்பட்டதாயும், தேன் சொரிவதாயும், பாபங்களையெல்லாம் போக்குவதாயும், வேதங்கள் மணப்பதாயும், உள்ள அஞ்ஜன மலையரசனுகிய ஸ்ரீநிவாஸனுடைய திருவடித் தாமரையால் சராசரமான ஜகத்து முழுவதும் முத்திரை போடப்பட்டதாக நீ ஆக்கினுய்."

. . ——— த்ரிவிக்ரமாவதாரத்தை வர்ணிக்கிருர். உலகத்தைத் தன் திருவடியால் அளந்தபொழுது ஸகல சராசரங்களின் சிரஸிலும் அவன் திருவடித்தாமரையின் முத்திரை விழுந்தது. முத்திரை போடுவதற்கு மை என்னும் அஞ்ஜனம் வேண்டும். உலகம் முழுவதும் முத்திரை

போட பர்வதப்ரமாணமான அஞ்ஜனம் வேண்டும். அஞ்ஜனமலையாசன் இப்படி உலகம் முழுவதும் முத்திரை போடுவது எளிதாகும். திருவடியில் தேன் பெருகுவதால் மையை இளகச்செய்வது எளிதாகும். தயாப்ரபாவத்திஞல் இது ஒரு விசித்ரமான வைஷ்ணவ முத்ராங்கனம் என்கிருர். (85)

परश्वधतपोधनप्रथनसत्क्रतूपाकृत-
क्षितीश्वरपशुक्षरत्क्षतजकुङ्कुमस्थासकैः ।
वृषाचलदयालुना ननु विहर्तुमालिप्यथा
निधाय हृदये दये निहतरक्षितानां हितम् ॥ ८६ ॥

**பரச்வத தபோதந ப்ரதந ஸத்க்ரதூபாக்ருத**
**க்ஷிதீச்வர பசு க்ஷரத் க்ஷதஜ குங்கும ஸ்தாஸகை: ।**
**வ்ருஷாசல தயாளுநா நநு விஹர்த்துமாலிப்யதா**
**நிதாய ஹ்ருதயே தயே நிஹதரக்ஷிதாநாம் ஹிதம் ॥**

(பதவுரை) தயே-தயாதேவியே, நிஹதரக்ஷிதாநாம்-கொல்வதால் ரக்ஷிக்கப்பட்டவர்களுடைய, ஹிதம்-க்ஷேமத்தை, ஹ்ருதி-மனதிற்குள், நிதாய-வைத்துக்கொண்டு, பரச்வததபோதந-கோடாலி பிடித்த பரசுராமருடைய, ப்ரதந-யுத்தமென்னும், ஸத்க்ரது-சிறந்த யஜ்ஞத்தில், உபாக்ருத-(பசுவைப்போல்) முடிக்கப்பட்ட, க்ஷிதீச்வர பசு-ராஜாக்களான (யாக) பசுக்களுடம்பிலிருந்து, க்ஷரத்-ஒழுகும், க்ஷதஜ-ரக்தமாகிற குங்குமஸ்தாஸகை:- குங்குமப்பூச்சுக்களால், வ்ருஷாசலதயாளுநா - வேங்கடமலையிலுள்ள தயாளுவால், விஹர்த்தும்-விளையாட்டாக (விளையாடுவதற்கு) ஆலிப்யதா: நநு-பூசப்பட்டாய் போலும்.

"தயாதேவியே! கொல்லப்படுவதால் உண்மையில் ரக்ஷிக்கப்பட்டவ (க்ஷத்ரிய)ர்களுடைய க்ஷேமத்தைக்கோரிகையும் கோடாலியுமான பரசுராமருடைய யுத்தமென்னும் யக்ஞத்தில் (யாகப்பசுக்களைப்போல்) பலியாக்கப்பட்ட (க்ஷத்திரிய) அரசர்களுடைய சரீரத்திலிருந்து ஒழுகும் ரக்த

மென்னும் குங்குமச்சாந்துகளால் வேங்கடமலையிலுள்ள தயாளுவால் விளையாட்டிற்காக நீ பூசப்பட்டாய் போலும்!

(தாத்பர்யம்) எல்லா அவதாரங்களும் தயாமூலமென்றார் 21 தலைமுறை க்ஷத்திரியப் பூண்டேயில்லாமல் கோடாலியால் வெட்டியெறிந்த பரசுராமாவதாரம் எப்படி தயா கார்யமாகும்? மிகவும் அருவருப்பையும் பயத்தையுமுண்டு பண்ணும் ஓயாத கொலை, ரக்த வெள்ளத்தில் முழுகுவது முதலிய கோர வ்யாபாரங்களையே செய்துவந்த பரசுராமாவதாரமும் ஹிதத்தைக்கோரின தயாகார்யமென்று நிரூபிக்காவிட்டால், தயையின் ஆதிராஜ்யம் ஸித்திக்காது. அந்த அவதாரத்தையும் தயையாக நிரூபிக்கிறார். யுத்தமென்பதை யஜ்ஞமென்று வர்ணிப்பர். யஜ்ஞத்தில் பசுக்களை வதம் செய்வது வதமன்றென்று ச்ருதி. யஜ்ஞத்தில் வதம் செய்யப்படுவது பசுவுக்கு ஸ்வர்க்கத்தையளித்து ஹிதமாகும் என்றும் ச்ருதி. கொடிய பாபங்களுக்கு வதமென்னும் தண்டனையால் சேதநத்துக்கு சுத்தியேற்படுமென்பர். குற்றத்திற்கு ராஜதண்டனையால் சுத்தி ஏற்படும். குற்றம் செய்தவர் தம் குற்றம் கழிந்து சுத்தியடைய அரசனிடம் சென்று 'என் குற்றத்திற்கு தண்டனை விதிக்கும்படி என்மீது தயவு புரியவேணும்' என்று ப்ரார்த்திப்பர். வாலியின் குற்றங்கள் அவனுக்குப் பெருமாள் விதித்த வதத்தால் கழிந்து அவன் ஆத்மா சுத்தமானதால் அவன் வதம் அவனுக்கு ஹிதமேயென்று பெருமாள் அவனுக்கு உபதேசித்தார். அகிஞ்சனரான தபஸ்விகளைக் காப்பாற்றுவது க்ஷத்திரியர்களுக்கு தர்மம். கார்த்தவீர்யாதிகள் தபஸ்வியான ஜமதக்நியைக் கொன்றார்கள். அதையிட்டு வந்த கோபம் 21 தலைமுறைகள் சென்றது. அத்தனையும் ஸர்வஜ்ஞனுடைய திருவுள்ளத்தால் அவர்களுக்கு ஹிதமாகவே இருக்கவேண்டுமென்று ஊஹிக்கிறார். என்ன தண்டம் யாருக்கு விதிக்கப்பட்டாலும், அதைச் செய்துவைக்கும் தயாளுவான ஈச்வரன் அவர்களுக்கு ஹித புத்தியால் அவர்களைத் திருத்துவதற்காகச் செய்கிறான்

என்பது திருவுள்ளம். மலைக்காட்டிலிருப்பவர் காடுவெட்டக் கோடாலி பிடித்திருப்பர். மலையரசன் கோடாலி பிடித்த பரசுராமனுக்குள்ளா வேசித்து அவதரித்தது உசிதம். (86)

कृपे कृतजगद्धिते कृपणजन्तुचिन्तामणे
रमासहचरं तदा रघुधुरीणयन्त्या त्वया ।
व्यभज्यत सरित्पतिः सकृदवेक्षणात्तत्क्षणा-
त्प्रकृष्टबहुपातकप्रशमहेतुना सेतुना ॥ ८७ ॥

க்ருபே க்ருதஜகத்ஹிதே க்ருபணஜந்துசிந்தாமணே
ரமாஸஹசரம் ததா ரகுதுரீணயந்த்யா த்வயா ।
வ்யபஜ்யத ஸரித்பதி: ஸக்ருதவேக்ஷணாத் தத்க்ஷணாத்
ப்ரக்ருஷ்டபஹுபாதகப்ரசமஹேதுநா ஸேதுநா ॥

(பதவுரை) க்ருத ஜகத்ஹிதே-உலகத்திற்கு ஹிதம் செய்பவளும், க்ருபணஜந்துசிந்தாமணே - வேறு கதியற்ற பேதை பிராணிகளுக்கு நினைத்ததை அளிக்கும் சிந்தாரத்ன மாயுமுள்ள, க்ருபே-தயையே, ததா-அக்காலத்தில், ரமா ஸஹசரம்-லக்ஷ்மியோடு கூடிய ஸ்ரீநிவாஸனை, ரகுதுரீண யந்த்யா—ரகுவம்ச நிர்வாஹகராய்ச் செய்துவைத்த, த்வயா— உன்னால், ஸக்ருதவேக்ஷணாத் ஒருதரம கடாக்ஷித்ததால், தத்க்ஷணாத்-அந்த நிமிஷத்திலேயே, ஸரித்பதி: — நதிகளுக்குப் பதியான ஸமுத்ரம், ப்ரக்ருஷ்டபஹுபாதகப்ரசம ஹேதுநா-மிகக் கொடிய அநேக பாபங்களைப் போக்கும் காரணமான, ஸேதுநா — திருவணையால், வ்யபஜ்யத — இரண்டாக பிரிக்கப்பட்டது.

"உலகத்திற்கு ஹிதத்தையே செய்பவளாயும், மற்ரோர் கதியில்லாத பேதைகளுக்குக் கோரினதை எல்லாம் அளிக்கும் சிந்தாமணியா (ரத்நமா) யுமிருக்கும் தயா தேவியே! அக்காலத்தில் லக்ஷ்மியின் தோழனை (ஸ்ரீநிவாஸனை) ரகுவம்சத்திற் சிறந்தவனாக அவதாரம பண்ணும்படி செய்வித்த உன்னாலே ஒரே கடாக்ஷத்தால் அந்த க்ஷணத்திலேயே (தர்சனமாத்திரத்திலேயே) கொடியதான

அநேக பாதகங்கள் கழியச் செய்யும் மஹிமையை உடைய திருவணையால நதிகளின் பதியான ஸமுத்ரராஜன் இரண்டாகப் பிளக்கப்பட்டான்."

(தாத்பர்யம்) ஸ்ரீநிவாஸனை ஸீதாராமனாக அவதாரம் செய்யுமபடி தயை செய்வித்தாள். ஸீதாராமாவதாரத்திலும் மிக்க உபகாரம் உலகத்திற்குண்டோ! அவர்கள் சரித்ரமான ராமாயணத்திலும் ஹிதமும் இனியதுமான க்ரந்தம் உலகிலுண்டோ! பேதைகள் பிழைக்க ஸுலபமான மார்க்கமான சரணாகதியை ராமாயண கதாநாயகர்தானே உலகத்தில நாட்டிவைத்தார். அவர்கள் சரிதரமான ராமாயணம்தானே அந்த உபாயத்தை ஸம்பூர்ணமாக விளக்கும ப்ரமாணம். ராமாஸஹசரய-பிராட்டியோடு கூடச்செல்பவனாக, பிராட்டி முன்னே செல்ல ஸ்ரீநிவாஸன் பின்னே செல்கிறார். சரணாகதி மார்க்கத்தில் பெருமாளிலும் அதிக ஊக்கம் உடைய பிராட்டி முன் சென்று வழிகாட்டுகிறாளென்பது ரஸம். சரணாகதிக்கு யோக்யதை ஸம்பாதித்துக் கொள்ள புராதனமாபாதகங்கள் கழிந்து சுத்தியேற்படுவதற்காகத் திருவணைக்குச் சென்று ஸேது தர்சனததால் சுததி செய்துகொண்டு, பிறகு சரணாகதியை அநுஷ்டிப்பர். ரகுவீரனுடைய திருவடித் தூளியின ஸ்பர்சத்தால் நீண்ட காலம கலலாய்ககிடந்த கொடிய பாபம் ஒரு க்ஷணத்தில் கழிந்து, அஹல்யை கௌதம தர்ம பத்நியானாள். ரகுவீரனுடைய திருவடிகளே ஸஞ்சரிக்கும் பாக்யம் பெற்ற ஸேதுவை நிர்மாணம் செய்தது ராமாவதாரத்தாலேற்பட்ட ஓர் நிகரற்ற தயாகார்யம். ஜனங்களுடைய பாபங்களைப் போக்குவதுதானே தயையின் கார்யம். நம்முடைய பாபங்களுக்குத் தயை ப்ராயச்சிததம் போல இருப்பவள். தயை பாபங்களை மன்னித்து விட்டால் வேறு ப்ராயச்சிததம் வேண்டியதில்லை. பெருமாளுடைய தயை ஒரே கடாக்ஷத்தால் ஸமுத்ரத்தைப் பிளக்கச் செய்து ஸேதுவை உலகத்தின் உஜ்ஜீவனததிற்காக நிர்மாணம செய்வித்தது. ஸமுத்ரராஜன் பேரில் கோபமென்பதும் லங்கை சேரவேண்டு

வதற்காக என்பதும் மேலுக்கு வ்யாஜமாத்ரம். உலகம் பிழைக்கச் செய்யக் கேவலம் தயையின் வ்யாபாரம்தான். ராம வானரஸேனையுடன் ஸமுத்ரத்தைத் தாண்டுவதற்காக என்பது வ்யாஜ மாத்ரம். பாபஸமுத்ரமான ஸம்ஸாரத்தை உலகம் கடப்பதற்கு ஓர் சாச்வதமும், கண்ணுல் பார்ப்பது மட்டும் போதுமென்கிற அதிஸுலபமுமான ஓர் ஸாதனத்தை ஸ்தாபித்து வைப்பதில்தான் முக்யக்கருத்து. ஸ்ரீநிவாஸனை ரகுதுரீணர் என்றும் ரமாஸஹசரர் என்றும் பேசுவது ரஸம். ரகுகுலத்திற்குத் தலைவராயினும் ஸீதையைப் பின் செல்லும் தோழரே. விபீஷணாழ்வார் எந்த இடத்தில் ஸர்வ லோக சரண்யனைச் சரணம்பற்றி உஜ்ஜீவித்தாரோ, அந்த இடத்திலேயே தர்சனமாத்ரத்தால் ஸர்வ பாதக ஹரமான திருவணையை ஸேவித்துக்கொண்டே நீராடி சுத்தி பெற்றுப் பிறகு சரண்யன் திருவடிகளைப் பற்றும் பாக்யம் உலகத்திற்கேற்பட்டது. பெருமாளுடைய ஓரே தயாகடாக்ஷத்தால் ஸமுத்ரம் ஸேதுவினுல் இரண்டாகப் பிளக்கப்பட்டது. பாபஸமுத்ரம் தாண்ட ஓரே கடாக்ஷத்தால் திருவணையேற்பட்டது. இந்த ச்லோகத்தில் 'ஸக்ருத்' (ஓரே தரம்) என்று ப்ரயோகித்திருப்பது மிக்க ரஸம். சரணுகதி உபாயமும் ஒரு தரம்தான். ஓர் க்ஷணம்தான். அது பலிப்பது தத்க்ஷணமே. ஸேது பாபங்களைப்போக்குவதும் தத்க்ஷணமே. நம்முடைய ஒரு தர்சனம் போதும்.

कृपे परवतस्त्वया वृषगिरीशितुः क्रीडितं
जगद्धितमशेषतस्तदिदमित्थमर्थाप्यते
मदच्छलपरिच्युतप्रणतदुष्कृतप्रेक्षितै-
र्हतप्रबलदानवैर्हलधरस्य हेलाशतैः ॥ ८८ ॥

க்ருபே பரவதஸ்த்வயா வ்ருஷகிரீசிதுः க்ரீடிதம்
ஜகத்தஹிதமசேஷதஸ்ததிதமித்தமர்த்தாப்யதே।
மதச்சலபரிச்யுதப்ரணததுஷ்க்ருதப்ரேக்ஷிதை:
ஹதப்ரபலதானவைர்ஹலதரஸ்ய ஹேலாசதை: ॥

(பதவுரை) க்ருபே-தயாதேவியே! த்வயா பரவது-உன்னை யஜமானியாகக்கொண்டு உடன்பட்டதான, வ்ருஷகிரீசிது:- வேங்கடத்தரசனுடைய, க்ரீடிதம்-விளையாட்டு, அசேஷத:-முழுவதும், ஜகத்ஹிதம்-உலகத்திற்கு ஹிதமே (நல்லதே). தகிதம் – அப்படிக்கொத்த இந்த (உண்மை) மதச்சல — மத்யபான மயக்கமென்கிற சாக்கைக்கொண்டு, பரிச்யுத-நினைப்பிலிருந்து நழுவிய, ப்ரணத துஷ்க்ருத ப்ரேக்ஷிதை:— ஆச்ரிதர் குற்றக்கவனிப்புகளையுடையதும், ஹதப்ரபலதாநவை:-மிக்கபலமுடைய அஸுரரைக்கொல்லுவதுமான, ஹலதாஸ்ய-கலப்பையை உடைய பலராமருடைய, ஹேலாசதை:- நூற்றுக்கணக்கான லீலைகளால், அர்த்தாப்யதே-உண்மையென்று நிரூபிக்கப்படுகிறது.

"அம்மா தயையே! உன்னை யஜமானியாகக்கொண்டு வேங்கடமலையரசனுடைய விளையாட்டெல்லாம் (லீலையான உலகவ்யாபாரம்) ஒன்று தவறாமல் முழுவதும் நன்மையேயாகும். மத்யமயக்கமென்கிற வ்யாஜத்தை வைத்துக்கொண்டு ஆச்ரிதர்களுடைய குற்றங்களைக் கவனியாமல் நினைப்பிலிருந்து நழுவவிடுவதும் பொல்லாவஸுரர்களை மாய்ப்பதுமான பலராமருடைய நூற்றுக்கணக்கான விளையாட்டுகளால் இந்த உண்மை உறுதி செய்யப் படுகிறது."

(தாத்பர்யம்) எந்த அவதாரத்தில் தயை என்பதே இல்லை என்று நாம் நினைக்கக் கூடுமோ, அந்த அவதாரத்தின் வ்யாபாரங்களும் தயாமயங்களென்று நிரூபித்தால்தான் தயையின் சக்தி எங்கும் ப்ரஸரிக்கும் என்பது தெளிவாகும். கொடுமையே வ்ரதமாகக் கைப்பற்றி க்ஷத்திரியப்பூண்டேயில்லாமல் கொலைசெய்துவந்த பரசுராமருடைய கோரமான கொலைச் செயல்கள்கூட கொல்லப்பட்டவர்களுடைய ஆத்மாவிற்கு ஹிதமானதால் அவ்வரையும் தயா ப்ரவாஹம் என்று நிரூபித்தார். முன் ராமர் (முதல் ராமர்) விஷயத்தில் அப்படி நிரூபிக்கப்பட்டது. முன் ராமர் கோபத்தால் மத்தர்.

அவர் கோபமதத்திற்கு ஒய்வில்லை. இந்தப் பின்ராமர் மத்யத்தால் ஸதாகாலமும் மத்தர். மத்யத்திற்கு 'ஹாலா' என்று பெயர். இவர் ஹாலையை விடாதவர், அதை அவர் ஓர் ஓயாத வ்யஸநமாக உடையவர். 'ஹித்வா ஹாலாம்' என்கிற மேகதூத சுலோகத்தில் ஹாலையை விட்டுவிட்டு (பாரதப்போரில் இரு திறத்தாரும் பந்துக்களாக இருந்ததை யிட்டு) பந்துப்ரீதியினால் தீர்த்தயாத்திரைபோய் தர்மத்தைச் சரித்துக்கொண்டு சுத்தராய் புண்யத்துறைகளாடினார் என்று வர்ணித்தார். இவர் மத்ய பானத்தை விட்டு தீர்த்த யாத்திரை செய்தது ஓர் பெரிய ஆச்சர்யமென்று அங்கே மஹாகவி வேடிக்கையாகக் காட்டினார். இவர் மத்தர் போல நடித்ததெல்லாம் பிறர் குற்றங்களைக் கவனியாமல் இருப்பதற்கு ஓர் சாக்காயிற்று என்று இங்கே வர்ணநம். துர்யோதநனுடைய கோடி தோஷங்களையும் இவரைக் கவனியாமலிருக்கச் செய்தது தயை. (88)

प्रभूतविबुधद्विषद्भरणखिन्नविश्वम्भरा-
भरापनयनच्छलात्त्वमवतार्य लक्ष्मीधरम् ।
निराकृतवती दये निगमसौधदीपश्रिया
विपश्चिदविगीतया जगति गीतयान्धं तमः ॥ ८९ ॥

ப்ரபூதவிபுதத்விஷத்பரண கிந்ந விச்வம்பரா
பராபநயநச்சலாத் த்வமவதார்ய லக்ஷ்மீதரம் 1
நிராக்ருதவதீ தயே நிகமஸௌததீபச்ரியா
விபச்சிதவிகீதயா ஜகதி கீதயாந்தம் தம: ll

(பதவுரை) தயே-தயையே! ப்ரபூதவிபுதத்விஷத்பரண கிந்ந விச்வம்பரா-ஏராளமான (அநேக) தேவசத்துருக்களான அஸுரர்களை சுமப்பதால் வருந்தின பூமிதேவியினுடைய, பராபநயந-பாரத்தை நீக்குவதென்கிற, சலாத்-வ்யாஜத் தால் (சாக்கை வைத்துக்கொண்டு) த்வம்-நீ, லக்ஷ்மீதரம்-லக்ஷ்மியை தரிக்கும் பெருமானை, அவதார்ய-அவதாரம் பண்ணும்படி செய்து, நிகம ஸௌததீபச்ரியா-மேலும்

பரிகையான உபநிஷத்துச்சியை ஏறி அடைய வழிகாட்டும் திருவிளக்கு நாச்சியார் போன்றதும், ஜகதீ-பூமண்டலம் முழுவதிலும், விபச்சித விகீதயா — வித்வான்களொருவராலும் தப்பென்று சொல்லப்படாததும் (எல்லா தேசங்களிலும், எல்லா வித்வான்களாலும், ஏகமதியாகப்புகழப் படுவதுமான), கீதயா – கீதையால் (கீதை பாடியதால்) அந்தம் தம: – உள் இருட்டை, நிராக்ருதவதீ – போக்கினாய்.

"அம்மா தயையே! தேவர்களை (ஸாத்விகரான ஸாதுக்களை) தீவ்ரமாக த்வேஷிப்பதையே விரதமாகக் கொண்ட கணக்கில்லாத அஸுரர்களை (அஸுர ஸ்வபாவம் உடைய கொடியவர்களை) ச் சுமப்பதினால் பாரம் பொறுக்க முடியாமல் வருந்தின பூமிப் பிராட்டியின் பாபச் சுமையை நீக்கி, பாரத்தை லகுவாக்குவதென்று மேலுக்கு ஒரு சாக்கை வைத்துக்கொண்டு, நீ லக்ஷ்மியோடு கூடிய பெருமாளை உலகத்தில் அவதரிக்கும்படி செய்து, வேதங்களின் மேல்மாடி (உச்சி) யை அபாயமில்லாமல் ஏறுவதற்கு திருவிளக்கு வெளிச்சம் போன்ற உலகம் முழுவதிலும் எல்லாருக்கும் அவிகீதமான (நன்று நன்றென்று மதியுடையோரெல்லோராலும் ஏகமனதாய்க் கொண்டாடப்படும்) கீதை கானத்தால் மதியை இருளச் செய்யும் தமஸை (அஜ்ஞான இருளை) ப் போக்கினாய்."

(தாத்பர்யம்) ரஹஸ்யத்ரயங்களிலும் சரணாகதி என்னும் ஏனழக்கெளிய உபாயத்தை விதித்து, அஞ்சலஞ்சல் துயரப்படாதே, உன் சுமையை நான் சுமக்கிறேன், உன் க்ஷேமம் என் பாரம், உன் பாரத்தை நான் அபநயனம் செய்கிறேன் என்று அபயப்ரதானம் செய்வதை விளக்கும் சரமசுலோகத்தையும், அதை முடிவாகக்கொண்ட, எல்லாக் காலங்களிலும் ஒருவர் பாக்கியன்னியில் எல்லா ப்ராஜ்ஞர் களாலும் ஒரு மிக்க அழகு அழகு என்று கொண்டாடப்பட்டு வரும் கீதையையும் பாடி சாச்வதகாலமும் சப்தஜ்யோதியாக (ஞான விளக்காக) பிரகாசிக்கும்படி அகண்ட தீபம்

ஏற்றிவைத்ததிலும் உயர்ந்த கருணை உண்டோ? கிருஷ்ண அவதாரத்தின் ப்ரயோஜனம் இதுவே. கருணைகாஷ்டை இதுவே. பூமிப் பிராட்டி பாபிகளின் பாபச் சுமையைத் தாங்கமாட்டாமல் அழுதாள்; அவள் பாரத்தைப் போக்க அவள் அழுகையைத் தீர்க்க உலகத்தில் கண்ணனாக அவதரித்ததென்று சொல்லுவதெல்லாம் மேலுக்கு ஓர் சர்க்கான பேச்சு. அவளுடைய ப்ரபூதமான (தாங்க மாட்டாத) பாபச் சுமையைப் போக்க அவதரித்ததாக மேலுக்குச் சொல்லிக்கொண்டு, உண்மையில் குழந்தைகளாகிய நம்முடைய தூக்கமாட்டாத பாபச் சுமையை நீக்கவும், நம் அழுகையைத் தீர்க்கவுந்தான் ப்ரபு லக்ஷ்மியையும் கூட்டிக் கொண்டு அவளை மார்பில் சுமந்து அவதரித்தது. "ஜனங் களின் சோகத்தை தெரிக்கச்செய்யும் ச்லோகம் (அமிர்தம்) எந்தக் காணைக் கடலிலிருந்து ஸ்வயம் அவதரித்ததோ" என்று சரம ச்லோகத்தின் அவதாரத்தை வர்ணித்துளர். வால்மீகியின் சோகம் ச்லோகமாயிற்று என்பர். கண்ணன் ச்லோகம் சோகத்தைத் தொலைப்பது. கீதை என்பது ஓர் சாச்வத அகண்ட ஞான தீபம். எம்மதத்தினரையும் ரஞ்சனம் செய்வது. சப்தம் என்னும் வெளிச்சமில்லாவிடில் உலகமெல்லாம் அஜ்ஞான இருளாகவே இருக்கும் என்பர். அஜ்ஞான இருட்டை அகற்ற சப்தமென்னும் ஜ்யோதிஸ் தான் ஸமர்த்தமாகும். மனமெனும் குஹையிலல்லவோ அஜ்ஞான இருள் நிரம்பியிருக்கிறது. எந்த விளக்கு அதன் உள்ளே போய் வெளிச்சம் காட்டத் திறமையுடையது? ஜகத்குருவும், ஆதிகுருவும், பரமகுருவுமான ஸ்ரீமானான நாராயணனே தானே மதுராபுரியில் அவதரித்து குருக்ஷேத்ர மெனும் தர்மக்ஷேத்திரத்தில் இந்த கீதையைப் பாடி என்றும் அணையாத ஞான தீபத்தை சாச்வதமாக ஏற்றிவைத்தான். உப்பரிகைமேல் விளக்கேற்றிவைக்கையில் மங்களமாகப் பாடுவர். பாடிக்கொண்டே கீதை விளக்கை ஏற்றிவைத் தான். நந்தாவிளக்கு. உப்பரிகைமேல் அபாயமில்லாமல் தடுக்கிவிழாமல் ஏறுவதற்கு தீபமில்லாமல் முடியுமோ?

உபநிஷத்துக்கள் வேதங்களின் உச்சி, சிகரம். வேதங்கள் கிரி ரூபங்கள். உபநிஷத்து வேதபர்வத சிகரம் உபநிஷத்தின் உச்சியிலுள்ளது தத்வஜ்ஞானம். அதை ஏறிப்பிடிக்க கீதையே படிக்கட்டாயும் படியேற வழிகாட்டும் தீபமும் ஆகும். உப்பரிகை உச்சியில் உச்சிமலையில் உலகத்திற்கு ஏற்றிவைத்த விளக்கு. நாராயணனால் நரனை வ்யாஜமாகக் கொண்டு நரலோகத்திற்கு ஏற்றிவைத்த விளக்கு பரஞ்சுடரேற்றிய விளக்கு. எங்கே பாடியது கீதை? 'ஜகதி' உலகம் முழுவதிலும் உலகப்பரப்பெல்லாம் பரவப்பாடியது. ஓரிடத்தில் ஒருவர் பேசுவதை உலகமெல்லாம் கேட்கும்படி ஈச்வரன் கொடுத்த சக்தியால் ஸுலபமாய்ப் பரவச்செய்வதை நாம் நேரில் இப்பொழுது காண்கிறோம். ஈச்வரன் திருவாக்கிலிருந்து வெளிவந்த பாட்டு நாம் ஒரு ப்ரயத்நப்படாமலும், அதுமுதல் உலகமெங்கும் பரவி ஆநந்தித்து வருகிறது. 'விகீதா' என்றால் பிறர் ஒவ்வாமல் ஸரியன்று என்று ஆக்ஷேபிப்பது. விகீதை என்றால் கீதையாகாது. காரத்திற்கு விரோதி விகாரம். பின்பு எக்காலத்திலும் எத்தேசத்திலும் எம்மதத்திலும் விபச்சித்தாயுள்ளவர் (புத்திமான்கள்) ஒருவரேனும் கீதையின் அழகை ஆக்ஷேபிக்க மாட்டார் என்னும் தத்துவத்தை ஸ்வாமி அநேக நூற்றாண்டுகளுக்கு முன்பே அறிந்து இப்படி அழகாக ஸாதிப்பதை ரஸிகலோகம் ரஸிக்கவேண்டும். புத்திமானாக இருந்தால் கீதையை ஆக்ஷேபிக்கமாட்டான். ஆக்ஷேபிப்பவன் புகழாதவன், புத்திமானல்ல. பாபிகள் தாங்காச் சுமையாவது அவர்களின் பாப பாரத்தாலே. மலைகளைச் சுமப்பது பூமிக்குச் சுமையன்று. பாபச்சுமையுடைய பாபிகளைச் சுமப்பதுதான பூமிக்குப் பொறுக்காச் சுமை. பூமிப்பிராட்டியின் சுமையை லகுவாக்குவது என்பது பேர் மட்டும். உண்மையில் கீதையையும் அதிலும் அந்தமான சரமச்லோகத்தையும் பாடி, நம்மை லக்ஷ்மீ நாதனை தன்னைச் சரணம்பற்றச் செய்து, நம் பாபச்சுமைகளை நீக்குவதுதான் உண்மையான நோக்கம். பூமிச்சுமையையும் நம் சுமை

யையும் நீக்க லக்ஷ்மியைச் சுமந்துகொண்டு வந்தான். திருமார்பில் லக்ஷ்மியைச் சுமந்துகொண்டு வந்தானென்பதைக் காட்ட 'லக்ஷ்மீதரமவதார்ய' என்றார். திருச்சுமையைச் சுமந்துவராமல், திருஸஹாயமில்லாமல் இந்த க்ருபாவ்யாபாரங்கள் ஸாத்தியமல்ல. பாரத்தைப் போக்குவது என்று முன் பாதத்தில் பூமிவிஷயத்தில் பேசியுள்ளது. சரமச்லோகத்தோடும் முடியும் கீதை பாடுவதைப் பற்றிய பின்பாதியிலும் நம் பாபச்சுமையைப் போக்குவதுதானுண்மைக் கருத்து என்று த்வநியினால் காட்டும். பூமிச்சுமையைக் கழிப்பது மேலுக்கு வேஷமென்றபோது, மற்றவர் சுமையைக் கழிப்பது உண்மை என்று முடிந்தால் தானே அழகு. "ஆச்ரித்யோக க்ஷேமங்களை நான் சுமக்கிறேன்" என்று பட்டைப்பகல் வெளிச்சம்போல வ்யக்தமாய் கீதை நடுவில் பாடினான். (89)

वृषाद्रिहयसादिनः प्रबलदोर्मरुत्प्रेङ्खित-
स्त्विषा स्फुटतटिद्गुणस्त्वदवसेकसंस्कारवान् ।
करिष्यति दये कलिप्रबलघर्मनिर्मूलनः
पुनः कृतयुगांकुरं भुवि कृपाणधाराधरः ॥ ९० ॥

வ்ருஷாத்ரிஹயஸாதிந: ப்ரபலதோர்மருத்ப்ரேங்கித
ஸ்த்விஷா ஸ்புடதடித்குணஸ்த்வதவஸேக
ஸம்ஸ்காரவாந் ।
கரிஷ்யதி தயே கலிப்ரபலகர்மநிர்மூலந:
புந: க்ருதயுகாங்குரம் புவி க்ருபாணதாராதர: ॥

(பதவுரை) தயே–தயையே, வ்ருஷாத்ரிஹயஸாதிந:- வேங்கடமலையிலுள்ள குதிரை ஸவாரி செய்யவல்ல பெருமாளுடைய, ப்ரபலதோர்மருத்ப்ரேங்கித:– ரொம்பவும் வேகமான கைவீச்சினாலுண்டாகும் காற்றினால் அசைக்கப்படுவதும், (ஆட்டப்படுவதும்) த்விஷா-பளபளவென்று மின்னும்காந்தியால், ஸ்புட தடித்குண:-மின்னல் என்னும் குணத்தை (கொடியை) நன்றாக வுடையதும், த்வதவஸேக-

உன்னால் நனைத்துத் தோய்ச்சலினால். ஸம்ஸ்காரவான்-சுத்தி செய்யப்பட்டதும், கலிப்ரபலகர்ம நிர்மூலந:-கலியுகத்திற்கு உரிய ப்ரபல தாபங்களைப்போக்குவதுமான, க்ருபாண தாராதர: - கத்தி என்னும் மேகமானது, புவி - பூமியில், புந: - மறுபடியும், க்ருதயுகாங்குரம் - க்ருதயுக ஆரம்பத்திற்கு முளைகளை, கரிஷ்யதி - ஏற்படுத்தும்.

“ தயையே! வேங்கடமலையின்மேல் குதிரை சவாரியில நிபுணனான ஸ்ரீநிவாஸனுடைய பலமான கைவீச்சினால் அடிக்கும் காற்றினால் சலிக்கப்பட்டதும், பளபளவென்று மின்னும் காந்திகளால் மின்னற்கொடிகளை உடையதாயும் உன்னுடைய தோய்ப்பினால் நல்ல சுத்தியை அடைந்ததுமான, கத்தியென்னும் மின்னும் கருமேகமானது பூமியில் கலியுகத்தில் ப்ரபலமான தாபங்களை வேரோடு பிடுங்கி எறிந்து க்ருதயுகம் ஆரம்பிக்க அதற்கு வேண்டிய முளைகளை மறுபடியும் உற்பத்திசெய்யும்.”

(தாத்பர்யம்) கலி முடிவில் அவதரிக்கும் கல்கி வெள்ளைக் குதிரைமேல் ஏறிக்கொண்டு பளபளவென்று மின்னும் தம் கத்தியை வீசிக்கொண்டு கலியில் மிகவும் கொடியவர்களாகவே மிஞ்சியிருக்கும் பாபிகளை நிர்மூலனம் செய்து, காட்டை அழித்துவிட்டுப் புதுப்பயிரிடுவாரைப் போல க்ருதயுக தர்மத்துடன் க்ருதயுகத்தின் ஆரம்பத்தை அவதரிப்பாரென்று சொல்லப்பட்டுள்ளது. கல்கியவதாரத்திற்கும் தர்மஸ்தாபனம்தானே முக்யப் பிரயோஜனம். ரொம்பவும் பாபிகளாய்விட்டால் அவர்களை அப்படியே விட்டுவிட்டால், பாபபுத்தி எல்லையில்லாமல் ஏறிப்போய் நன்மார்க்கத்திற்கு மீள வழியில்லாமற்போம். அவர்கள் சரீரங்களை அழித்துவிட்டு, யுகாந்தரமான முதல் யுகாரம்பம் ஆரம்பிக்கும்படி செய்வது தயா கார்யமாகும். பளபளவென்று மின்னிக்கொண்டிருக்கும் நீரோட்டக் கத்தியை மின்னும் மின்னற்கொடிகளையுடைய கார்மேகமாகவும் பாபிகளை வெட்டியெறியும் அக்கத்தியே மேகம்போல

தயையை வர்ஷித்துக்கொண்டு க்ருதயுக முளைகளைக் கிளம்பச்செய்வதாகவும் வர்ணிக்கிறார். பாபிகளைக் கத்தியால் வெட்டிக் கழிப்பதும் தயா கார்யம். அதே கத்தி மேகம் போல வர்ஷித்துக் க்ருதயுகத்தையும் க்ருதயுக தர்மத்தையும் முளைக்கச்செய்யும். மேகங்களைப் பரவச்செய்யக் காற்று வேண்டும். கல்கியான பகவான் மஹாவேகத்தோடும் பலத்தோடும் கத்தியை வீசுகையில், பெருங்காற்றடித்து எங்கும் பரவும். மலையரசன் குதிரை ஏறுவதில் நிபுணராயிருப்பர். மலைமேல் குதிரையில் ஏறிக்கொண்டு மஹா பலிஷ்டரான பெருமாள் கத்தி வீச்சினால் காற்றடித்து மேகம் பரவ ஸௌகர்யமாயிருக்கும். கத்தி கருமையினால் மேகம்போலும், வீசுகையில் பளபளவென்று மின்னற்கொடிகள் மின்னுவது போலும், கத்தி தன் கூர்மையான தாரைகளால் நீரோட்டம் உடையதுபோலும், காட்டை அழிக்க உதவும் கத்தியே மேகரூபமாக நீர் தாரைகளை வர்ஷித்துப் புது முளைகள் கிளம்பும்படிச் செய்வதுபோலவும், கத்தியும் தயா ஜலத்தால் தோய்ப்புண்டு, தயையின் ப்ரபாவத்தால் மேகமாகி வர்ஷிப்பதுபோலவும் உல்லேகம். மலையரசனை ஸ்ரீநிவாஸன் இப்படி கல்கியவதாரம் செய்யத்தக்கவர். 'கலௌ வேங்கடநாயக:' என்று கலியில் பூர்ணாதிகாரம் செலுத்துமவர் திருவேங்கடமுடையான். கலியுக முடிவில் அவரே கல்கியாக அவதரிப்பது உசிதம். கொல்லும் கத்தியே தயா மேகமானதால் பாபம் முற்றின தசையில் கொல்வதும் தயா கார்யமாகும். தயையினால் கலியுகத்தை க்ருதயுகமாக மாற்றிவிடுகிறார். கலியுகம் தொலைவதும் தயா கார்யம். க்ருதயுகம் வருவதும் தயா கார்யம். கத்தியைக் காளமேகமாகவும், அதை வேகமாய் வீசுவதால் மேகங்கள் கூடுவது போல் இருப்பதையும் மஹாகவிகள் வர்ணிப்பதுண்டு. வெட்டத் தூக்கின கத்தியும் தயையின் ப்ரபாவத்தால் வர்ஷிக்கும் மேகங்களாகிறது. (90)

विश्वोपकारमिति नाम सदा दुहाना-
मद्यापि देवि भवतीमवधीरयन्तम् ।
नाथे निवेशय वृषाद्रिपतेर्दये त्वं
न्यस्तस्वरक्षणभरं त्वयि मां त्वयैव ॥ ९१ ॥

விச்வோபகாரமிதி நாம ஸதா துஹாநா
மத்யாபி தேவி பவதீமவதீரயந்தம் ।
நாதே நிவேசய வ்ருஷாத்ரிபதேர் தயே த்வம்
ந்யஸ்தஸ்வரக்ஷணபாரம் த்வயி மாம் த்வயைவ ॥

(பதவுரை) தேவி வ்ருஷாத்ரிபதேர் தயே-வேங்கட மலையாசனின் தயாதேவியே, இதி நாம-இவ்வாறாக (முன்பு 90 சுலோகங்களால் நிரூபித்திருக்கிறபடி) விச்வோபகாரம்-ஸகலவிதமான உபகாரங்களையும், (உலகத்திற்கு உபகாரத்தை) ஸதா-எக்காலத்திலும், துஹாநாம்-கறந்துகொண்டிருக்கும் (அளித்துக்கொண்டிருக்கும்) பவதீமபி-உன்னைக் கூட, அத்யாபி-இன்றைக்கும், அவதீரயந்தம்-அலக்ஷ்யம் செய்பவனும், த்வயைவ-உன்னாலேயே, த்வயி-உன்னிடத்தில், ந்யஸ்தஸ்வரக்ஷணபரம்-ஒப்புவிக்கப்பட்ட ரக்ஷணப் பொறுப்பையுடைய, மாம்-என்னை, த்வம் (ஏவ)- நீயே, நாதே-வேங்கடநாதனிடத்தில், (லோகநாதனிடம், உன் நாதனிடம்) நிவேசய-அகலாமல் புணைத்து வைக்க வேண்டும்.

"இப்படி ஒன்பது சதகங்களால் வர்ணித்திருக்கிறபடி ஸகலவிதமான உபகாரங்களையும் எனக்கு நீ அளித்துக் கொண்டிருந்தும், உன்னை அலக்ஷ்யம் செய்பவனும் உன்னாலேயே உன்னிடத்திலேயே என் ரக்ஷணபரம் முழுவதையும் வைக்கப்பட்டு உள்ளவனுமான என்னை நீயே உன் நாதனிடத்தில் (அகலாமல்) நிறுத்திவைப்பாயாக".

(தாத்பர்யம்) ஒன்பது பத்துப் பாட்டுக்களால் தயை செய்யுமுபகாரங்களையெல்லாம் பாடினார். "இப்படிக்கு எல்லா உபகாரங்களையும் எல்லா உலகத்திற்கும் எல்லாக்

காலமும் பால் கறப்பதுபோல் கறந்துகொண்டேயிருக்கும் என்று முன் விஸ்தரித்துப்பேசிய எல்லா உபகாரங்களையும் சேர்த்து அநுவாதம் செய்கிறுர். 'கறககிறுய்' என்பதால் 'கறக்கப்படுவது ஸ்ரீநிவாஸனென்னும் பசு' என்பது வ்யஞ்ஜநம், ஸ்ரீநிவாஸனைப் பசுபோல் கறந்து கொடுக்கிருள். புருஷோத்தமனைக் காமதேனுவாக்கிக் கறக்கிருள். குழந்தைகளாகிய நமக்கு அவனிடம் கறந்து பால்போல் கொடுக்கிருள். இப்படித் தாய்போல ஸ்நேஹித்து ஸர்வோபகாரமும் செய்யுமுன்னை நான் இன்னங்கூட அவமதிக்கிறேன். நான் அவமதித்தாலும் நீ என்னை ஸ்ரீநிவாஸனிடத்திலேயே பிரியாமல் தங்கியிருக்கும்படி செய்யவேணும், அவமதிப்பவனைக் கைவிட்டாலென்ன என்று உபேக்ஷிக்கக் கூடாது. நானாக உன்னைச் சரணம் பற்றியிருந்தால், நான் அதற்கு விரோதமாக உன்னை அவமதித்தால் நீ என்னைக் கைவிடலாம். நீ ஸ்வயமாகவன்றோ என் பரத்தை உன்னிடமே ஏற்றுக்கொண்டு என்னை ரக்ஷிப்பதாகக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிருய். நீயாக வலுவில் என்னை ரக்ஷிப்பதாக என் பாரத்தை ஏற்றுக்கொண்ட பின் நான் தவறி நடக்கத் துணிந்தாலும், நீ அதற்காக என்னைக் கைவிட்டாலும், உன் வ்ரதத்திற்கும் நீ என்னை ஸரியாக வலுவில் அடைக்கலம் கொண்டதற்குமன்றோ விரோதம் வரும். ஆகையால் ஸ்ரீநிவாஸனைவிட்டு அகலாமலிருக்கும்படி செய். இப்படியாக 10 சுலோகங்களால் 'உத்ஸாஹிணீ' என்றும், 'ஸமஹோத்நதா' என்றும் பெயரையுடைய சந்தத்தில் மலையுச்சியில் கவலையற்று ஸந்தோஷமாகப்பாடுகிருர். (91)

नैसर्गिकेण तरसा करुणे नियुक्ता
निम्नेतरेऽपि मयि ते विततिर्यदि स्यात्
विस्मापयेद्वृषगिरीश्वरमप्यवार्या
वेलातिलङ्घनदशेव महाम्बुराशेः ॥ ९२ ॥

**நைஸர்கிகேண தரஸா கருணே நியுக்தா**
**நிம்நேதரேऽபி மயி தே விததிர்யதி ஸ்யாத் ।**
**விஸ்மாபயேத் வ்ருஷகிரீச்வரமப்யவார்யா**
**வேலாதிலங்கனதசேவ மஹாம்புராசே: ॥**

(பதவுரை) கருணே– தயையே, (தே)நைஸர்கிகேண– (உன்னுடைய) ஸ்வாபாவிகமான, தரஸா – ஸம்ப்ரம வேகத்தால், நியுக்தா – ஏவப்பட்ட, தே விததி: – உன்னுடைய வெள்ளப்பரப்பு, நிம்நேதரே– தாழ்மையில்லாத (கர்வத்தால் மிக்க உயர்ச்சியை அபிமானிக்கும்), மயி அபி – என்னிடம் கூட (என்பேரில்கூட), யதி ஸ்யாத் – மோதும்பொழுது (மோதினால், மோதுவதால்) (அது), அவார்யா – தடுக்க ஸாத்யமல்லாத, மஹாம்புராசே: – மஹாஸமுத்திரத்தினுடைய, வேலாதிலங்கனதசேவ – கரை தாண்டி மோதும் அவஸ்தையோ என்று, வ்ருஷகிரீச்வரம் – வேங்கடமலை அரசனை, விஸ்மாபயேத் – ஆச்சர்யப்படச்செய்யும்.

"தயையே! உன்னுடைய ஸ்வபாவமான ரக்ஷிக்கும் வேகப்பரப்பில் அசைக்கப்படும் உன்னுடைய வெள்ளப் பரப்பு தாழ்மையேயில்லாமல் அஹங்காரத்தால் மலையுச்சிக்கு மேல் உயரமாக அபிமானித்திருக்கும் என்பேரிலும் அடித்து மோதுகிறது. உன் அலை அதற்குமேல் உயரமாக மோதுகிறது. மலை ப்ரபு ஸ்ரீநிவாஸன் இதைப் பார்க்கும்போது 'இதென்ன மஹாஸமுத்ரம் கரை தாண்டி தடுக்கமாட்டாமல் மோதும் தசையோ' என்று இந்த உன் வேகமான அலை மோதல் அவரை ஆச்சர்யப்படும்படிச் செய்யும்.

(**தாத்பர்யம்**) பெருமாள் மலையுச்சியில் எழுந்தருளியிருக்கிறார். நான் அவருக்கும் மேல்பட்டவனென்று அஹங்காரம் கொண்டு அவருக்குமேல் உயரத்தில் தாவுகிறேன். உனக்கோ நம்மையெல்லாம் ரக்ஷிக்கவேண்டுமென்ற ஆசையால் மிக்க வேக ஸம்ப்ரமமிருக்கிறது. என் உயரத்தையும் எட்டிப் பிடித்து என்னை ரக்ஷிக்கவேண்டுமென்று எனக்கும் மேல் அதிவேகமாய் உன் வெள்ளத்தை அலைத்து மோதி

என்னையும் உனக்கு விஷயமாக்குகிறாய். வேங்கடமலை உச்சியிலுள்ள பெருமான் தம் தலைக்கும் மேல் உன் ஸமுத்ர வெள்ளமலைத்து ஓடுவதைப் பார்க்கிறார். தடுக்கமுடியாமல் கரையையுடைத்து மஹாஸமுத்ரம் வெள்ளமிட்டு மலையெல்லாம் முழுகும்படி அலைக்கும் காலம் வந்துவிட்டதோ என்று உன் அலைவேகத்தைப் பார்த்து ஆச்சர்யப்படுகிறார். பெருமானுக்கு மேலே என் அஹங்காரம் என்னைத் தூக்கிக் கொண்டு போயிருக்கிறது. என்னைப்பிடிக்க அவருக்கும் மேல் நீ மோதவேண்டியிருக்கிறது. நம் தலைக்கு மேலும் வெள்ளம் அலைத்து மோதுகிறது, இதென்ன மஹாஸமுத்திரத்திற்கு மஹாப்ரளய ஸமயமோவென்று ஆச்சர்யப்படுகிறார். (92)

विज्ञातशासनगतिर्विपरीतवृत्त्या
वृत्रादिभिः परिचितां पदवीं भजामि ।
एवंविधे वृषगिरीशदये मयि त्वं
दीने विभोः शमय दण्डधरत्वलीलाम् ॥ ९३ ॥

விஜ்ஞாதசாஸநகதிர்விபரீதவ்ருத்த்யா
வ்ருத்ராதிபி: பரிசிதாம் பதவீம் பஜாமி ।
ஏவம்விதே வ்ருஷகிரீச தயே மயி த்வம்
தீநே விபோ: சமய தண்டதரத்வலீலாம் ॥

(பதவுரை) வ்ருஷகிரீச தயே – வேங்கடமலை அரசன் தயையே, விஜ்ஞாதசாஸநகதி: – சாஸ்திர விதிகளின் முறைகளையும், சாஸ்திரத்தில் விதித்திருக்கும் தண்டனைகளையும் தெரிந்திருந்தும், விபரீத வ்ருத்யா – விரோதமான ஆசாரத்தோடு கூடியவனாக, வ்ருத்ராதிபி: – வ்ருத்ராஸுரன் முதலியவர்களாலே, பரிசிதாம் – நடக்கப்பட்ட (ஆசரிக்கப்பட்ட), பதவீம் – மார்க்கத்தை, பஜாமி – ப்ரீதியோடுகூட ஸேவிக்கிறேன். ஏவம்விதே – இப்படிக் கொடியவனும், தீநே – பேதையுமான (காலில் விழுந்த), மயி – என் விஷயத்தில், விபோ: – ப்ரபுவினுடைய, தண்டதரத்வலீலாம் –

தண்டிப்பது என்னும் லீலா வ்யாபாரத்தை, சமய - நீ சாந்தப்படுத்தவேணும்.

"தயையே! சாஸ்திரங்கள் தடுப்பதையும் தண்டனை விதிப்பதையும் நான் அறிந்தவனே. அறிந்தும் வ்ருத்ராஸுரன், ஹிரண்யன், ராவணன் முதலியவர்கள் ஆசரித்த மார்க்கத்தையே நானும் இடைவிடாமல் ஆசரித்துவருகிறேன். இப்படிக் கொடிய துஷ்டனை என் விஷயத்திலும் நான் பேதையாய் அகதியாய் உன் அடைக்கலத்திற்கு பாத்திரமானதைக் கொண்டு பெருமாள் என்னைத் தண்டிக்கும் வ்யாபாரமாகிய லீலையைச் சாந்தப்படுத்தவேணும்."

(தாத்பர்யம்) சாஸநகதியை நான் தெரிந்தவன், தெரியாதவனல்ல. தெரிந்தவன் (வித்வானாயிருப்பவன்) சாஸ்திர விதியை அதிக்ரமித்தால் தண்டனை அதிகமென்றும், தெரியாதவன் தப்பு செய்தால் தண்டம் குறைவென்றும் சாஸ்திரம். 'சாஸந' மென்பது சாஸ்திரத்தையும் சொல்லும். தண்டனை (சிக்ஷை) என்பதையும் சொல்லும். நான் பண்ணும் சாஸ்திரத்தின் அதிக்ரமம் ஸாமாந்யமானதல்ல. வ்ருத்ராஸுரன், ஹிரண்யன், ராவணன் முதலியவர்கள் பகவானுக்கு சத்ருக்களாகவேயிருந்து ஆக்ஞையை மீறியே நடந்து எதிரம்பு கோத்துவந்ததுபோல், நானும் நடந்து வந்திருக்கிறேன். வித்வானை நான் இப்படித் கொடிய அதிக்ரமம் செய்துவந்ததற்கு எத்தனையோ கடுமையான தண்டனைகளும் நியாயமானதே ஆயினும் பேதையாய் உன்னடைக்கலமான என் விஷயத்தில் ப்ரபுவின் தண்டிக்கும் லீலாவ்யாபாரத்தை சமனசெய்து உன்னுடைய தயா வ்யாபாரமே மேலிடும்படி செய்யவேணும். (93)

मासाहसोक्तिघनकञ्चुकवञ्चितान्यः
पश्यत्सु तेषु विदधाम्यतिसाहसानि ।
पद्मासहायकरुणे न रुणत्सि किं त्वं
घोरं कुलिङ्गशकुनेरिव चेष्टितं मे ॥ ९४ ॥

மா ஸாஹஸோக்திகநகஞ்சுக வஞ்சிதாங்ய:
பச்யத்ஸு தேஷு விததாம்யதிஸாஹஸாநி |
பத்மாஸஹாயகருணே ந ருணத்ஸி கிம் த்வம்
கோரம் குலிங்கசகுநேரிவ சேஷ்டிதம் மே ||

(பதவுரை) மாஸாஹஸோக்திகநகஞ்சுக வஞ்சிதாங்ய: - ஸாஹஸம் செய்யாதே என்ற பேச்சாகிய கெட்டிக் கவசத்தை (ஸாது வேஷத்தை)ப் போட்டுக்கொண்டு பிறரை வஞ்சித்துக்கொண்டு, பச்யத்ஸு தேஷு - அவர்கள் பார்த்துக் கொண்டேயிருக்கையில், அதிஸாஹஸாநி - மிகப் பெரிய ஸாஹஸ கார்யங்களை, விததாமி - நன்றாகச் செய்கிறேன். பத்மாஸஹாயகருணே - ஸ்ரீநிவாஸனுடைய தயையே, குலிங்கசகுநேரிவ - குலிங்கப் பக்ஷியினுடைய (செய்கையைப் போல), கோரம் - கொடியதான, மே சேஷ்டிதம் - என் செய்கையை, கிம் - ஏன், த்வம் - நீ, ந ருணத்ஸி - தடுக்கிறதில்லை.

“ஸாஹஸத்தைச் செய்யாதே என்று பிறர் காது கேட்கச் சொல்லிக்கொண்டே அந்த ஸாது வேஷத்தைப் பிறர் நம்பும்படி போட்டுக்கொண்டு அவர்கள் எல்லோரும் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே அவர்கள் முன்னே மிதம் மிஞ்சின ஸாஹஸங்களைச் செய்கிறேன். இப்படிக்கு (ஸாஹஸம் செய்யாதே என்று கத்திக்கொண்டே ஸிம்ஹம் தூங்கிக் கொட்டாவி விடுகையில் அதன் வாயிற்குள் புகுந்து அதன் பல்லிடுக்கில் ஒட்டியிருக்கும் மாம்ஸத்தைத் தின்று வெளியே வரும்) குலிங்கப் பக்ஷியைப்போல கோரமான துணிச்சல் செய்கையை நான் செய்வதை நீ ஏன் தடுக்கக்கூடாது.”

(தாத்பர்யம்) முன் ச்லோகத்தில் சாஸ்திரம் எதை விதிக்கிறதென்றும் எதைச் செய்யாதே என்று தடுக்கிறது என்றும் தாம் தெரிந்தும் சாஸ்திரக் கட்டளைகளை மீறுகிறேன் என்றார். இங்கே சாஸ்திரக் கட்டளையை நான் அறிந்ததோடுகூட பிறருக்கும் உபதேசித்துவருகிறேன்.

அப்படிக்கிருந்தும் நான் மட்டும் மீறி நடக்கிறேன் என்கிறார். உபதேசிக்கப்படும் சிஷ்யர்கள் பார்த்துக்கொண்டேயிருக்கையில் அப்படி மீறித் தப்பு நடவடிக்கைகள் செய்கிறேன் என்கிறார். பிறருக்கு உபதேசிப்பது மேலுக்கு வேஷம். குலிங்கப் பக்ஷி திருஷ்டாந்தத்தைக் காட்டுகிறார். 'ஸாஹஸம் மா குரு' (ஸாஹஸம் செய்யாதே) என்ற த்வனியாக அது கத்திக்கொண்டேயிருக்கும். ஸிம்ஹத்தின் வாய்க்குள் புகுந்து அதன் பல்லிடுக்கில் ஒட்டிக்கொண்டிருக்கும் மாம்ஸத்தைக் கடித்து இழுத்துக்கொண்டு வெளியே வரும். இப்படிச் செய்துகொண்டேயிருக்கும். இந்த த்ருஷ்டாந்தத்தை சிசுபாலன் ராஜஸூய யாகத்தில் பீஷ்மாசாரியருக்கு உபமானமாகச் சொல்லி அவரைத் தூஷிக்கிறான். 'பீஷ்மரே! ஹிமவத்கிரி பக்கத்தில் குலிங்கப் பக்ஷி என்று ஓர் பக்ஷியுண்டு. அதன் வாயிலிருந்து அதற்கு அர்த்தம் தெரியாமல் 'மா ஸாஹஸம' என்று திரும்பவும் திரும்பவும் சப்தம் வந்துகொண்டேயிருக்கும்' என்று அங்கே சிசுபாலன் பேச்சு. ஸிம்ஹாசலமென்னும் வேங்கடமலை ஸர்வேச்வரன் விஷயமாக ஸ்தோத்ரம் பண்ணத் துணிந்ததே ஸாஹஸம். 'என்ன ஞானப் பாட்டுக்களை ஓராசிரியர் தம் சீடருக்கு உபதேசம் பாடியென்ன; குலிங்கப் பக்ஷியைப்போல் வாய்ப் பாட்டு நல்லதாயிருந்தும், தன்னுடைய துஷ்ட ஸ்வபாவப் படித்தானே ஆசரிக்கிறான்' என்கிற பாரத ச்லோகத்தையும் இங்கே நினைக்கிறார். (94)

विक्षेपमर्हसि दये विपलायितेऽपि
व्याजं विभाव्य वृषशैलपतेर्विहारम् ।
स्वाधीनसत्त्वसरणिः स्वयमत्र जन्तौ
द्राघीयसी दृढतरा गुणवागुरा त्वम् ॥ ९५ ॥

விக்ஷேபமர்ஹஸி தயே விபலாயிதேऽபி
வ்யாஜம் விபாவ்ய வ்ருஷசைலபதேர்விஹாரம் ।
ஸ்வாதீநஸத்வஸரணி: ஸ்வயமத்ர ஜந்தௌ
த்ராகீயஸீ த்ருடதரா குணவாகுரா த்வம் ॥

(பதவுரை) தயே – தயையே! விபலாயிதேऽபி - நான் நீ வேண்டாமென்று அகன்று அதிக தூரமோடினாலும், வ்ருஷசைலபதே: - வேங்கடபதிக்கு, விஹாரம் - (வேட்டையாடுதலென்னும்) விளையாட்டை, வ்யாஜம் – ஒரு சாக்காக, விபாவ்ய – கல்பித்துக்கொண்டு, விக்ஷேபமர்ஹஸி – என் பேரில் தாவி என்னைப் பிடித்து உன் வசமாக்கவேணும். ஸ்வாதீநஸத்வஸரணி: – பிராணிகள் ஸஞ்சரிக்கும் வழி தெரிந்தவளாக (மான் முதலிய பிராணிகள் காடுகளில் எங்கே ஸஞ்சரித்தாலும் அவை இருக்குமிடமறிந்து ஓடிப்பிடிக்கக் கூடியவளாயும்), அத்ர ஜந்தௌ – இங்கேயுள்ள பிராணி விஷயத்தில், த்வம் – நீ, ஸ்வயம் - உன்னிச்சையினாலே ஸ்வயமாகவே, த்ராகீயஸீ - அதிக நீளமும், த்ருடதரா- அதிக கெட்டியுமான, குணவாகுரா – (குணங்களாலமைந்த) கயிறு வலையாக இருக்கிறாய். (மிக்க நீளமும் கெட்டியுமான கயிறு வலையாகி நீ தூர ஓடி ஒளியும் என்னைப் பிடித்து உன் நாயகன் வசமாக்கவேணும்.)

"தயையே! வேங்கடமலையரசனுக்கு விஷயக் காடுகளில் ஸஞ்சரிக்கும் பிராணிகளை வலைபோட்டுப் பிடிக்கிறது என்ற வேட்டை விளையாட்டை ஒரு சாக்காக ஏற்படுத்தி வைத்து பிராணிகள் ஓடி ஒளியும் மார்க்கங்களை அறிந்தவளும் அவற்றைப் பிடிக்கும் திறமையுடையவளுமாய் நான் எத்தனை தூரமோடினாலும் அதைவிட அதிக நீளமும், நான் எத்தனை பலமாகத் திமிறினாலும் அதனிலும் கெட்டியுமான குணமென்னும (கயிறு) வலையாகி நீயாகவே நான் ஓடி ஒளியுமிடம வரையில் நீண்டு என்னைப் பிடித்து உங்கள் வசமாக்கிக்கொள்ளவேணும்."

(தாத்பர்யம்) அரசர் வேட்டையாடுவதில் ருசியுடையவர். மலையரசர் காடுகளில பிராணிகளை வேட்டையாடுவதை விநோதமாக உடையவராயிருப்பவர். தயைக்கு விஷயமாகவே கூடாதென்று விஷயக் காடுகளில் மேய்ந்து ஸஞ்சரித்துக்கொண்டு நாம் வெகுதூரமோடி தயைக்ககப்

படாமல் ஒளிகிறோம். வேட்டை விநோதமென்னும் ஓர் சாக்கை நீயே கல்பித்து அந்த சாக்கைக்கொண்டு ஸ்ரீநிவாஸனை நாங்கள் திரியும் காடுகளுக்கு அழைத்துவர வேணும். தயையான நீ கூட இருந்து நடத்திவைக்கும் வேட்டை விளையாட்டில் பிராணிகளைக் கொல்லுவது கிடையாது. நீண்ட கயிறு வலைகளை வீசி பிராணிகளை உயிரோடு பிடித்து அரண்மனைக்குக் கொண்டுபோய், அங்கே தீனிபோட்டுக் குளிப்பாட்டித் தட்டிக்கொடுத்துச் செல்வமாக வளர்ப்பதுமட்டும்தான். விஷயக் காடுகளில் ஸ்வச்சந்தமாய் மேய்ந்து திரியும் மான்போன்ற பிராணிகள் நாங்கள். அரசன் கையிலகப்படாமல் திரிகிறோம். எங்களைப் பிடிக்கத் தேடும்போது தூர ஓடி ஒளிவோம். வலைவீசிப் பிடிக்கப் பார்த்தால் பலமாய்த் திமிரி ஓடப்பார்ப்போம். நீயே நீண்ட கெட்டிக்குண (கயிறு) வலையாகவேணும் நாங்கள் உங்களுக்கு அகப்படக்கூடாது என்று ஓடி ஒளிந்தாலும் உனக்கு எங்கள் போக்கையறிந்து எங்களைப் பிடித்து ஸ்வாதீனம் செய்யத்தெரியும். 'த்ராகீயஸீ' என்பதற்கு இன்னும் அதிக நீளமான என்பது பொருள். நான் எத்தனை தூரம் ஓடினாலும், நீ அதைவிட அதிக நீளமான வலை (கயிறு) ஆகி எங்களைப் பிடிக்க வேணும். நான் ஓடும் தூரத்தைக் காட்டிலும் அதிகமாக நீளும் (குணம் என்பது கயிறுக்கும் பெயர்) உன் குண வலையை நீள வீசி என்னைப் பிடிக்கவேணும். 'த்ருடதரா' என்பதற்கு இன்னும் அதிகக் கெட்டியான என்று பொருள். நீ எங்கள் தூர ஓட்டத்திலும் அதிகமாக நீண்டு பிடிக்கும் பொழுதும், பலமாய்த் திமிரி கயிறு வலையை அறுத்து ஓடப் பார்ப்போம். நீ எங்கள் பலத்திமிரைவிட கெட்டியான வலையாகவேணும். தயை மிக்க நீளமும் கெட்டியுமாக வேணும். 'பலாயிதேபி' நான் ஓடினாலும் வி என்பது அதிக தூரம் ஓடினாலும் என்பதைக் காட்டும். 'விக்ஷேபம்' என்பது எறிவதைச சொல்லும். வேட்டையில் அம்பையோ, குண்டையோ எறிவதைச் சொல்லும். இங்கே 'தயா

கடாக்ஷம்' எறியப்படுகிறது. சர விக்ஷேபமல்ல. கடாக்ஷ விக்ஷேபம் மட்டுமே என்று வேடிக்கை. பாணத்தை எறிதல் அல்ல. குளிர்ந்த தயா கடாக்ஷத்தை வீசுவதே. ராம பாணம்போல, ராம தயா கடாக்ஷமும். (95)

संतन्यमानमपराधगणं विचिन्त्य
त्रस्यामि हन्त भवतीं च विभावयामि ।
अह्नाय मे वृषगिरीशदये जहीमा-
माशीविषग्रहणकेळिनिभामवस्थाम् ॥ ९६ ॥

**ஸந்தந்யமாநமபராதகணம் விசிந்த்ய**
**த்ரஸ்யாமி ஹந்த பவதீம் ச விபாவயாமி !**
**அஹ்நாய மே வ்ருஷகிரீசதயே ஜஹீமாம்**
**ஆசீவிஷக்ரஹணகேளிநிபாமவஸ்தாம் ||**

(பதவுரை) ஸந்தந்யமாநம் - அடுக்கடுக்காய் (கட்டுக் கட்டாய்) என்னால் செய்யப்படும், அபராதகணம் – பாபச் செய்கைகளின் கூட்டத்தை, விசிந்த்ய – நன்றாய் நினைத்துப் பார்த்து, த்ரஸ்யாமி - நடுங்குகிறேன். ஹந்த – உடனே (நல்ல வேளையாய்), பவதீம் - உன்னை, விபாவயாமி ச – நன்றாக நினைக்கிறேன். வ்ருஷகிரீசதயே - வேங்கடபதியின் தயையே, ஆசீவிஷக்ரஹணகேளிநிபாம் – கொடிய விஷப் பாம்பைப் பிடித்து விளையாடுவதற்கொப்பான, இமாம் - இந்த, மே - என்னுடைய, அவஸ்தாம் – அவஸ்தையை, அஹ்நாய – உடனே, ஜஹி – கொல்லு.

“அடுக்கடுக்காய்ச் செய்யப்படும் என்னுடைய கோடிக் கணக்கான அபராதங்களை நினைத்து நினைத்து நடுங்குகிறேன். உடனே உன்னுடைய வைபவத்தை நினைத்து ஆறுதலையடைகிறேன். வேங்கடப்ரபுவின் தயையே! இப்படிக் கொடிய விஷமுள்ள பாம்பைப் பிடித்தாட்டுவது போன்ற என்னுடைய அவஸ்தையை நீ தொலைக்கவேணும்.”

(தாத்பர்யம்) ஸாஹஸத்திலிறங்காமல் என்னைத் தடுக்க வேண்டுமென்று உன்னை ப்ரார்த்திக்கிறேன். நீயாக விட்டுத் தொலை யென்றும் நானாக விட்டுத்தொலைக்க முடியவில்லை, விஷயமென்னும் விஷப்பாம்பைக் கையிற்பிடித்து முத்த மிட்டு விளையாடும் ஸாஹஸத்திலேயே ருசியுடையவனு யிருக்கிறேன். பாபங்களைச் செய்துவிட்டு, என்ன கொடுமை செய்தேன், என்ன கடோரத் தண்டனை வருமோ என்று நடுங்குகிறேன். உடனே எல்லாவற்றையும் பொறுக் கும் உன் ப்ரபாவத்தை நினைத்துத் தேறுகிறேன். இப்படி பயத்திற்கும் தேறுதலுக்கும் நடுவில் நான் இருந்து திண் டாடுகிறேன். விஷப்பாம்பைத் தொட்டுப் பிடித்து விளை யாடுவதில் எனக்குள்ள ருசியை நீதான் தொலைக்கவேணும், விஷப்பாம்பு என்னைக் கொல்லுவதற்கு முன் அந்தப்பாம் போடு விளையாடுவதில் என் ருசியை நீ கொன்றுவிடவேண்டு மென்று வேடிக்கையாகக் காட்டுகிறார். 'ஜஹி' என்பதற்குக் 'கொல்லு' என்று பொருள். பாம்பு விளையாட்டு ருசியை நீ கொல்லாவிடில், பாம்பு உன் குழந்தையாகிய என்னைக் கொன்றுவிடும். பாம்பைப் பிடித்துக்கொண்டு விளையாடு மறியாக்குழந்தை. அந்த விளையாட்டு ருசியை விடும்படி தாயாகிய நீ தான் செய்யவேணும். (96)

औत्सुक्यपूर्वमुपहृत्य महापराधान्
मातः प्रसादयितुमिच्छति मे मनस्त्वाम् ।
आलिह्य तान्निरवशेषमलब्धतृप्ति-
स्ताम्यस्यहो वृषगिरीशधृता दये त्वम् ॥ ९७ ॥

ஔத்ஸுக்யபூர்வமுபஹ்ருத்ய மஹாபராதாந்
மாத: ப்ரஸாதயிதுமிச்சதி மே மநஸ்த்வாம் ।
ஆலிஹ்ய தாந்நிரவசேஷமலப்ததத்ருப்தி:
தாம்யஸ்யஹோ வ்ருஷகிரீசத்ருதா தயே த்வம் ॥

(பதவுரை) மாத:-தாயே, மே-என்னுடைய, மந:-மனது, மஹாபராதான்-கொடிய அபராதங்களை, ஔத்ஸுக்ய

பூர்வம்- மிக்க ஆசையோடு, உபஹ்ருத்ய (உனக்கு) ப்ரீதியான உபஹாரமாக (உன்னிடம்) கொண்டு ஸமர்ப்பித்து, த்வாம்-உன்னை, ப்ரஸாதயிதும்-ஸந்தோஷப்படுத்த, இச்சதி-ஆசைப்படுகிறது. தான்-அந்த உபஹாரங்களை, நிரவசேஷம்-துளிக்கூட பாக்கியில்லாமல், தயே-தயையே, வ்ருஷகிரீசத்ருதா-ஸ்ரீநிவாஸனால் தரிக்கப்பட்ட, த்வம் - நீ, ஆலிஹ்ய-நக்கி சாப்பிட்டுவிட்டு, அலப்ததிருப்தி:-திருப்தியடையாமல், அஹோ தாம்யஸி - நீ வருத்தப்படுகிறாயே (தவிக்கிறாயே).

"அம்மா! உனக்கு ப்ரீதியான உபஹாரங்களாக மிகவாசையாய் நான் என் கொடிய பாபங்களை ஸமர்ப்பித்து உன்னை ஸந்தோஷப்படுத்த இச்சிக்கிறேன். வேங்கடபதியின் தயையே! நீ அதையெல்லாம் துளிக்கூட சேஷம் வைக்காமல் லேஹநம் செய்து சாப்பிட்டுவிட்டு (வயிறு நிரம்பவில்லையே என்று) கஷ்டப்படுகிறாயே."

(தாத்பர்யம்) அம்மா! நீ எனக்குத் தாயானபடியால் விச்வோபகாரங்களையும் நீ எனக்குச் செய்கிறாய். பெற்ற பிள்ளையாகிய நான் என் தாயாருக்கு மிக்க ஆவலுடன் முன் செய்த தீவினைகளனைத்தையும் உபஹாரமாக ஸமர்ப்பித்து உன்னை த்ருப்தி செய்ய ஆசைப்படுகிறேன். தாய்க்குக் குழந்தைகளுக்கு விரோதிகளான பாபநோய்களைத் தொலைப்பதிலும் மிக்க ஸந்தோஷமுண்டோ? நான் ஸமர்ப்பித்த பாபங்களையெல்லாம் நீ மிச்சமில்லாமல் உண்டு (ஸம்ஹாரம் செய்து, கொன்று) இத்தனை தானா பாபம், இன்னுமில்லையா என்று அத்ருப்திப்படுகிறாய்; நம் அருமைக் குழந்தை இவ்வளவு மட்டும்தானா உணவு ஸம்பாதித்துக் கொடுத்தான் என்று அத்ருப்தியினால் வருத்தப்படுகிறாய். நான் உன்னைத் திருப்தி செய்ய ஆசைப்பட்டும் உனக்குப் போதுமான உன் பசி தீர உணவு கொடுக்க என்னாலியலவில்லை. 'உலகமுண்ட பெருவாயா' என்ற விடத்தில்போல, இங்கே 'உண்பது' என்பதற்கு 'கொல்லுவது, ஸம்ஹரிப்பது,

இல்லாமற் செய்வது' என்பதுபொருள். ப்ரளயத்தில் பெருமாள் உலகத்தை உண்பதுபோல, நீ என் பாபங்களை யெல்லாம் உண்டு ப்ரளயம் செய்கிறாய். நீ செய்யும் பாப ப்ரளயத்தில் தொலையாமல் மிஞ்சும் பாபலேசமும் கிடையாது. இதெல்லாம் சரணாகதிக்கு முன் செய்த தீவினைகள் விஷயம். நான் என் தாயாகிய உன்னை திருப்தி செய்ய வேண்டு மென்று எத்தனையோ காலமாகத் தேடிய கர்மஸம்பத்தை யெல்லாம் உனக்கு ஸமர்ப்பித்தும், உனக்கு த்ருப்தியாக வில்லையோ? ஐயோ பசி தீரவில்லையே என்று பசியினால் தபிக்கிறாய் என்று வேடிக்கையாகப் பேசுகிறார். உலக முண்ட பெருவாயன் வயிற்றிலும் உன் வயிறுபெரிது.

जह्याद्वृषाचलपतिः प्रतिघेऽपि न त्वां
घर्मोपतप्त इव शीतलतामुदन्वान् ।
सा मामरुन्तुदभरन्यसनानुवृत्ति-
स्तद्वीक्षणैः स्पृश दये तव केलिपद्मैः ॥ ९८ ॥

**ஜஹ்யாத் வ்ருஷாசலபதி: ப்ரதிகேऽபி ந த்வாம்**
**கர்மோபதப்த இவ சீதளதாமுதந்வான் ।**
**ஸா மாமருந்துதபரந்யஸநாநுவ்ருத்தி:**
**தத்வீக்ஷணை: ஸ்ப்ருச தயே தவ கேளிபத்மை: ॥**

(பதவுரை) வ்ருஷாசலபதி:- வேங்கடமலை அரசன் கர்மோபதப்த:- கடும் வெய்யிலினால் காயப்பட்ட, உதந்வான்- ஸமுத்ரமானது, சீதளதாம் இவ- தன்னுடைய குளிர்ச்சி ஸ்வபாவத்தை (விடாமலிருப்பது போல்) ப்ரதிகேபி- மிக்க கோபச்சூடுவந்த போதும், த்வாம்- உன்னை, ந ஜஹ்யாத்- விடமாட்டார். ஸா - அப்படிக் கொத்த நீ, அருந்துத பரந்யஸநாநுவ்ருத்தி:- மறுபடியும் உன்னைச் சரண்புகுந்து காப்பாற்ற வேண்டுமென்று நான் ப்ரார்த்திப்பதை அஸஹ்யமாக நினைப்பவளாகிய (நீ) தவ- உன்னுடைய, கேளிபத்மை:- விளையாடும் தாமரைப் பூக்களான, தத் வீக்ஷணை:- ஸ்ரீநிவாஸனுடைய (தாமரை மலர்) கடாக்ஷங் களால், தயே- தயையே, மாம்- என்னை, ஸ்ப்ருச- தொடு.

"எப்படி மஹாஸமுத்ரமானது வெய்யில் எத்தனை கடுமையாயடித்தாலும் தன்னுடைய ஸ்வபாவமான குளிர்ச்சி குணத்தை விடாதோ, அப்படியே வேங்கடமலையரசன் எத்தனை விக்ரங்களை நாங்கள் செய்து கோபச்சூடு உண்டாக்கினாலும் தன் குளிர்ச்சி ஸ்வபாவமான உன்னை (தயையை) விடுகிறதில்லை. மறுபடியும் உன்னை உன் குழந்தையாகிய நான் ரக்ஷண ப்ரார்த்தனை செய்வதை அஸஹ்யமென்று நினைத்துப் பொறுக்கமாட்டாதவளான நீ உனக்கு விளையாடும் தாமரைப்பூக்களான உன் நாதன் தாமரைக் கடாக்ஷங்களால் என்னைத் தொடவேணும்".

(தாத்பர்யம்) நான் எத்தனை சூடான கோபமூட்டத்தக்க செய்கைகளைச் செய்தாலும் அந்த உஷ்ணமெல்லாம் ஸமுத்ரஜலம்போல் அகண்டமாய் அலைத்துக்கொண்டிருக்கும் உன் வெள்ளத்தால் தணிந்துபோகிறது. பெருமாள் ஸமுத்ரத்தால் சூழப்பட்டிருக்கிறார். தயையென்னும் குளிர்ந்த பெருங்கடல் அவரைச் சூழ்ந்துகொண்டிருக்கிறது. ஸமுத்ரத்தின பேரில் எத்தனை வெய்யிலடித்தாலும், அது குளிர்ச்சியை விட்டுக்கொடுப்பதில்லை. ஸமுத்ரம்போன்ற தயாஜலத்தோடு கூடியவர் ஸ்ரீநிவாஸன். கடல்போல தயாஜலமிருப்பதால் உஷ்ணம் படுகையிலேயே வராமல் தடுத்துக் குளிர்ச்சியான தயாஸ்வபாவமே மாறாமல் காப்பாற்றப்படுகிறது. உன் குழந்தைகளாகிய நாங்கள் இரண்டாம்தரம் எங்கள் ரக்ஷணபாரத்தை நீதானேற்றுக் கொண்டு எங்களை ரக்ஷிக்கவேண்டுமென்று பிரார்த்திப்பதை நீ பொறுக்கமாட்டாய். எங்கள் கொடிய குற்றங்களைப் பொறுப்பாய், அதெல்லாம் உனக்கு ஸஹ்யம். ஆனால் இரண்டாம்தரம் பிரார்த்தித்தால் அது உனக்கு அஸஹ்யம், அதை நீ பொறுக்கமாட்டாய். ஒருதரம் த்ரௌபதி ராஜ ஸபையில் கோவிந்தா என்று அலறினது பெருமாளைப் பெருங் கடனாளியாக்கியது. ஒருதரம் பிரார்த்தித்ததே நெஞ்சில் பெரும் சுமையாய்க் கனத்திருக்கும்போது, இரண்டாம்தரம் தாயான தயையை பிரார்த்தித்தால் அது

புண்ணில் ஊசியால் குத்துவதுபோல் அஸஹ்யமாகிறது. மறுபடியும் பிரார்த்திக்கவேண்டிய ச்ரமத்தை உனக்கும் வைக்காமல் நீ விளையாடுவதற்குத் தாமரைப் பூக்களான ஸ்ரீநிவாஸனுடைய தாமரைக் கண்கள் சொரியும் கடாக்ஷத் தாமரைப் பூக்கள் என் பேரில் விழுந்து என்னைத் தொடும்படிச் செய்யவேணும். (98)

दृष्टेऽपि दुर्बलधियं दमनेऽपि दृप्तं
स्नात्वापि धूलिरसिकं भजनेऽपि भीमम् ।
बध्वा गृहाण वृषशैलपतेर्दये मां
त्वद्वारणं स्वयमनुग्रहशृङ्खलाभिः ॥ ९९ ॥

**த்ருஷ்டேऽபி துர்பலதியம் தமநேऽபி த்ருப்தம்**
**ஸ்நாத்வாபி தூளிரஸிகம் பஜநேऽபி பீமம் ।**
**பத்வா க்ருஹாண வ்ருஷசைலபதேர் தயே மாம்**
**த்வத்வாரணம் ஸ்வயமநுக்ரஹச்ருங்கலாபி: ॥**

(ஹே) வ்ருஷசைலபதேர் தயே-வேங்கடமலை அரசனின் தயையே, த்ருஷ்டேபி-கண்ணால் (உறுத்திப்) பார்க்கையிலேயே, துர்பலதியம் கலங்கும் புத்தியுடையதும் (உடையவனும்), தமநேபி-ஈட்டியைக் காட்டி அடக்கும்போதும், த்ருப்தம்-கொழுப்புடையதும் (உடையவனும்) ஸ்நாத்வாபி ஸ்னானம் பண்ணிவைத்த பிறகும், தூளி ரஸிகம்-புழுதியைப் பூசிக்கொள்வதில் ரஸமுடையதும் (உடையவனும்), பஜநேபி ப்ரீதியோடு வேண்டிய பணிவிடையெல்லாம் செய்து ஆராதிக்கையிலும், பீமம்-பயத்தை உண்டாக்கி பயங்கரமாக இருக்கும், த்வத்வாரணம்-உன் யானையான (உன்னை வேண்டாமென்று தடுக்கும்) மாம்-என்னை, ஸ்வயம்-நீயாகவே, (நான் வேண்டாமென்று தடுத்தாலும்) அநுக்ரஹ ச்ருங்கலாபி:-அநுக்ரஹமென்னும் சங்கிலிகளால், பத்வா-கட்டி, க்ருஹாண-பிடித்து உன் வசமாக்கு.

"துஷ்டயானையானது, கோபத்துடன் யானைப்பாகன் பார்த்தால் பயப்படுகிறது. சில சமயம் அவன் அடக்கியும்

கொழுப்பால் அடங்காமலும், குளிப்பாட்டியும் புழுதியை வாரி மேலேபோட்டுக் கொண்டும் அன்புடன் வேண்டியதைச் செய்தாலும் பயத்தைக் கொடுத்துக்கொண்டு மிருககும் மதம்பிடித்த யானையை அதற்குத் தெரியாமல் பின்புறமாக வந்து கெட்டியான சங்கிலிகளால்கட்டி தன் வசமாக்குவது போல் உன் கடாக்ஷம் விழுந்தும் புத்திக் கலக்க முள்ளவனும், நீ அடக்கினும் அடங்காமல் கர்வம் கொண்டவனும், கங்கை முதலிய புண்யநதிகளில் நீராடியும் பாபச்சேற்றைப் பூசிக்கொண்டும் எனக்கு ஹிதத்தைச் செய்தும் விஷயங்களை நினைத்து ஓடுகின்ற, வேண்டாமென்று உன்னைத்தடுக்கின்ற என்னை, தயையே! நீ தானாகவே அனுக்ரஹத்தால் கட்டி உன் வசமாக்கவேண்டும்".

(தாத்பர்யம்) நான் துஷ்டத்தனம் பண்ணினும் உனக்கு விளையாட்டுத் தாமரைகளான ஸ்ரீநிவாஸன் கடாக்ஷங்களால் என்னைத்தொட்டு உங்கள் வசமாக்கு என்றார். நீயே நீண்ட வலையாக நீண்டு என்னைப்பிடித்து உங்கள் வசமாக்கு என்றார். யானையைக் கட்டிப்பிடித்து பழக்கி வைத்திருந்தாலும், எந்த வேளையில் மதம் பிடிக்குமோ, என்ன துஷ்டத்தனம் பண்ணுமோ, அடங்காமல் நம்மையே தாக்குமோ என்று நடுக்கமாகவேயிருக்கும். அதுபோன்ற யானையாகத் தம்மை வர்ணிக்கிறார். கடாக்ஷத்தால் தொட்டு வசப்படுத்த முடியாது. வலை வீசிப்பிடிக்க முடியாது. மதம பிடித்தால் பின்னாலே தெரியாமல் வந்து கெட்டிச் சங்கிலிகளால் கட்டித்தான் அடக்கி நிறுத்த வேணும். காட்டிலேயுள்ளதை அரண்மனைக்குக்கொண்டு வந்து என்ன உபசாரம் செய்து வந்தாலும் யானை காட்டு ஸுகஸஞ்சாரத்தை நினைக்கும், இங்கேயிருப்பதையே வெறுக்கும். கோபமடையும், திமிரி ஓடப்பார்க்கும். அடிக்கடி மதமும் பிடிக்கும். ஒரு ஸமயத்தில் யானைப்பாகன் கண்ணாலே விழித்து மிரட்டினாலும், கோழைமனதாய் பயப்படும். நீ கடாக்ஷித்தாலும் நான் மனோதைர்யமில்லாமல்

நல்லொழுக்கத்தில் உறுதியில்லாமல் வழுவுகிறேன். யானையை மிரட்டி அடக்கினாலும் ஓர் ஓர் ஸமயத்தில் அடங்காமல் கொழுப்பாகவேயிருக்கும். அதுபோல நீ அடக்கி வைத்திருந்தாலும் ஓர் ஓர் ஸமயத்தில் அடங்காமல் கொழுப்படைவேன். நன்றாய்க் குளிப்பாட்டி உடம்பை சுத்தம் செய்தாலும் திரும்பவும் ஆசையாய்ப் புழுதியை உடனே மேலே வாரியிறைத்துக்கொள்ளும். ஸ்ரீநிவாஸன் தயையாகிய கங்கா நதியில் நான் ஸ்நாநம் செய்தபிறகும், பாப ருசியால் பாபச் சேற்றைப் பூசிக்கொள்ளப் பார்ப்பேன். யானைப்பாகன் எத்தனை ஆதரவோடும் லாலனை செய்து வந்தாலும், நடுவே நடுவே திடீரென்று பயங்கரமாகி பயத்தை விளைவிக்கும். நான் இப்படிக்கொத்த யானை ஸ்வபாவமாயிருந்தாலும், திரும்பவும் விஷயக்காடுகளை நினைத்துக் கொண்டு ஓடப்பார்த்தாலும், துஷ்டத்தனம் செய்யப்பார்த்தாலும், எனக்கு மதம் பிடித்தாலும், உன் யானையானதால் நானுன்னை வேண்டாமென்று விலக்கினாலும், நீ எனக்குத் தெரியாமல் பின்னால் வந்து என்னை சங்கிலிகளால் கட்டி உன் வசமேயிருக்கச் செய்யவேணும். நல்லொழுக்கத்தில் நிறுத்தவேணும். 'த்வத்வாரணம்' என்பதற்கு இரண்டு பொருள். 1. உன் யானையை 2. உன்னை வேண்டாமென்று தடுப்பவனை. "அநுக்ரஹம்" என்பதற்கு அனுக்ரஹ கடாக்ஷமென்றும், பின்னால் வந்து க்ரஹிப்பது என்றுமிரண்டு பொருள். முன்னாலே சங்கிலியைக் கொண்டுவந்து பிடிக்க முடியாது. மலையரசனின் ஆட்கள் யானைக்காடுகளிலிருக்கும் யானைகளைப் பிடித்து அரண்மனையில் பழக்கி அடக்கிக் கட்டிவைத்திருப்பார்கள். மதம் பிடிக்கும்போது அதைச் சங்கிலிகளால் பிடித்து ஓடாமல் துஷ்டத்தனம் செய்யாமல் கட்டி வைக்கவேணும். முன் ச்லோகத்தில் ஸாஹஸத்தில் ருசியைத் தொலைக்க வேணும் என்றார். என் விஷய ருசியைத் தொலைக்கக் கூடாமற்போனாலும், துஷ்டத்தனம் செய்யாமல் என்னைக் கெட்டிச் சங்கிலிகளால கட்டி வைக்க வேணுமென்கிறார். முன் சுலோகத்தில் விஷயம்

க கூறப்பட்டது. விஷயம் மதயானை யேயும்காடென்றும், விஷயாரு மத்தகஜத்தின் மதமென்றும் கூறப்படுகிறது. (99)

नातः परं किमपि मे त्वयि नाथनीयं
मातर्दये मयि कुरुष्व तथा प्रसादम् ।
बद्धादरो वृषगिरिप्रणयी यथासौ
मुक्तानुभूतिमिह दास्यति मे मुकुन्दः ॥ १०० ॥

**நாத: பரம் கிமபி மே த்வயி நாதநீயம்**
**மாதர்தயே மயி குருஷ்வ ததா ப்ரஸாதம் ।**
**பத்தாதரோ வ்ருஷகிரிப்ரணயீ யதாஸௌ**
**முக்தாநுபூதிமிஹ தாஸ்யதி மே முகுந்த: ॥**

(பதவுரை) மாதர்தயே– அம்மா தயையே, மே-எனக்கு த்வயி-உன்னிடத்தில், அத:பரம்–இதற்குமேல் (நான் கேட்கப்போகிறதற்குமேல்) நாதநீயம்–பிரார்த்திக்க வேண்டியது, கிமபி ந-ஒன்றுமில்லை. வ்ருஷகிரிப்ரணயீ-வேங்கடமலை வாஸத்தில் ப்ரியமுடைய, அஸௌ முகுந்த:-மோக்ஷமளிக்கும் இந்த ஸ்ரீநிவாஸன், பத்தாதர: – என்னிடம் ப்ரீதிவைத்து, முக்தாநுபூதிம் – நித்யவிபூதியில் முக்தர்கள் அநுபவிக்கும் ஆனந்தாநுபவத்தை, இஹ – இங்கே, யதா தாஸ்யதி – எப்படிக்கொடுப்பாரோ, ததா – அப்படியே, மயி – என்னிடம், ப்ரஸாதம் – தயவை, குருஷ்வ – நீ செய்யவேணும்.

" அம்மா தயையே, நான் இதோ பிரார்த்திக்கப்போவதற்குமேல் உன்னைக் கேட்கவேண்டியது எனக்கொன்றும் இல்லை. வேங்கடமலையில் மிக்க ஆதரவுடன் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீநிவாஸனென்னும் முகுந்தன் என்னிடத்தில் ப்ரீதி வைத்து இங்கேயே (திருமலையிலேயே) எனக்குத் திவ்யமான பரமபதத்தில் முக்தர்கள் அநுபவிக்கும் ஆனந்தத்தை எப்படி அநுபவிக்கக் கொடுப்பாரோ அப்படி நீ என் விஷயத்தில் அநுக்ரஹிக்கவேணும் "

(தாத்பர்யம்) இது நூறுவது ச்லோகம். சதகம் முடிகிறது. நாடகங்களின் முடிவில் 'இன்னும் என்ன ப்ரியம் உனக்குச் செய்யவேண்டும்' என்று அநுக்ரஹிக்கும் பெரியாரொருவர் கேட்பர். ஸ்ரீஸ்துதியில் 'கிந்தே பூய: ப்ரியமிதி கில ஸ்மேரவக்த்ரா விபாஸி' – 'இன்னும் என்ன ப்ரியத்தை உனக்குச் செய்யவேண்டும்' என்று அபேக்ஷிக்கிருயென்று கேட்பதுபோல் புன்னகையோடு ஸேவை ஸாதிக்கிருய் என்று ஸாதித்தார். இங்கும் தயாதேவி பெரிய பிராட்டியாரேயாதலால் அப்படியே 'இன்னும் என்ன வேண்டும்' என்று கேட்கிறதுபோல அபிப்ராயத்தைக் காட்டி 'இதொன்றுதான் கேட்கிறேன் இதற்குமேல் ஒன்றும் வேண்டாமம்மா' என்கிருர். பெரியபெருமாளை அபீதிஸ்தவத்தில் 'உம் திருமேனியை ஸர்வகாலமும் ஸேவித்துக்கொண்டு, இந்தப் பூலோக வைகுண்டத்திலேயே முக்தர்களின் ஆனந்தத்தையும் அநுபவித்து வாழவேணும் என்று பிரார்த்திக்கிறேன். மற்றென்றும் வேண்டேன்' என்ருர். அங்கேயும் 'முகுந்த' என்று பெருமாளை அநுபவித்தார். அங்கே 'புவிமுகுந்த' என்று சேர்த்துப் படித்ததால் பூலோகத்தில் பெரியபெருமாள் அச்சுவை தரும் முகுநதனென்று திருவுள்ளம். முகுந்தனென்பதற்கு மோக்ஷமளிப்பவன் என்பது பொருள். மோக்ஷமென்பது எல்லையற்ற ஆனந்தம். பூமியில் அதை அளிக்கும் முகுந்தன் புவிமுகுந்தன் இப்புவியிலேயே முக்தர் நிர்வ்ருதியடைவேனாக என்பதும் கருத்துத்தான். இரண்டிடத்திலும் ஒட்டிக் கொள்ளலாம். அதுபோல் இங்கும் 'இஹ முகுந்த:' என்று ஒட்டிக்கொள்ளலாம். 'அச்சுவை பெறினும் வேண்டேன்' என்றபடி அநுபவம். "யதா தம் புருஷவ்யாக்ரம் ... ... ... ததா குரு தயாம மயி" – "சோகத்தால் நொந்த என் அங்கங்களால் எப்படி என் நாயகனை ஆசைதீரத் தழுவுவேனோ, அப்படி நீர் என் விஷயத்தில் தயைசெய்ய வேண்டும்" என்று ஸீதை எத்தனை ஆர்த்தியோடு ப்ரார்த்தித்தாளோ அப்படியே தமக்கு திருவேங்கடமுடை

யான் ஸம்ச்லேஷத்தில் ஆர்த்தி என்பதை 'யதா ததா ப்ரஸாதம் மயி குருஷ்வ' என்பதால் ஸூசிக்கிறார். தாம் வாஸம் செய்யும் அசேதநமான கிரியினிடமே மிக்கப் பிரணயம் செய்பவர், நான் மனமார ஆசைப்பட்டால் என்னிடத்தில் ப்ரணயம்கொண்டு, நீங்காத ஆதரமுடையவராயிராரோ என்பதை 'பத்தாதரோ வ்ருஷகிரிப்ரணயீ' என்பதால் ஸூசிக்கிறார். 'ஆஸௌ' என்பதால் இந்த நூறு சுலோகங்களைக் கேட்டருளிய ஸ்ரீநிவாஸன் ஆநந்த பரவசராய் ஸேவை ஸாதித்து எதிரே நிற்கிறாரென்னும் காட்சியின் ஸூசனம், 'அம்ருத இஹ பவதி' என்ற ச்ருதியை அநுஸரித்து 'அம்ருத இஹபவாமி' 'இங்கே திருமலையிலேயே அம்ருதனாகக்கடவேன்' என்று பிரார்த்தனை. அவன் நம்மிடம் ஆதரபந்தம் செய்வதால், நம் பந்தம் எல்லாம் உடனே தொலையும் என்றும் ஸூசனம். நூறு ச்லோகம் பாடி முடிகையில் 'மே மே' என்று தம் விஷயத்தில் ஓர் பஹுமதி தம்மை அறியாமல் உண்டாகிறது. ஸ்தோத்ரபாரம் தாண்டியதனால் வந்த தைர்ய ஸந்தோஷங்கள். 'தாயே' 'தயையே' என்று இங்கே முடிவில் கூப்பிடுகிறார். (100)

निःसीमवैभवजुषां मिषतां गुणानां
स्तोतुर्दये वृषगिरीशगुणेश्वरीं त्वाम् ।
तैरेव नूनमवशैरभिनन्दितं मे
सत्यापितं तव बलादकुतोभयत्वम् ॥ १०१ ॥

நிஸ்ஸீமவைபவஜுஷாம் மிஷதாம் குணாநாம்
ஸ்தோதுர்தயே வ்ருஷகிரீசகுணேச்வரீம் த்வாம் ।
தைரேவ நூநம் அவசைரபிநந்திதம் மே
ஸத்யாபிதம் தவ பலாதகுதோபயத்வம் ॥

(பதவுரை) தயே-தயையே, நிஸ்ஸீமவைபவஜுஷாம்-எல்லையற்ற வைபவத்தை (பராக்ரமத்தை) உடைய, குணாநாம்-(பெருமாளுடைய) மற்ற குணங்கள், மிஷதாம்-(கண்ணைக்கொட்டாமல்) விழித்துப் பார்த்துக்கொண்டிருக்

கையில், வ்ருஷகிரீச குணேச்வரீம் த்வாம்-வேங்கடேச்வரன் குணங்களுக்கு ஈசுவரியான உன்னை, ஸ்தோது: மே-ஸ்தோத்ரம் செய்யும் என் விஷயத்தில், தைரேவ-அந்த குணங்களாலேயே, அவசை:-அவசமாக (தம்மை அறியாமல்) அபிநந்திதம்-அபிநந்திக்கப்படுகை. (இதனால்) தவ பலாத்-உன் பலத்தை முன்னிட்டு, அகுதோபயத்வம்-ஒருவரிடத்திலும் பயமற்றிருப்பது என்னும் நிர்பயத்வம் ஸித்திப்பது, நூநம் ஸத்யாபிதம்-நிச்சயமாய் ஸத்யமென்று மூதலிக்கப்படுகிறது.

“அம்மா தயையே! எல்லையற்ற பராக்ரமத்தை உடைய மற்ற குணங்களெல்லாம் விழித்துப் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே, வேங்கடேச்வரனுடைய குணங்களுக்கு ஈச்வரியான உன்னைத் துதிசெய்யும் என் விஷயத்தில் அவசமாக அந்தக் குணங்களாலேயே ஸந்தோஷத்தையே காட்டுவதாயிருக்கிறது. இதனால் உன் பலத்தை முன்னிட்டு ஒருவரிடத்திலிருந்தும் அஞ்ச வேண்டாதபடி ஸர்வதோ நிர்ப்பயத்வம் ஸித்திப்பது நிச்சயமாய் உண்டாக்கப்படுகிறது”.

(**தாத்பர்யம்**) சதகம் முடிந்தது. 100-ச்லோகமாயிற்று பெருமாளுடைய சக்தி, தேஜஸ் முதலிய மற்ற குணங்களெல்லாம் இந்த ஸ்தோத்ரத்தைப் பக்கத்திலிருந்து விழித்துக்கொண்டே கேட்டுக்கொண்டிருக்கின்றன, ஒரு ச்லோகங்கூட இந்த சதகத்தில் அவைகளைத் துதிக்காமல் முழுவதும் உன் துதியாக முடிந்தது. ஸர்வ சக்தித்வம், ஸர்வஜ்ஞத்வம், தேஜஸ், வீர்யம் பலம், ஐச்வர்யம் முதலிய குணங்களுக்கெல்லாம், தம்மைத் துதிக்காமலுன்னையே துதிப்பதால் கோபம் வரவில்லை. கோபமில்லாதது மட்டுமல்லாமல் முழுவதையும் எல்லா ப்ரகாரமாயும் பூர்ணமாக அபிநந்தனம் செய்கிறார்கள். ஆநந்தபரவசராய் அபிநந்திக்கிறார்கள். சிர:கம்பம் செய்துகொண்டே அனுபவிக்கிறார்கள். அவர்களுடைய வைபவம் எல்லையற்றதாயிருந்தாலும், உன்னைத்

துதித்ததால் அவர்களுக்கு ஈர்ஷ்யையேயில்லை. வ்ருஷகிரிக்கு ஈசனான பெருமாளுடைய குணங்களுக்கு நீ ஈச்வரியானதால் உன் ப்ரஜைகளான குணங்களுக்குத் தங்கள் அரசியைத் துதிக்கையில் ஈர்ஷ்யை முதலியதற்கு ப்ரஸக்தியேயில்லை. பெருமாளுடைய ஆநந்தம் முதலிய குணங்களையறிந்து உபாஸித்தால், 'எக்காலும் அஞ்சுகிறதில்லை, ஒன்றுக்கும் பயப்படுவதில்லை' என்று உபநிஷத்துப் பேசுகிறது. 'ஒருகாலும், ஒருவரிடமிருந்தும், ஓரிடத்திலும் அவனுக்குப் பயமேற்படாது' என்று அபீதி ஸ்தவத்தில் சொன்னேனம்மா. அந்த அபீதி பெருமாளுடைய தயையாகிய உன்னாலேதானே உண்மையாகுமம்மா. உன் பலமில்லாமற்போனால பயத்திற்கு எல்லையிருக்குமோ, ஒழிவிருக்குமோ. அபராதிசக்ரவர்த்தியான எங்களுக்குக் குற்றங்களைப் பொறுப்புவிக்கும் உன் பலத்தால்தானே அச்சம் நீங்கி ஸுகமாயிருக்கலாம். பெருமாளிடமிருந்து உலகத்திற்குப் பயம். 'பீஷா அஸ்மாத்' பயத்திற்கு ஹேதுவான ம்ருத்யு, வாயு, ஸூர்யன், அக்நி, இந்திரன் முதலிய யாவரும் பெருமாளிடம் பயந்து நடப்பவர்கள். பெருமாள் திருவுள்ளத்திற்கு விதேயராய் நடப்பவர். பெருமாள் மனதிற்குள் புகுந்திருக்கும் உன் பலமிருக்கையில் பயத்திற்குக் காரணமில்லை. பெருமாளுடைய மற்ற குணங்களிடத்திலிருந்தும் பயமில்லை; ஏனெனில் நீ அந்தக் குணங்களுக்கு ஈச்வரி, அவர்கள் உனக்கு வச்யமாயிருப்பவர். உன்னைப்பற்றிப் பாடிய துதியில் அவர்கள் மகிழ்ந்து பரவசராகி என்னிடத்தில் மிக ஸந்தோஷப்படுகிறார்கள். இனி எனக்கு என்ன பயம்? (101)

अद्यापि तद्वृषगिरीशदये भवत्या-
मारम्भमात्रमनिदंप्रथमस्तुतीनाम् ।
संदर्शितस्वपरनिर्वहणा सहेथा
मन्दस्य साहसमिदं त्वयि वन्दिनो मे ॥ १०२ ॥

அத்யாபி தத் வ்ருஷகிரீச தயே பவத்யாம்
ஆரம்பமாத்ரமநிதம்ப்ரதமஸ்துதீநாம் ।
ஸம்தர்சிதஸ்வபர நிர்வஹணு ஸஹேத
மந்தஸ்ய ஸாஹஸமிதம் த்வயி வந்திநோ மே ॥

(பதவுரை) வ்ருஷகிரீசதயே — வேங்கடமலை ப்ரபுவின் தயையே, பவத்யாம் — உன் விஷயத்தில், அநிதம்ப்ரதம ஸ்துதீநாம் — தமக்கு முந்தியதென்பதில்லாத அநாதிகளான வேதங்களென்னும் துதிகளுக்கும், அத்யாபி - இன்றைக்கும், ஆரம்பமாத்ரம் தத் — துதிக்க ஆரம்பித்ததோடு மட்டும் நிற்கவேண்டியதான இருப்பே (அமைந்தது) (அப்படிக் கொத்த வர்ணனைக்கெட்டாத மஹிமையையுடைய), த்வயி — உன் விஷயத்தில், மந்தஸ்ய — மந்தபுத்தியான, வந்திநோ மே — (உன்) ஸ்தோத்திரம் பாடும் வைதாளிகனான என்னுடைய, தத் இதம் ஸாஹஸம் — அப்படிக்கொத்த (பொறுக்கத்தகாத) இந்த ஸாஹஸ கார்யத்தை, ஸந்தர்சித ஸ்வபர நிர்வஹணு - பிறரைக் குற்றம் பொறுக்கச் செய்விப்பவளும், தன்னையும குற்றம் பொறுக்கச் செய்விப்ப வளுமாக உன்னுடைய இரண்டுவித ஸாமர்த்யத்தைக் காட்டிக்கொண்டு, ஸஹேதா: — பொறுப்பாயாக.

"திருவேங்கடமுடையான் தயையே! இன்று ஏற்பட்டது என்பதில்லாமல் அநாதிஸ்தோத்ரங்களான வேதங்களும் ஆரம்பத்தோடு நின்று இன்றைக்கும் ஒரு அடிகூட நகரமாட்டாமல் தொடங்கினதோடு நிற்பதாயிருக் கிறது. அப்படிக்கொத்த உன் விஷயத்தில் புத்திக்குறைவு உள்ள நான் இப்படித் துதித்த ஸாஹஸத்தை நீயே பொறுத்தருளவேண்டும். பிறர் விஷயத்தில் செய்யப்படும் குற்றங்களை நீ தயையாக அவர்கள் மனதில் புகுந்து பொறுப்பிப்பதுபோல், நீயே உன் விஷயத்தில் உன் துதி பாடகனான நான் செய்த இப்பெரும் குற்றத்தை உன்னையே பொறுக்கும்படி செய்துகொள்ளவேண்டும். பிறரைப் பொறுக்கச் செய்வதற்கு நீ உதவுவதுபோல் உன்னைப் பொறுக்கச்செய்யவும் நீயே உதவுவாயாக."

(தாத்பர்யம்) காளிதாஸர் ரகுவம்சத்தின் ஆரம்பத்தில் தம்மை 'மந்தன்' என்று பேசினார். இங்கே ஸ்வாமி அப்படியே தம்மை 'மந்தன' என்கிறார். எல்லாக் கொடிய குற்றங்களையும் தயை பொறுத்துவிடுவாள் என்றேன். தயையைத் துதிக்க ஆரம்பித்து நூறு பாட்டுக்கள் நீளமாக மிகத் துணிச்சலாய்ப் பாடித் துதிசெய்துவிட்டேன். வேதங்கள் அனுதியான பகவத்குண ஸ்தோத்ரங்கள். அவைகளுக்கு முந்திய ஸ்தோத்ரங்கள் கிடையாது, வேதங்களே ஸர்வ விஷயங்களையுமறிந்து நமக்கு அறிவிக்கச் சக்தியுடையன. அவைகள் ஆனந்தம் முதலிய பகவத்குணங்களை துதிக்க ஆரம்பித்து "வாக்குகளும் மனமும் எட்ட யோக்யதையில்லாமல ஆரம்பித்ததோடு நின்றுவிட்டுத் திரும்பிவிடுகின்றன" என்று கைவாங்கி ஊமையாயின. அப்படிக்கொத்த பகவத்குணங்களில் சிறந்தவளான உன்னை அல்பபுத்தியான நான் துதிக்க ஆரம்பித்ததே ஸாஹஸம். ஆரம்பிததாலும் வேதஙகளும ஆரமபத்தோடு கைவாங்கின விஷயமே எனபதை நினைதது அச்சப்பட்டும் நிறுத்திவிடாமல் நூறு பாசுரங்கள் நீளமாகப் பிதற்றிவிட்டேனே. இதனினும் கொடிய ஸாஹஸம், பெரிய அபராதம் உணடோ? நான் எத்தனையோ தீவினைகளை முன்பு செய்தேன் என்று முன்பு சொன்னேன், அதையெல்லாம பொறுக்க வேண்டும் எனறு உனனைப் பிரார்த்தித்தேன். நீயும பொறுத்து விட்டாய், பெருமாள் விஷயத்திலும் அடியார் விஷயத்திலும்செய்த அஸஹ்யாபசாரங்களை எல்லாம் நீ பொறுப்பிக்கச் செய்யவேண்டும் என்று உன்னைப் பிரார்த்தித்தேன். அதையெல்லாம் நீ அவர்கள் உள்ளத்தில் புகுந்து பொறுப்பித்தாய். உன் விஷயமாக நான் செய்த இக்கொடிய ஸாஹஸத்தைப் பொறுப்பிக்க நான் யாரைக் கூப்பிடுகிறது. தயையான நீ பிறர் மனதில புகுந்து குற்றங்களை பொறுக்கச்செய்வாய். உன் விஷயத்திலேயே கொடிய குற்றத்தைச் செய்தால், அதில் வேறு யாா வந்து உனக்கு சிபாரசு செய்யக்கூடும். அம்மா, உன் விஷயமான குற்றத்தைப்பொறுக்க

உன்னைத்தானே பிரார்த்திக்கக்கூடும். தயைக்கு சிபார்சு செய்ய இன்னொரு தயாதேவியில்லையே. உனக்கு நீயேதான் சிபார்சு செய்து உன்னைப் பொறுக்கச் செய்யவேணும். 'ஸ்வபர நிர்வஹணம்.' இரண்டுபொருள்களை 'ஸம்பந்தம்' என்னும் தர்மம் சேர்த்துவைக்கும். அந்தப் பொருள்களோடு 'ஸம்பந்தம்' என்னும் தர்மத்தைச்சேர்த்துவைக்க வேறொரு 'ஸம்பந்தம்' என்னும் தர்மத்தைத் தேடமாட்டார். புறப் பொருள்களைக் கூட்டிவைக்கும் சக்தியுடைய 'ஸம்பந்தம்' தன்னையும் தானே கூட்டி வைத்துக்கொள்ளும், இந்த சக்தியை 'ஸ்வபர நிர்வஹணம்' என்பர். தயை தனக்கு இந்த சக்தியுண்டென்று காட்ட வேண்டுமென்கிறார். 'நிர்வஹணம்' என்பது பலஸித்தியான நிறைவேறுதலைச் சொல்லும். ஸ்தோத்ரம் நிர்வஹணமாயிற்று. 'வந்தி' என்று அரண்மனைகளில் துதி பாடுகிறவருக்குப் பெயர். நான் உங்கள் அரண்மனையில் உங்கள் பெருமையைக் கானம் செய்யும் தொழிலில் நீடித்த சேவகமுடையவன். திரு வேங்கடமுடையான் ஆராதன காலங்களில் நாதம் செய்யும் 'கண்டாமணி' யென்று என்னைப்பெரியோர் நினைக்கிறார்கள். நான உன்னுடைய 'வந்தி' 'பாடகன்'. ஓர் ராஜகுலத்தில் சேவகம் அமர்ந்த பாடகன். நன்றாய்ப் பாடாவிட்டாலும் ராஜா பொறுப்பது உசிதம். உன் சேவகர் பாட்டை நீ கோபிக்கலாகாது. (102)

प्रभो दये त्वदनुभावमहाम्बुराशौ
प्राचेतसप्रभृतयोऽपि परं तटस्थाः ।
तत्रावतीर्णमतलस्पृशमाप्लुतं मां
पद्मापतेः प्रहसनोचितमाद्रियेथाः ॥ १०३ ॥

ப்ராயோ தயே த்வதநுபாவமஹாம்புராசௌ
ப்ராசேதஸ ப்ரப்ருதயோऽபி பரம் தடஸ்தா: ।
தத்ராவதீர்ணமதலஸ்ப்ருசமாப்லுதம் மாம்
பத்மாபதே: ப்ரஹஸநோசிதமாத்ரியேதா: ॥

(பதவுரை) தயே-அம்மா தயையே, த்வதநுபாவ மஹாம் புராசௌ-உன் மஹிமை யென்னும் மஹா ஸமுத்திரத்தில் (அதன் விஷயத்தில்) ப்ராசேதஸப்ரப்ருதயோபி-வால்மீகி மஹரிஷி முதலியவர்களும், பரம்-கேவலம் (அடியோடு) தடஸ்தா:- உள்ளே இறங்காமல் கரையில் நிற்பவரே, ப்ராய:- என்று சொல்லவேணும். தத்ர-அதில் (அந்த ஸமுத்ரத்தில்) அவதீர்ணம்-இறங்கி, அதலஸ்ப்ருசம்-அடித் தரை அகப்படாமல், ஆப்லுதம்-மேலே மிதக்கும் (அல்லது முழுகினதும் மேலே தள்ளப்பட்ட அல்லது முழுகின) பத்மாபதே:- லக்ஷ்மீபதிக்கு, ப்ரஹஸநோசிதம்-சிரிப்புக்கு இடமான, மாம்-என்னை, ஆத்ரியேதா:- நீ ஆதரிக்கவேணும் (அநாதரவு செய்யக்கூடாது)

“அம்மா தயையே! உன்னுடைய மஹிமையாகிற பெருங்கடலில் வால்மீகி முதலிய பெரியோரும் இறங்கத் துணியாமல் கேவலம் கரையிலேயே நிற்பவரென்று சொல்ல வேணும். அப்படிக்கிருக்க, அந்த மஹா ஸமுத்திரத்தில் இறங்கி, இறங்கின க்ஷணமே முழுகி தரையை எட்ட முடியாமல் உடனே வெளிக்கிளம்பி மேலே மிதக்குமென்னைப் பார்த்து பிராட்டியோடு கூடிய ஸ்ரீநிவாஸன் சிரிக்கத் தக்கதாயிருக்கிறது. அவர்கள் சிரிப்புக்குப்பாத்திரமான என்னை நீ ஆதரிக்கவேணும்.”

(தாத்பர்யம்) பெருமாள் தயாஸமுத்ரம். தயை ஓரெல்லையில்லாத ஸமுத்ரம். தயையின் மஹிமை ஓர் மஹாஸமுத்ரம். வால்மீகி முதலிய ப்ரக்ருஷ்டமான புத்தியையுடைய பெரியோரும் அந்த ஸமுத்ரத்தில் இறங்கப்பயந்து, இதின் ஆழத்தை நம்மால் காண முடியாதென்று அறிந்து, இறங்காமல் கரையிலேயே நிற்பவராயிருக்கிறரென்று சொல்ல வேண்டியிருக்கிறது. ‘காகாஸுரனைக் கிருபையால் காப்பாற்றினர்’ என்று உன் பேரைச் சொல்லுகிறர். அதோடு நின்றுவிடுகிறர். உன் மஹிமை வாக்குக்கு எட்டாதென்று அதன் வர்ணனத்திலிறங்க பயந்தவர்போலிருக்கிறர்,

இளங்கன்று பயமறியாது. பாலனாகிய நான் உன் மஹிமை ஸமுத்ரத்தின் ஆழத்தைக் கண்டுபிடித்துத் தரைவரையிலும் போய் மேலே வரலாமென்று ஸாஹஸிகமாக 'அபிஷ்டெளமி' என்று இறங்கினேன். ஆழம் கண்டுபிடிக்கலாமென்று முழுகிறதும் தரைவரையிலும் போவதற்கு அடியோடு இல்லாமல், துளி முழுகினதும் மேலே அலைகளால் தள்ளப்பட்டு மிதப்பதுமாயிருந்தேன். இப்படி அறியாத்தனத்தால் திண்டாடிக்கொண்டிருக்கும் என்னைப் பார்த்து திவ்யதம்பதிகள் பரிஹஸித்துச் சிரிக்க இடமேற்பட்டது; அவர்கள் பரிஹாசமாய்ச் சிரித்தாலும் நீ என்னைக் கைவிடாமல் ஆதரிக்கவேணும், காக்கை முழுக்கைப்போல் முழுகி முழுகி உடனே எழுந்து மிதக்கும்படியிருந்தது. கொஞ்சமேனும் அடியிற்போக இயலவில்லை, 9-வது ச்லோகத்தில் முதல் முதலில் பெருமாளை வர்ணிக்கையில் வேங்கடத்தில் தடஸ்தராயிருப்பவருக்குப் பெருமாள் ஸ்வயம் வ்யக்தமாக ஸேவை ஸாதிக்கிறாரென்றார். 'விக்ஞாதம் அவிஜாநதாம்' என்றபடி 'அறியோம்' என்று நினைப்பவரால் 'அறியப்பட்டது' ஆகும். 'நம்மால் அறிய இயலாது' என்று ஆகிஞ்சந்யமுடையார்க்கு 'தம் ஸ்வரூபத்தைத் தாமே காட்டும்'. பயந்து தடஸ்தராயிருப்பவர் அறிவார். ஸாஹஸமாய் துணிந்து இறங்குகிறவர் அறியமாட்டார். முதலில் 'தடஸ்தர் ஸேவை காண்பர்' என்றபடி இங்கும் முடிவில் 'ப்ராசேதஸர் முதலிய பயந்த தடஸ்தர் நன்றாய்க் காணப்பெறுவர், பஹுமானம் பெறுவர், நான் பரிஹாஸத்தைப் பெறுகிறேன்' என்கிறார். (103)

वेदान्तदेशिकपदे विनिवेश्य बालं
देवो दयाशतकमेतदवादयन्माम् ।
वैहारिकेण विधिना समये गृहीतं
वीणाविशेषमिव वेङ्कटशैलनाथः ॥ १०४ ॥

**வேதாந்ததேசிகபதே விநிவேச்ய பாலம்**
**தேவோ தயாசதகமேததவாதயந் மாம் |**

வைஹாரிகேண விதிநா ஸமயே க்ருஹீதம்
வீணாவிசேஷமிவ வேங்கடசைலநாத: ॥

(பதவுரை) வேங்கடசைலநாத:–வேங்கடமலை அதிபதியாகிய, தேவ:- விளையாடும் ஸ்வபாவத்தை உடைய தேவன் பாலம்-சிறுவனாகிய என்னை வேதாந்த தேசிகபதே- வேதாந்தாசார்யனென்னும் ஓர் பீடத்தில், விநிவேச்ய-ஏற்றி விட்டு, வைஹாரிகேண – விளையாட்டான, விதிநா – ஓர் முறையாலே, ஸமயே - ஓர் ஸந்தர்ப்பத்தில், க்ருஹீதம் – கையிலெடுத்துக்கொள்ளப்பட்ட, வீணாவிசேஷமிவ – ஒரு விதமான வீணையைப்போல, ஏதத் – இந்த, தயாசதகம் – 'தயா நூறு' என்னும் ஸ்தோத்ரத்தை, மாம் – என்னை, அவாதயத் – பாடச்செய்தார் (படிக்கச்செய்தார்.)

"விளையாடும் ஸ்வபாவமுடைய வேங்கடமலையதிபதி தேவன் பாலனாகிய என்னை, (அறியாத பிள்ளையாகிய தூப்புல் புள்ளையை) வேதாந்தாசார்யனென்னும் ஆசிரிய பீடத்தில் ஏற்றிவைத்து, விநோத முறையில் வீணைக் கட்டையை ஓர் ஸமயத்தில் கையில் எடுத்துக்கொள்ளுவதைப்போல் என்னை (என் முகத்தை) ஓர் உபகரணமாக வாத்யம்போல் வைத்துக்கொண்டு இந்த தயாநூற்றையும் வாசிக்கும்படி செய்வித்தார்."

(தாத்பர்யம்) உன்னைத் துதிக்கும் ஸாஹஸத்தில் நான் ஆழந்தெரியாமலிறங்கி சிரிப்புக்கு இடமானேன் என்றேன். தப்பச்சொன்னேன். இத்துதி பாடினது நானன்று ஓர் அசேதநமான வாத்யத்தைக்கொண்டு தம்மிஷ்டமான பத்யங்களை நன்றாகப் பேசும்படி (பாடும்படி) செய்வதுபோல், திருவேங்கடமுடையானென்னை வீணைக்கட்டையைப்போல ஓர் வாத்யமாகக்கொண்டு தம்முடைய ஸ்வந்த ஸாஹித்தியமான இந்நூறு பத்யங்களையும் பாடவைத்தார். இந்நூறு ச்லோகங்களும் வீணையில் பாடவேண்டிய பத்யங்கள். 107-ம் ச்லோகத்தில் இவையெல்லாம் 'பத்யங்கள்' என்று ஸாதிக்கிறார். 'ம்ருதங்கம்' என்பது ஓர் சிறு தவுலுக்குப்

பெயர். அது 'மண்ணுடம்பு' அதுபோல் என் மண்ணுடம்பும் ஓர் வாத்ய விசேஷமாயிற்று. வீணை ம்ருதங்கம் முதலிய வாத்யங்கள் அழகாய் வாசித்தால், அவையெல்லாம் வாசிப்பவன் பெருமை, வாதகன் பெருமை. அசேதனமான வாத்யத்தின் பெருமையன்று, அப்பெருமையில் வாத்யத்திற்குப் பாகமேயில்லை. ஆனால் வாத்யம் அழகாக வாசிப்பதாகப் பேச்சுமட்டும் உண்டு. நான் அசேதநதுல்யன். நான் ப்ரயோஜ்யகர்த்தா; ஹேதுகர்த்தாவல்ல. 'தம்மைத்தாமே கவிபாடினது' என்று சொல்லக்கூடிய ஆத்மஸ்துதிப் பேச்சிற்குக்கூட இங்கே இடமில்லை. உன்னை அல்லவோ பாடினார். இது ஸ்ரீநிவாஸ சதகமல்ல, தயா சதகம். ஆகையால் ஸங்கோசமில்லாமலே மனப்போக்குக்குப் பூர்ண அவகாசம் கொடுத்து நிரங்குசமாய்ப் பாடினார். 'புராணகவி' என்று வேதாந்தம் கொண்டாடும் 'ப்ரதம கவி' ப்ரஹ்மாவுக்கும் வேதாந்தோபதேசஞ் செய்த ஆதிகுரு, அவரே முதல் வேதாசார்யன், முதல் வேதாந்தாசார்யன், ஆதிகவி வால்மீகிக்கும் முன் கவி. கீதை பாடியகவி 'வேதாந்தம் செய்தவனும் வேதமறிந்தவனும் நானே' என்றங்கே பாடியவர். அந்த ஆதிவேதாந்த தேசிகர் தூப்புல் பிள்ளையென்னும் ஓர் பிள்ளையைத்தூக்கித் தாமும் யதிபதி யாமுனர் முதலிய பெரியோரும் அலங்கரித்த ஆசிரிய பீடத்தில் உட்கார்த்திவைத்துவிட்டார். மூன்றாவது பாதத்திலுள்ளது முழுவதையும் 'என்னை கிரஹித்துப் பலவந்தமாகத் தூக்கித் தம்முடைய ஓர் விசித்ர விநோத வியாபார முறைபாக ஓர் பெரிய பீடத்தில் அமர்த்திவைத்து விட்டு' என்று 'பாலனாகிய என்னை' என்பதோடும் சேர்த்து அந்வயித்துக்கொள்ளலாம். 'பாலம்' என்பதால் 'என் ஆசார்ய்ப்ராசார்யர்கள் 'ஸ்யாதஸௌ' என்று என்னை 'ஆசார்யாணாம் அஸாவஸௌ' என்று வேதமோதிய, ஆசார்ய பரம்பராபீடத்தில் வீற்றிருப்பானாக' என்று என் குழந்தைப் பருவத்தில் என்னை அநுக்ரஹித்த பொழுதே அவர்களநுக்ரஹத்தை ஸத்யமாக்க, உடனே தத்க்ஷணமே

(நான் பாலனுயிருக்கையிலேயே) என்னை இப்பதத்தில் பிடித்து வைத்துவிட்டார் என்பது ஸூசிக்கப்படுகிறது. ருஷிகள் வாக்கு அவர்கள் திருவாக்கிலிருந்து வெளிவரும் க்ஷணத்திலேயே அதன் பொருளும் ஓடிவந்து அதோடுகூடி அந்த ஆசீர்வாதத்தை ஸத்யமாக்கு மென்றுர் பவபூதிகவி. தாமொரு விளையாட்டாக அகிஞ்சநனை என்னை ஆசிரிய பீடத்தில் உட்கார்த்தி வைத்துவிட்டபடியால், அதை உண்மையாக்க வேண்டிய சுமை அவர் தலையிலேறிவிட்டது: என்னை வேதாந்தாசார்ய பட்டத்தில் ஏற்றிவைத்து விட்டதை உண்மையாக்க என்ன செய்யலாம் என்று நன்கு ஆலோசித்து, உன்னைப்பற்றி இந்நூறு பத்யங்களையும் என்முகமாகத் தாமே பாடி, " அப்பா அர்ஜுனு எழுந்திராய், வில்லைக் கையிலெடு, அக்ஷௌஹிணீ ஸைந்யங்களையும் அநேக மஹாரதர்களையும் நீயே ஜயித்தாயென்ற யசஸை நீயே அடை, நீ செய்யவேண்டிய ஜயத்தை நான் முன்பே செய்துவிட்டேன், நீ நிமித்தமாத்திரமாகக் கடவாய் " என்று விச்வரூபத்தோடு பேசியபடி நான் ஓர் நிமித்தமாத்திரமாக இருந்தும், இவ்வருமபெரும் சதகத்தின் காத்தாவென்ற யசஸை எனக்கு அளித்து, அப்பட்டத்திற்கு அர்ஹனென்று என்னை உலகம் மெச்சச் செய்கிருர். நிமித்த மாத்ரமான எனக்கு (மந்தனுக்கு) கவியசோலாபத்தை அளிக்கிருர். இந்த சதகம ஆதிவேதாந்த தேசிகரொருவருக்குத்தான் சக்யம். அவரால் விளையாட்டுக்காக அப்பீடத்தில் எம்மாசார்யப்ராசார்யாசீர்வாதத்தை ஸத்யமாகச் செய்ய உட்கார்த்திவைக்கப்பட்ட பிள்ளை செய்ததென்று நினையாதே. மஹிஷியான உன்னைத் தாம் நேரில் பாட வெட்கப்பட்டு, என்னை வ்யாஜமாகக்கொண்டு, என் முகமாய்ப்பாடினுர்: மலையரசர் வீணை முதலிய வாத்ய வாதனத்தில் ரஸிகர்; ஸங்கீதத்தில் நிபுணர்; பனிமலைத் தேவர் கானரஸிகராய்க் கின்னர ஸ்த்ரீகளின உச்சகானத்திற் கொத்து மூங்கில குழல் வாத்யம் வாசிப்பதாகக் காளிதாஸர் வர்ணித்தார். 'ஸமயே' என்பதற்கு 'ஒன்றுமறியாத

பாலனே நூறு பாட்டுக்கள் பாடச்செய்கிறேன்' என்று விளையாட்டுப் பந்தயம் போட்டுக்கொண்டு பாடிவைத்தார் என்றும் பொருள் கொள்ளலாம். (104)

अनवधिमधिकृत्य श्रीनिवासानुकम्पा-
मवितथविषयत्वाद्विश्वमव्रीडयन्ती ।
विविधकुशलनीवी वेङ्कटेशप्रसूता
स्तुतिरियमनवद्या शोभते सत्त्वभाजाम् ॥ १०५ ॥

அநவதிமதிக்ருத்ய ஸ்ரீநிவாஸாநுகம்பாம்
அவிததவிஷயத்வாத் விச்வமவ்ரீடயந்தீ ।
விவிதகுசலநீவீ வேங்கடேச ப்ரஸூதா
ஸ்துதிரியமநவத்யா சோபதே ஸத்த்வபாஜாம் ॥

(பதவுரை) அநவதிம்-எல்லையற்ற, ஸ்ரீநிவாஸாநுகம்பாம் ஸ்ரீநிவாஸனின் தயையை. அதிக்ருத்ய- விஷயமாகக் கொண்டு (குறித்து) வெங்கடேசப்ரஸூதா-வேங்கடேசனிடம் பிறந்ததும், (வேங்கடேசன் பெற்றதும்) அவிதத விஷயத்வாத்-சொன்ன விஷயங்கள் பொய்யல்லாமல் ஸத்ய மானதால், விச்வம்-எல்லோருக்கும் (ஒருவருக்கும்) அவ்ரீடயந்தீ-வெட்கமுண்டாக்காததும், விவிதகுசலநீவீ-ஸகல விதமான க்ஷேமங்களுக்கும் மூலதன நிதியாயும், அநவத்யா- தோஷமற்றதுமான, இயம்-இந்த, ஸ்துதி:-துதி, ஸத்வ பாஜாம்-ஸத்வகுணமுள்ள ஞானவான்களுக்கு. சோபதே- நன்றென விளங்கும்.

"அளவிலடங்காத ஸ்ரீநிவாஸதயையைக் குறித்து வேங்கடேசன் பெற்றதும், துதிசெய்த பேச்சுக்கள் பொய் அல்லாததால் ஒருவரையும் வெட்கப்படச் செய்யாததும், ஸகல க்ஷேமங்களையுமளிக்கும் நிதியாயும், நிர்தோஷமாயுமுள்ள இந்தத் துதி ஸாத்விகர்களுக்கு அழகென சோபிக்கும்."

(தாத்பர்யம்) ஸாஹஸத்தில் தானிறங்கிப் பாடிய ஸ்துதியென்ருர் 102ல். ஸ்ரீநிவாஸன் பாடின கவியென்ருர் முன் சுலோகத்தில். வேதாந்தாசார்யரும் கவிதார்க்கிக ஸிம்ஹருமாயிருப்பவர் இப்படி முன்பின் விரோதம் பேசலாமோ? இரண்டிலொரு விஷயம் பொய்யாகாதோ? ஆகாது. இருவரும் உண்மையில் கர்த்தாக்களே. தேவன் ப்ரயோஜககர்த்தா, ஹேதுகர்த்தா; நான் ப்ரயோஜ்ய கர்த்தா நிமித்தமாத்ரம்; அவர் தான் முக்ய கர்த்தா. இப்படி இரண்டு கர்த்தாக்களும் சேர்ந்து செய்வதுதானே வேதாந்தங்களின் தீர்மானம். இப்படி இரண்டு பேச்சும் பேசாவிடில், வேதாந்தாசார்யனென்பது அடியோடு பொய்யாகுமே. 'ஏஷ ஹ்யேவ ஸாதுகர்ம காரயதி' 'இத் தேவனே நற்கர்மத்தைச் செய்விக்கிருன்' என்கிற சுருதிக்கு விஷயமான ஓர் விசேஷ அதிகாரியாகவும் கொள்ளலாம். எல்லோருக்கும் பொதுவான பராயத்தகர்த்ருத்வத்தைக் கொண்டும் பேசலாம். எல்லாக் கர்த்ருத்வத்தையும் தேவனிடம் தியாகம் செய்யுமநுஸந்தானத்தைக்கொண்டும் பேசலாம். இருவரும் கர்த்தாக்களென்பது பொய்யாகாது. இந்தத் துதியின் ஆசிரியர் 'வேங்கடேசர்' என்று இருவருக்கும் பொதுப் பெயரை அழகாகக் குறிக்கிருர். பெருமாளும் வேங்கடேசர், இவரும் வேங்கடேசர், வேங்கடேச நாமமும் அவரதே. அவர் தாஸரான எனக்கு அவர் பெயர் இரவல்தான். துதியும பெயரிரவல் வ்யாபாரம் என்று வேடிக்கையாக ஸூசனம். அவர் பெயர் எனக்கு ரல், அவர் காவ்யத்தின் பெயரும் (யசஸும்) எனக்கு இரவல். 'வேங்கடேசன் பெற்றது'. ப்ரஸூதா என்பதற்குப் 'பெற்றது' என்று பொருள். என்முகமாய் வேங்கடேசரால் வெளிப்படுத்தியது. அவசமாக வெளிப் பட்டது. வெறும் குழந்தைக்குத் தாயை 'கர்த்ரீ—உண்டு பண்ணுபவள்' என்று சொல்வரோ; வேங்கடேசப் பெருமாள்தானே அக்குழந்தைக்குக் கர்த்தா. உச்சாரணம் பண்ணின ச்ரமம்தானே எனக்கு 'துதி' என்பதற்கு 'நன்ருய்

உண்மையாயுள்ள குணங்களை உள்ளபடி வர்ணிப்பது' இலக்கணமென்று ஆழ்வான் ஸாதித்தார். 'குணியினிடம் உள்ள குணத்தைப் பேசுவது' துதியென்பர். பொய்யாகத் துதித்தால், துதிக்கப்படுபவருக்கும் வெட்கமுண்டாகும், துதிசெய்பவருக்கும் வெட்கமுண்டாகும், கேட்பவருக்கும் வெட்கமுண்டாகும். இப்படி எல்லோரையும் பொய் ஸ்தோத்திரம் வெட்கப்படச்செய்யும். 'விச்வம்' என்பதற்கு 'எல்லோரையும்' என்று பொருள். இத்துதி விஷயங்கள் உண்மையானதால் ஒருவரையும் வெட்கப்படுத்தவிடமில்லை. வேங்கடேசன் பெற்ற கன்யையான இந்த ஸ்துதியால் பெற்றோர் குலத்திற்கும் கீர்த்தியே பெருகும். இக்கன்யையை யிட்டு ஒருவருக்கும் எக்காலத்திலும் வெட்கப்பட நேராது. பெற்ற பெண்ணிடத்தில்போல், தாம் பெற்ற இந்த ஸ்துதியில் தமக்கு அபிமானமென்பதையும், 'பெற்ற' என்பதால் ஸூசிக்கிறார். (105)

शतकमिदमुदारं सम्यगभ्यस्यमाना-
न्वृषगिरिमधिरुह्य व्यक्तमालोकयन्ती ।
अनितरशरणानामाधिराज्येऽभिषिञ्चे-
च्छमितविमतपक्षा शार्ङ्गधन्वानुकम्पा ॥ १०६ ॥

சதகமிதமுதாரம் ஸம்யகப்யஸ்யமாநாந்
வ்ருஷகிரிமதிருஹ்ய வ்யக்தமாலோகயந்தீ ।
அநிதரசரணாநாமாதிராஜ்யேऽபிஷிஞ்சேச்
சமிதவிமதபக்ஷா சார்ங்கதந்வாநுகம்பா ॥

(பதவுரை) வ்ருஷகிரிமதிருஹ்ய — வேங்கடமலையிலேறி, உதாரம் — குணங்களால் பூர்ணமானதும், கோருவதை யெல்லாம் வழங்குவதுமான, இதம் சதகம் — இந்த தயாசதக ஸ்தோத்ரத்தை, ஸம்யக் — நன்றாக, அப்யஸ்யமாநாந் — திரும்பவும் திரும்பவும் அப்யஸிப்பவர்களை (படிப்பவரை) வ்யக்தம் — நன்றாக, ஆலோகயந்தீ — பார்க்கிறவளாய், சார்ங்கதன்வாநுகம்பா — சார்ங்கம் என்னும்

ஸ்ரீநிவாஸனுடைய தயை, சமிதவிமதபக்ஷா – விரோதி கக்ஷிகளையெல்லாம் சாந்தப்படுத்தி, அகிஞ்சநசரணாநாம் – வேறு கதியற்ற பேதை (அகிஞ்சனர்) களுக்குரிய, ஆதிராஜ்யே – உன்னத ராஜ பதவியில், அபிஷிஞ்சேத் – அபிஷேகம் செய்வாள்.

"அபேக்ஷித்ததையெல்லாம் வள்ளலாய் வழங்கும் இந்த நூறு பாசுரமடங்கிய துதியை நன்றாய்ப் பாராயணமாகப் படிப்பவர்களை வேங்கடமலை மேலேறி நன்றாகப் பார்த்துக் கொண்டிருக்கும் ஸ்ரீநிவாஸனுடைய தயையானவள் விரோதக் கக்ஷிகளையெல்லாம் சமனம் செய்து (அடக்கி) வேறு கதியில்லாத அகிஞ்சனனுக்கு ஏற்ற அதிராஜ பட்டத்தில் (அகிஞ்சன சக்ரவர்த்திப் பட்டத்தில்) அபிஷேகம் செய்வாள்"

(தாத்பர்யம்) மலைப்பெருமானுடைய தயையைத் துதி செய்வதில் இது ஒரு ஸௌகர்யம். கீழேயுள்ள நாடுகளில் இத்துதியைப் படிப்பவர்களையெல்லாம் மேலேயிருந்து நன்றாகக் கவனித்துப்பார்க்க ஸௌகர்யமுளது. இந்த சதகம் உதாரம். காவ்ய குணங்களாலும், கம்பீரமான பொருள்களாலும் நிரம்பினது. கோரினதையெல்லாம் உதாரமாக வழங்கக் கூடியது. தயை எப்படி உதாரையோ, அப்படியே அவள் விஷயமான தோத்திரமும் உதாரம். 'இந்தத்துதியை அப்யாஸம் பண்ணுகிறவர்கள்,' அப்யாஸம் என்பது பலமுறை படிப்பதைச் சொல்லும். 'குணம்' என்பதற்கு 'குண்யதே' பலகால் சொல்லிச் சொல்லிப் புகழப்படுகிறது என்பது பொருள். ஸௌசீல்ய குணத்தின் விஷயத்தில் அப்படிப் பொருளுரைக்கப்பட்டது. தயாகுணத்திற்கும் அது ஏற்கும். தயா குணத்திற்குப் பொருந்துவது தயையின் துதிக்கும் பொருந்தும். தயையைத் தவிர வேறு கதியில்லை என்றிருக்கும் அகிஞ்சனர்களுக்குச் சக்ரவர்த்தியாக (தாழ்ந்தவரிலும் கடையோனாகத் தாழ்ந்தவனென்னும் உயர்த்தியுடைய ஸிம்ஹாஸன பதத்தில்)

அபிஷேகம் செய்துவைப்பாள். கிங்கரத்வா திராஜ்யமே நமக்கு நிகரற்ற ராஜபதம். அந்தப் பதத்தில் நமக்கு அபிஷேகம். பெருமாளை அதிபதியாக அடைந்து அநந்யாதிபதிகளாகிறோம். விமதபக்ஷத்தை யெல்லாம் தயை அடக்கிவிட்டுக் குழந்தைகளாகிய நமக்கு அபிஷேகம் செய்கிறாள். 'பாலம்' என்பதை இங்கேயும் நினைக்க வேண்டும். பாலப் பர்வத்தில் இத்துதியைப் பெரியோர்களிடம் ஸந்தை சொல்லி அப்யாஸம் செய்வர். 'விமதபக்ஷம்' என்பது 'தண்டிக்கவேணுமென்னும்' எதிர்பக்ஷி. மற்றக்ஷணங்கள் செய்யும் எதிர்வாதங்களைத் தக்கபடி ப்ரதிவதனம் செய்து சமனப்படுத்தி நம்முடைய விரோதிகளான பாபங்களைப் போக்கி, 'சார்ங்க தந்வா' சார்ங்கமென்னும் வில்லேந்தினவன் நம்மை ஜயித்து வசப்படுத்தத் திருமலையில் வில்லுங் கையுமாய் நின்றுகொண்டு தயாகவசத்தைத் தரித்துக் கொண்டு ஸமயம் பார்த்துக் கொண்டிருக்கிறான். என்று 28-ம் ச்லோகத்தில் ஸாதித்தார். அங்கே 'சார்ங்கீ' என்று பெருமாளைச் சார்ங்கத்தை ஏந்தினவராக வர்ணித்தார். இங்கே பெருமாளுக்கு நம்மை வசப்படுத்துவதாகிய ஜயம் ஸித்தித்ததால் பெருமாளைச் 'சார்ங்கதந்வா' என்று வர்ணிக்கிறார். பெருமாளுக்கு மனோரதம் ஸித்தித்து ஜயம் கிடைத்தது. ஆனாலிங்கே அபிஷேகம், துதியைப்படித்து ஆகிஞ்சந்யத்தில் ரஸமுடைய பேதை ப்ரஜைகளுக்குத் தயாதேவியால் செய்விக்கப்படுகிறது. ஆகாசகங்கை முதலிய மலை அருவியின் தீர்த்தங்களைக் கொண்டு அபிஷேகம் செய்ய வும் ஸௌகர்யம்; கீழேயிருப்பவர்கள் முடியில் உயரத்திலிருந்து கங்கையை வார்க்கலாம். திவ்ய தம்பதிகளுக்கு அபிஷேகமில்லை; தயாதேவிக்கு அபிஷேகமில்லை; வேதாந்ததேசிக பதத்தில் ஏற்றிவைக்கப்பட்ட கவிக்கு அபிஷேகமில்லை; துதியைப் படிக்கும் அகிஞ்சனர்களுக்கு அபிஷேகம். மனப்பாடம் ஆவதற்கு முன்பே ஸந்தை சொல்லும்பொழுதே அபிஷேகமாய்விடும். 'அப்யாஸம்'

என்பது இரண்டு மூன்று ஆவருத்தி செய்யும் ஸங்கையை யும் சொல்லுர். (106)

विश्वानुग्रहमातरं व्यतिषजत्स्वर्गापवर्गां सुधा-
सध्रीचीमिति वेङ्कटेश्वरकविर्भक्त्या दयामस्तुत ।
पद्यानामिह यद्विधेयभगवत्संकल्पकल्पद्रुमात्
झंझामारुतधूतचूतनयतः सांपातिकोऽयं क्रमः ॥ १०७ ॥

**விச்வாநுக்ரஹமாதரம் வ்யதிஷஜத்ஸ்வர்காபவர்காம் ஸுதா-**
**ஸத்ரீசீமிதி வேங்கடேச்வரகவிர் பக்த்யா தயாமஸ்துத ।**
**பத்யாநாமிஹ யத்விதேயபகவத்ஸங்கல்பகல்பத்ருமாத்**
**ஜஞ்ஜாமாருததூதசூதநயத: ஸாம்பாதிகோzயம் க்ரம: ॥**

(பதவுரை) விச்வாநுக்ரஹமாதரம் — ஸகல அநுக்ர ஹங்களையும் அளிக்கும் தாயாயிருப்பவளும், வ்யதிஷஜத் ஸ்வர்காபவர்காம் — ஸ்வர்க்க மோக்ஷங்களைச் சேர்ப்பிப்ப வ_ம், ஸுதாஸத்ரீசீம் — அம்ருதம் போன்றவளுமான, தயாம் — தயையை, வேங்கடேச்வரகவி: — வேங்கடேச்வர னென்னும் கவி, பக்த்யா — பக்தியினல், இதி — இப்படி, அஸ்துத — ஸ்துதி செய்தார். இஹ — இங்கே (இத்துதியில்) யத் விதேய — எந்த தயாதேவிக்கு இட்டது சட்டமான, பகவத்ஸங்கல்ப — ஸ்ரீநிவாஸனின் ஸங்கல்பம் என்கிற, கல்ப த்ருமாத் — கல்பக வ்ருக்ஷத்திலிருந்து, ஜஞ்ஜாமாருததூத சூதநயத: — பெருங் காற்றினல் மாமரத்திலிருந்து (ஒரே நிமிஷத்தில் நூற்றுக்கணக்கான) பழங்கள் உதிர்க்கப் படுவதுபோல, பத்யாநாம் — சுலோகங்களுடைய, அயம் — இந்த, ஸாம்பாதிக: — ஒரே கும்பலாய் புத்தியில் தோன்றிய, க்ரம: — ஓர் முறையானது ஏற்பட்டது.

"எல்லா அனுக்ரஹங்களையும் விச்வத்திற்கெல்லாம் அளிக்கும் தாயாயும், ஸ்வர்க மோக்ஷப் பயன்களைச் சேர்க்கு மவளும், அம்ருதத்தைப்போல் இனியவளுமான தயா தேவியை வேங்கடேசுவர கவி பக்தியோடு இப்படித் துதித்தார். துதிக்கப்பட்ட அந்த தயாதேவிக்கு இட்டது

சட்டமான பகவத்ஸங்கல்பமென்னும் கல்பவ்ருக்ஷத்தி லிருந்து என்னுடைய புத்தியில் இந்நூறு பத்யங்களும் ஏக காலத்தில் பெருங் காற்றில் அசையும் மாமரத்திலிருந்து பழங்கள் விழுவதுபோல் இறங்கிவிட்டன. (தோன்றின உதிர்ந்தன)".

(தாத்பர்யம்) தயைவிஷயமான இந்த சதகம் உதார மாகப்பயன்களை வழங்குமென்றார். எந்தப் பலமும் பகவத் ஸங்கல்பத்தால்தான் கிடைக்குமென்பர். எப்படி தயை வழங்கக்கூடும்? பகவத் ஸங்கல்பம் கல்பவ்ருக்ஷமென்பது உண்மையே. ஆனால், அந்த ஸங்கல்பம் தயைக்கு அதீன மானது, தயாதேவி ப்ரேரணம் செய்கிறபடி ஸங்கல்பம் வழங்குகிறது. ஏக காலத்தில் நூற்றுக்கணக்காகப் பலன்களைக் கையில் சேர்க்கும் இந்தத் துதியிலுள்ள பத்யங்கள், என் புத்தியில் ஏக காலத்தில் ஒரு நூற்றுக் கணக்காக இறங்கின. பகவத் ஸங்கல்பமென்னும் கல்பக வ்ருக்ஷத்திலிருந்து உதிர்ந்தன. இந்தப் பத்யங்கள் என் புத்தியில் தோன்றும்படி அநுக்ரஹம் ஏற்பட்டதிலும் உயர்ந்த பலன் எனக்கு என்ன உளது? என் புத்தியால் அனந்த அர்த்தங்களை ஆலோசித்தறிந்து கவனம் செய்தா லல்லவோ ஒன்றுக்குப் பின்னொன்ருக ரசனை செய்ய முடியும். தயையென்னும் ஓர் பெருங்காற்றடித்து பகவத் சங்கல்ப மெனும் கல்பவ்ருக்ஷத்திலிருந்து இந்த நூறு பத்யங்களையும் என் புத்திக்குள் தள்ளிவிட்டது. (உதிக்கச்செய்தது) அப்படி ஒரே காலத்தில் தோன்றுகையிலும், இந்த வரிசை க்ரமப்படிக்குள்ள தொடர்ச்சியாகவே உதித்தது. வேத மென்னும் கல்பவ்ருக்ஷத்திலிருந்து பாகவதமென்னும் ரஸப் பழம் விழுந்ததுபோல் என் நாவிற்கு இந்நூறு ரஸப்பழங் களும் அணுகின. 'பக்தியோடே' என்பதால், இந்தப் பத்யங்களை உச்சரிப்பதில் பக்திமட்டும் என்னுடையது என்று ஸூசிக்கிறார். பாடும் கவியின் பக்தியென்னும் ரஸம் இங்கே அம்ருத த்ரவம். அடுத்த ச்லோகத்தில் மலை யுச்சியிலிருந்து கீழே விழும் மலையருவியாகத் தயையை

வர்ணிக்கிறார். இங்கே தயையே ஜஞ்ஜாமாருதமென்று வர்ணிக்கிறார். (107)

कामं सन्तु मिथः करम्बितगुणावद्यानि पद्यानि नः
कस्यास्मिञ्छतके सदम्बुकतके दोषश्रुतिं क्षाम्यति ।
निष्प्रत्यूहवृषाद्रिनिर्झरझरत्कारच्छलेनोच्चलन्
दीनालम्बनदिव्यदम्पतिदयाकल्लोलकोलाहलः ॥ १०८ ॥

காமம் ஸந்து மிதஃ கரம்பிதகுணாவத்யாநி பத்யாநி நஃ
கஸ்யாஸ்மிஞ் சதகே ஸதம்புகதகே தோஷச்ருதிம் க்ஷாம்யதி ।
நிஷ்ப்ரத்யூஹவ்ருஷாத்ரிநிர்ஜரஜரத்காரச்சலேநோச்சலந்
தீநாலம்பநதிவ்ய தம்பதிதயா கல்லோலகோலாஹலஃ ॥

(பதவுரை) நஃ - எங்களுடைய, பத்யாநி - ச்லோகங்கள், மிதஃ கரம்பிதகுணாவத்யாநி-குணம் தோஷம் ஒன்றோடு ஒன்று கலந்தனவாக, காமம் ஸந்து-வேண்டியமட்டுமிருக்கட்டும். (என்ன குற்றம் இருந்தாலும்) நிஷ்ப்ரத்யூஹ-தட்டுத்தடங்கலில்லாமல், வ்ருஷாத்ரி-வேங்கடமலையினுடைய, நிர்ஜர - அருவியின், ஜரத்காரச்சலேந-விழும் இரைச்சலென்னும் வேஷத்தை வைத்துக்கொண்டு உச்சலந்-ஓடிவரும், தீநாலம்பந-அகிஞ்சனரான பேதைகளுக்குக் கதியான, திவ்யதம்பதி - ஈச்வரதம்பதிகளுடைய, தயா கல்லோலகோலாஹலஃ - தயையின் அலைகளின் கோலாஹல சப்தம், ஸதம்புகதகே - சுத்த ஜலம்போன்ற ஸத்துக்களின் மனதை சோதகமான தேத்தாங்கொட்டையைப் போல் சுத்தம் செய்யும், அஸ்மிந் சதகே - இந்த சதகத்தில் (நூறில்), கஸ்ய - எவனுடைய, தோஷச்ருதிம் - குற்றப் பேச்சு காதில் விழுவதை, க்ஷாம்யதி-பொறுக்கும்? யார் குற்றப்பேச்சைக் காதில் விழவொட்டும்?

"எங்களுடைய இந்தப் பிரபந்தங்கள் வேண்டிய மட்டும் குற்றம் கலந்தனவாகவேயிருந்தாலும் இருக்கட்டும் வேண்டியமட்டும் விமர்சக வித்வான்கள் பணிக்குச் சொல்லப்பார்க்கட்டும். ஸத்துக்கள் (மன

மாகிய) ஜலத்திற்குத் தேத்தாங்கொட்டை (கதகம்) போன்ற இந்த சதகவிஷயத்தில் எவர் குற்றப் பணிப்பு சப்தத்தை, பேதையர்க்கு ஆச்ரயமான திவ்யதம்பதி களுடைய தடுக்கமுடியாமல் அதிவேகமாக வேங்கட மலையி லிருந்து விழும் அருவிகளின் சாக்கைக்கொண்டு பேரிரைச் சலோடு ஓடிவரும் தயை யென்னும் மலையருவிகளின் கோலாஹல இரைச்சல் காதில் விழ இடங்கொடுக்கும்?"

(தாத்பர்யம்) 105-ல் இந்தத்துதி குற்றமற்றதென்றார். நீர் பெற்ற துதி உமக்குக் குற்றமில்லை என்று தோன்றி ளுலும், பராமர்சிக்கும் வித்வான்கள் இதில் குற்றமும் குணமும் கலந்திருக்குமென்பரே. இப்படி ஆக்ஷேபம் வர, வேண்டிய மட்டும் குற்றஞ்சொல்லப் பார்க்கட்டும். குற்றங் களைப்பேசட்டும். அவர்கள் குற்றப்பேச்சு ஒருவர் காதிலும் விழவொட்டாமல் திவ்யதம்பதியின் தயை மலைமேலிருந்து "சோ" என்று சப்தித்துக்கொண்டு குற்றம் பேசும் பண்டிதர் பேச்சை அமுக்கிவிடும். தயை அருவி மலையி லிருந்து விழும் கோலாஹல இரைச்சலில் இந்தக்குற்றச் சொல் அமுங்கிப்போகும். தயை விஷயமான துதியின் பேரில் குற்றச்சொல்லை திவ்ய தம்பதிகளும் பொறுக்க மாட்டார்கள். எல்லாக் கொடிய குற்றங்களையும் தயாதேவி பொறுத்துவிடுவாள். பொறுப்பிப்பாள். இந்த தோத் திரத்தின் விஷயத்தில் குற்றஞ் சொல்லுவதை மட்டும் பொறுக்கமாட்டாளென்பது வேடிக்கை. க்ஷமையே வடிவான தயையும் இத்துதியில் பிறர் குற்றச் சொல்லை க்ஷமிக்கமாட்டாள். ஆனால், தயையானபடியால், குற்றஞ் சொல்பவரை ஹிம்ஸிக்கமாட்டாள், தண்டிக்கமாட்டாள். அவர்கள் குற்றப்பேச்சை இன்னும் அதிகமாக இரைச்சல் போடுவதால் காதில் விழாமல் அமுக்கி விடுவாள். மலையருவிகள் மேலேயிருந்து கீழே விழுகின்றன என்ற சாக்கை வைத்துக்கொண்டு பேரிரைச்சலாகக் கோலா ஹலம் செய்து குற்ற சப்தத்தைக் காதில் விழாமல் மறையச் செய்வாள். குற்றஞ்சொல்லுகிற வித்வானும்

குணங்களும் குற்றங்களும் கலந்திருக்கின்றன என்று தூஷிப்பரே ஒழிய, குணமேயில்லை என்று தூஷிக்கத் துணியமாட்டார். 'பத்யங்களைப் பழித்தாலும்' என்பதற்கு 'ஒவ்வொரு பத்யமாக எல்லாப் பத்யங்களையும் குற்றமுள்ளதாகத் தூஷித்தாலும்' என்றும் பொருள் கொள்ளலாம். ஸ்ரீ பாகவதத்தில் 'ப்ரதிச்லோகமும் அபத்தமாயிருந்தாலும்' என்பதுபோல. இந்த சதகம் 'ஸதம்புகதகம்' என்பதில் மிக ரஸங்கள் உள. அழுக்குக் கலந்த ஜலத்தில் மண்ணை மட்டும் பிரித்துவிட்டு சுத்த ஜலத்தைத் தனிப்படுத்தும் சக்தியுடையது கதகம் என்னும் தேத்தாங்கொட்டை. ஸத் என்பவர் குணதோஷங்களைப் பகுத்தறியும் வித்வான். நல்லது பொல்லாததைத் தெளியப் பிரிக்கக்கூடியவர்கள் ஸத்துக்கள். அவர்களுடைய தெளிவான புத்தி (மனது) ஜலமாக வர்ணிக்கப்படுகிறது. ராமாயணத்தில் வால்மீகி ஆச்ரமத்தின் ஓரத்திலோடும் தமஸா நதியின் சுத்தமான தீர்த்தத்தை வர்ணிக்கையில் 'ஸத்தான மனுஷ்யர்களுடைய சுத்த மனதைப்போல அழகாயும், ப்ரஸந்நமான அம்புவாயும் (தெளிந்த சுத்த ஜலமாயும்) இருப்பதாக' வர்ணித்தார். அதைத் திருவுள்ளத்திற்கொண்டு, இங்கே வித்வான்களின் மனதை அம்புவாக (ஜலமாக) நிரூபிக்கிறார். குணதோஷங்களைப் பிரிக்கும் விஷயத்தில் அவர்களுக்குப் போதுமான புத்தித்தெளிவு இல்லாமலிருந்தாலும், அவர்கள் புத்தியைத் தெளியப்படுத்தும் இந்த சதகமாகிய கதகம். தோஷலேசமில்லாமல் 'சுத்தமான பத்யங்கள்' இப்படித் தான், இந்த கவனம் இருக்கவேண்டுமென்பதை அவர்களுக்குச் சிக்ஷித்துக் கொடுக்கும். இதிலிருந்து அந்த சோதகர்கள் மாசற்ற காவ்ய ரீதியைக் கற்றுக்கொள்ளவேணும். அவர்கள் புத்தியிலுள்ள காலுஷ்யத்தை (அறியாமையை)ப் போக்கும். அவர்கள் மனதாகிய நீரைச் சுத்தப்படுத்தும். சோதகர் மனதைத் தெளியச் செய்யும். இன்னமிரண்டு விதமான பொருள்களுமுண்டு. ஸத்துக்களாயிருப்பவர் மனதில் நாம் முன்செய்த கொடுவினைகளை யெல்லாம்

ஸ்ரீநிவாஸனுடைய தயை க்ஷமிக்குமோ என்ற சங்கை என்னும் காலுஷ்யமிருக்கலாம். ஸத்துக்களின் மனமென்னும் நீரிலுள்ள ஸந்தேஹமென்னும் காலுஷ்யத்தை எல்லாம் தயையின் எல்லையற்ற ப்ரபாவத்தை விளக்கும் இந்தத் தோத்திரம் தேத்தாங்கொட்டையைப் போல போக்கிச் சுத்தம் செய்து நிஸ்ஸம்சயமாக்கும். இது ஒரு பொருள். 'ஸதம்பு' என்பதற்கு நீர் இருப்பது நீருள்ளது என்று பொருள் கொள்ளலாம். வித்வான்கள் மனதில் 'ரஸம்' என்னும் ஜலம் கொஞ்சமேனுமில்லாமல் அடியோடு உலர்ந்த பங்கமாக (சேராக) இருந்தால், தேத்தாங்கொட்டை என்ன செய்யும்? ஜலமும் மண்ணும் கலந்திருந்தால் மண்ணைக் கீழே தள்ளி ஜலத்தைச் சுத்தமாகச் செய்யும். கொஞ்சமேனும் நீர் இல்லாமலிருந்தால் இந்தக் காவ்யமவர்களை எப்படி ஆராதிக்கச் செய்யும்? 'பங்கத்தைக் கதகம் எப்படித் தெளிவு படுத்தும், ஸந்தோஷப்படுத்தும்' என்றார் வாமனர் ரஸமுடைய ஸஹ்ருதயர்களைத்தான் காவ்யம் ரஜ்ஜிப்பிக்கும். 'நः' என்று மூன்று கர்த்தாக்களையும் கூட்டிக்கொண்டார். பெருமான் வேங்கடேசர், பெருமாள் ஸங்கல்பவ்ருக்ஷம், கவி வேங்கடேசர் ஆகிய மூவரையும் கர்த்தாக்களாகச் சேர்த்துக்கொண்டு 'எங்கள் சதகம்' என்றார். இந்தத் தோத்திரமும் தயாகல்லோலகோலாஹல மாகும். தயையின் அலைகளின் கோலாஹல சப்தமாகும். 'ஹயவதனஹேஷாஹலஹலம்' ஸ்வாமியின் கவிதைக்கு மூலம். மூலகாரணத்திலுள்ள ஹலஹலசப்தம் க்ரியமாண ஸ்தோத்திரத்தின் முடிவில் 'கோலாஹலம்' என்று கொஞ்சம் ஸாம்யத்தோடு அமைந்தது. (108)

**கவிதார்க்கிகஸிம்ஹாய கல்யாணகுணசாலிநே |**
**ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்தகுரவே நம: ||**

**தயாசதக வியாக்யாநம் முற்றும்.**

---